

## பதிப்புரை

நம் பழங்காலத் தமிழ்ச்சான்றோர் பாடித் தொகுத்துதவிய நூற் கருவூலச் செல்வங்களுள், பரிபாடலும் ஒன்றாகும்.

இது 'பரிபாடல்' என்னும் ஒருவகைப் பாவினால் இயன்றதாகலான், இப்பெயர் பெற்றது; திருக்குறள் என்பதுபோல.



இதற்கு இலக்கணங் கூறப்போந்த தொல்காப்பியனார்,

'பரிபா டல்லே தொகைநிலை வகையின்
இதுபா வென்னும் இயல்நெறி இன்றிப்
பொதுவாய் நிற்றற்கும் உரித்தென மொழிப'

என விளக்குவாராயினர்.

இப்பரிபாடல் எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றாக வமைந்தது. இதன் பொருட் சிறப்பாலும், நுண்மாண் நுழைபுலச் செம்மையாலும் ஆன்றோரால் 'ஓங்கு பரிபாடல்' என்னும் பாராட்டுப்பெற்றது.

இதன்கண் திருமால், செவ்வேள் ஆகிய தெய்வ வழிபாட்டுப் பாடல்களும், வையை, மதுரை ஆகிய இயற்கைக் காட்சிப் பாடல்களும் அமைந்துள்ளன. அவைகளில் தமிழ்மக்களின் பழக்க வழக்கங்களும் அறம், பொருள் இன்பம்வீடுபேற்றுக் கூறுபாடுகளும் இயற்கைக் காட்சியின் இயல்நலங்களும், காதற் காமச் சிறப்பும், வீரர் மேம்பாடும், அன்பும் பண்பும், ஆடலும் பாடலும், பிறவும் நெஞ்சை அள்ளும் நீர்மையவாகப் புலமைச் சான்றோர்களால் பொருள் பொதிய எடுத்துக்காட்டப் பெற்றுள்ளன.

அரிய கருத்துக்கள் நிறைந்த நற்றிணை நல்ல குறுந்தொகை முதலாயவற்றுக்கு ஏற்கெனவே மாநாடுகள் நடாத்தி, அவைகளின் வாயிலாக நல்லிசைப்புலமை வல்லுநர்களால் ஆற்றிய சொற்பொழிவுகளை எழுதி வாங்கி,

அவ்வவற்றின் பெயர்களால் இதுகாறும் எட்டு நூல்கள் வெளியிட்டுள்ளதைத் தமிழ்கூறு நல்லுலக நன்மக்கள் நன்கறிவர்.

அம்முறையைப் பின்பற்றி இந்நூலில் பொதிந்துள்ள அரிய கருத்து, உவமத்திறம், தமிழ்நாட்டின் பெருமை, திருமால் செவ்வேள் தெய்வப்பெருமை, உலகு புரந் தூட்டும் வையையென்னும் பொய்யாக் குலக்கொடியின் தண்மை வண்மை, பாண்டிவேந்தன் பண்பு, தீந்தமிழின் மணங்கமழும் சீர்சால் மதுரைமாநகர்ச் சிறப்பு, ஆடவர் பெண்டிர்களின் அன்பு பண்பு முதலிய பழந்தமி ழகத்தின், ஏனைய சிறப்பெல்லாவற்றையும் நம் தமிழ மக்கள் எளிதின் அறிந்து பயன்பெற விழைந்து, ஆ றமைந்த கல்வி கேள்விச் சான்றோர்களான புலமைமே மக்கள் ஐவர் சொற்பொழிவுகளை வாங்கித் தொகுத்து 'பரிபாடல் சொற்பொழிவுகள்' என்னும் பெயரால் வெ யிட்டுள்ளோம். அடுத்து எட்டுத்தொகை நூல்களி குறுகிய அடிகளில் பெருமைமிக்க 'ஐங்குறு நூற்றுச் சொ பொழிவுகள் என்னும் நூலும் விரைந்து வெளிவரும்.

இவ் வரிய பரிபாடல் சொற்பொழிவுகளை நிகழ்த் ஏற்றுக் கொண்டதோடு, நூலுருவாக ஆக்குதற்கு காலத்தே வரைந்துதவிய பேராசிரியர் ஐவர்கட்கும், இ சொற்பொழிவுகளை ஒன்பதாம் தமிழ்த் திருவிழாவி சிறந்த முறையில் நிகழ்த்த வாய்ப்பளித்துதவிய நெல் அருணகிரி இசைக்கழகத்தார்க்கும் எம் உளங்கனிந்த நன் என்றும் உரிமையாகும்.

இவைகளை நம் தமிழ்ப்பெருமக்கள் வாங்கிக்கற்று வான்கலைச்செல்வப் பேரறிவும், வரலாற்றுண்மை நுண் புலனும் பெற்று, வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து இன்புறுவார்களென நம்புகின்றோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்த

உ

# அணிந்துரை

எங்கள் அருணகிரி இசைக் கழகம் 1938 இல் தொடங்கியது. தமிழறிவையும் சமயவுணர்வையும் பாதுகாத்து வளர்ப்பது அதன் குறிக்கோள். இந்தக் குறிக்கோளை நிறைவேற்றும் முயற்சியிலே, கழக மேடையில் ஞாயிறு தோறும் ஆராய்ச்சி விரிவுரைகளுக்கு இடம் வகுத்தும், நூலரங்கு கவிமன்றங்களை நிறுவிப் புதிய நூல்களையும் கவிதைகளையும் வெளியிட்டும் வருகின்றது. நாடோடிப் பாடல்களுக்குப் புத்துயிர் தந்தும், நாடகங்கள் நடித்தும் இவ்வாறு முத்தமிழ்த் துறைகளிலும் முயன்று பணி செய்து வருகின்றது.

எங்கள் நான்காம் தமிழ்த் திருவிழாவிலே (26-1-50) ஒருநாள் சொற்பொழிவுகளைத் தொகுத்துப் புத்தகமாகத் 'தமிழ்க் கருவூலம்' என்று வெளியிட்டோம். 'மாயூரம் வேதநாயகம் பிள்ளை—வரலாறும் நூலாராய்ச்சியும்' என்ற நூலைக், கு. அருணசலக் கவுண்டர் அவர்களைக் கொண்டு எழுதுவித்து ஆறாந் திருவிழாவிலே (4-2-52) அரங்கேற்றினேம். ஏழாம் விழாவிலே 'அரசியலறிவு' என்ற சொற்பொழிவு நூலை வெளிக்கொணர்ந்தோம். எட்டாவது தமிழ் விழாவிலே (23-1-54,—28-1-54) மூன்றுநாள் சொற்பொழிவுகளைத் தொகுத்து 'வழிகாட்டும் வள்ளுவர்,' 'தமிழக வரலாறு,' 'இந்திய விஞ் சிகள்' என்ற மூன்று தனி நூல்களாகத் தமிழ் உல காம்.

ஒன்பதாந் தமிழ்த் திருந 5) ஒருநாள்
நிகழ்ச்சி பரிபாடல் மாநாடு. ஏ. (ஆனர்ஸ்) ற்பொழிவு
களைத் தொகுத்து இன்று பு சிரியர்,
கின்றேம். இது எங்களுடை ள்ளி, திருநெல்வேலி.

123—151

இதன்கண், இராவ்சாகிபு, திரு. கு. அருணாசலக் கவுண்டர் அவர்களின் தலைமையுரையும், வித்துவான், திரு. ந. சேது ரகுநாதன், திரு. ச. கணபதி முதலியார், எம்.ஏ., எல்.டி., வித்துவான், திரு. அ. க. நவநீத கிருட்டிணன், திரு. கு. பரமசிவன், பி. ஏ. (ஆனர்ஸ்) ஆகிய நால்வர் சொற்பொழிவுகளும் சேர்க்கப்பெற்றுள்ளன. இவர்கள் ஐவரும் எங்கள் கழகத்தோடு நெருங்கிய தொடர்புள்ளவர்கள். இவ்வாசிரியப் பெருமக்களுக்கு எங்கள் உளங்கனிந்த நன்றி உரியதாகிறது.

இந்நூலைத் தங்கள் வெளியீடாக ஏற்றுப் பொருள் உதவி, விரைந்து அச்சியற்றிய திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாருக்கும், இக்கழக ஆட்சியாளரும், தமிழ்நூற் புரவலரும், எங்கள் தளபதியும் ஆகிய திருவாளர், வ. சுப்பையாபிள்ளை அவர்களுக்கும் நாங்கள் மிகவும் கடமையுடையோம்.

தருமையருள்பெறு
நெல்லை அருணகிரி இசைக்கழகம்,
திருநெல்வேலிச் சந்திப்பு,
27—2—1955.

இராம. கனகசபாபதி,
அமைச்சர்.

...கும்.
...ளை நம் தம...
...செல்வப் பேர...
பெற்று, வைய...
இனபுறுவார்களென நம்பு...

# உள்ளுறை



---

## படங்கள்



பரிபாடல் மாநாட்டுத் தலைவர்

இராவ்சாகிபு, திரு. கு. அருணாசலக் கவுண்டர்

ம. தி. தா. இந்துக்கல்லூரி, திருநெல்வேலி.

# தலைமையுரை

[பேராசிரியர், இராவ்சாகிபு, திரு. கு. அருணசலக் கவுண்டர் அவர்கள்.]

## க. மறைந்த பாடல்

பரிபாடல் என்பது கடைச்சங்கத் தொகைநூல்களிலே ஒன்று. இதன் பனுவல்கள் பரிபாடல் என்னும் பெயருடைய ஒருவகைப் பாக்கள். இப்பாவகை பலநூறு வருடங்களுக்கு முன்னமேயே வழக்கொழிந்து விட்டன. பிற்காலத்திலே ஆழ்வார்திருநகரி சந்நிதிக் கவிராயர் மரபினர் ஒருவர் தமது பாப் பாவினம் என்ற நூலிலே முந்திய பாடல் முறையைத் தழுவி நான்கு பரிபாடல்களைப் புதியனவாகப் பாடியிருக்கின்றார்.

பலவகைப் பா வடிகளையும் ஏற்றுவரும் என்னும் இலக்கணத்தால் பரிபாடல் இசைநலம் வாய்ந்தது என்று அறிகின்றோம். இது இன்பம் நுதலி வரும் என்பதால் பொருட் பொலிவுடைய தென்றும் அறிகின்றோம். 25 முதல் 400 அடிவரையும் இப் பாடல் நிமிர்ந்து நடைபெறும். தரவு, எருத்தம், அராகம், கொச்சகம், மடக்கியல், வாரம் என்ற உறுப்புக்களுடன் எண்ணும் கலந்து இது இயங்கும்.

இத்தகைய பரிபாடல்கள் தலைச்சங்க காலத்திலே எத்துணையோ[1] பல இருந்தன. காலகதியிலே அவை இறந்துபட, கடைச்சங்க காலத்திலே எழுபது பாடல்களே எஞ்சின. அதன் பின்னரும் பாதுகாப்பாரின்றிச் சிதைந்து, அடியும் முடியும் இன்றி இன்னநூல் என்று அறியப் படாது 22 பாட்டளவிலே குற்றுயிரும் குறையுடலுமாய் இறந்துபடும் நிலையிலே கிடந்த இதனை டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் அரிதின் முயன்று ஆராய்ந்து வெளி யிட்டார்கள்.

பரிபாடல் எழுபது பாக்களோடு முன்னம் நிலவியது என்றோம். திருமாலுக்கு எட்டும், முருகனுக்கு முப்பத் தொன்றும், கடலுக்கு ஒன்றும், வையைக்கு இருபத் தாறும், மதுரைக்கு நான்குமாக அவ் வெழுபது பாடல்

---

1. தலைச்சங்கப் புலவர்களால் பாடப்பெற்றன 'வேத் துணையோர் பரிபாடலும் முதுநாரையும்......என இத் தொடக் கத்தன' என்று களவியலுரையிலே இப்படி அச்சிட்டவர் சி. வை. தாமோதரம் பிள்ளை; அவரைப் பின்பற்றித் திராவிடப் பிரகாசிகையிலும் சபாபதி நாவலர் 'வேத்துணையோர் பரிபாடல்' என்றே கூறினர். பிழையான இவ்வழக்கே பிறராலும் பின் பற்றப்பட்டபோது, அ. குமாரசுவாமிப் பிள்ளை என்பவர் 'எத் துணையோ' என்பதுதான் அவ்வாறு பிழைபட எழுதப்பட்டது என்பதை எடுத்துக்காட்டினார். இவருக்கு முன்னமே 1897 இல் எம். சேஷகிரி சாஸ்திரியார் என்பவர் 'எத்துணையோ பரிபாடல்' என்ற பாடத்தைத் துணிந்து சொன்னார். 'எண்ணிறந்த பரி பாடலும்.........' என்று அடியார்க்குநல்லார் சிலப்பதிகார வுரையிலே எழுதுகிறார். பரிபாடை என்ற ஒரு நூல் முன்னம் இருந்தது. பரிபாடலினும் அது வேறாயது. யாப்பருங்கல விருத்தியிலே பரிபாடைச் சூத்திரம் என்று ஒன்று பேசப் படுகிறது.

— கு. அ.

களும் பகுக்கப்பட்டிருந்தன.[1] தற்போது கிடைத்துள்ள இருபத்திரண்டு பாடலுள் திருமாலுக்குரியவை ஆறு; முருகனுக்குரியவை எட்டு; வையைக்குரியவை எட்டு, இவையே அன்றி, பழைய உரைகளிலே மேற்கோள்களாகப் பயிலும் இரண்டு பரிபாடல்களும் உண்டு.

## உ. கந்தியார் செய்த பிழை

ஆழ்வார்திருநகரி திருமேனி இரத்தினக் கவிராயர் மரபினர் வீட்டிலே திருக்குறள்—பரிமேலழகர் உரை யேடு ஒன்று கிடைத்தது. அதன் முகப்பிலே வரையப் பட்டுள்ள ஒரு பாயிரத்தால் 'கந்தியார் என்பவர் இப் பரிபாடலிலே தம் சொற்களை இடைமடுத்துப் பிழை செய்தார்' என்று அறிகின்றோம்.[2] அதனால் மேலும்

---

1. திருமாற் கிருநான்கு, செவ்வேட்கு முப்பத்
தொருபாட்டு, கார்கோளுக்* கொன்று—மருவினிய
வையைஇரு பத்தாறு மாமதுரை நான்கென்ப
செய்யபரி பாடல் திறம்.

* காடுகாட் கொன்று என்பது பிரதிபேதம். கார்கோள் (—கடல்) என்ற பாடம் ஆழ்வார்திருநகரியிலும் ஆறுமுக மங்கலத்திலும் கிடைத்த சுவடிகளிலே உள்ளது.

2. கண்ணுதற் கடவுள் அண்ணலங் குறுமுனி
முனைவேல் முருகன் எனஇவர் முதலிய
திருந்துமொழிப் புலவர் அருந்தமிழ் ஆய்ந்த
சங்கம் என்னும் துங்கமலி கடலுள்
அரிதின் எழுந்த பரிபாட் டமுதம்
அரசுநிலை திரீஇய அளப்பருங் காலம்
கோதில் சொன்மகள் நோதகக் கிடத்தலின்
பாடிய சான்றவர் பீடுநன் குணரா
மிகைபடு பொருளை நகைபடு புன்சொலில்
தந்திடை மடுத்த கந்திதன் பிழைப்பும்
ஒருங்குடன் கிடந்த ஒவ்வாப் பாடம்

நாம் அறிவதாவது: 'கந்தியாரே அல்லாமல் ஏடுபெயர்த்தெழுதியவரும் பெரிதும் பிழைசெய்தார். ஆதலின், பாடலின் உண்மையிலே காண்டல் அரிதாயிருந்தது. படிப்போரும் ஒரெழுத்தை மற்றேரெழுத்தாகக் கருதிப் பிழைபடப் படித்து வந்தனர். பரிமேலழகர் கந்தியாரது புன்சொற்களைக் களைந்து, பிழைகளையும் போக்கி யாவருக்கும் விளங்கும்படி சுருங்கியதோர் உரை செய்தார்.' முந்நூறு ஆண்டுகளுக்கு முன்பிருந்த கவிராசகேசரி திருமேனி இரத்தினக்கவிராயர் தாமியற்றிய நுண்பொருள் மாலையிலே குறள் நூலுக்கு உரைவகுத்த பரிமேலழகரே பரிபாடலுக்கும் உரைசெய்தார் என்று கூறுகிறார்.

பரிபாடலிலே தம் சொற்களைப் பெய்து பிழை செய்த இக் கந்தியார் யார்? கந்தி என்பது நீல நிறமுடைய ஒருவகை மாணிக்கம். பெண்கள் பெயராக இதனை வழங்கல் பழங்கால மரபு. கந்தியார் என்பது எண்ணெழுத்தறிந்த ஒரு பெண்மணியின் பெயர். இவர் பிறந்த ஊர் பேரை.[1] தென் திருப்பேரை என்று இன்று வழங்கப்படும். அவ்வூர் திருநெல்வேலி மாவட்டத்திலே உள்ளது. கந்தியார் வைணவ மரபினர்; தமிழ்ப் புலமை நிரம்பியவர்!

---

திருந்திய காட்சியோர் செவிமுதல் வெதுப்பலின்
சிற்றறி வினர்க்கும் தெற்றெனத் தோன்ற
மதியின் தகைப்பு விதியுளி அகற்றி
எல்லையில் சிறப்பில் தொல்லோர் பாடிய
அணிதிகழ் பாடத்துத் துணிதரு பொருளைச்
சுருங்கிய உரையின் விளங்கக் காட்டினன்
நீள்நிலங் கடந்தோன் தாள்தொழும் மரபின்
பரிமேல் அழகன் உரிமையின் உணர்ந்தே.

1. பல கவித்திரட்டு என்ற சுவடி ஒன்றிலே 'பேரை வைணவ கந்தியார் சொற்ற செப்பும் வினுவும்' என்று கந்தியார் பாடல்கள் சில காணப்படுகின்றன. (செந். தொ. 20.)

சிந்தாமணியிலே இடைமடுத்து இவர் செருகிய பாடல்கள் நானூற்றுக்கு மேல் என்பர். கந்தியார் பாடல் இவை, தேவர் பாடல் இவை என்று இனந்தெரியா அளவிலே கந்தியார் பாடல்கள் திட்பநுட்பமும் பொருட்பொலிவும் செறிந்து விளங்குகின்றன. சிந்தாமணி உரையிலே நச்சினார்க்கினியர் ஓரிடத்தில்[1] இக் கந்தியார் கொண்ட பாடத்தைச் சிறந்த ஆதாரமாக மேற்கொள்கிறார். கந்தியார், பரிமேலழகர்க்கும் நச்சினார்க்கினியர்க்கும் காலத்தால் முற்பட்டவர்; 'திருமாற் கிருநான்கு' என்று தொடங்கும் பரிபாடற் பகுப்புச் செய்யுள் பாடியவர் இக் கந்தியாரே; இவரே தொல்காப்பியப் பகுப்புத்தொகையும் பாடியுள்ளார்.

## ந. பரிபாடலின் காலம்

மு. ஆபிரகாம் பண்டிதர் தமது கருணாமிர்த சாகரம் என்னும் இசைத்தமிழ் நூலிலே கடைச்சங்கப் புலவராகிய நல்லந்துவனார் வையை மலையிலே மழை பெய்யத் தொடங்கிய நேரத்தைக் குறிப்பதாகிய பரிபாடலைக் காட்டிப் பழந்தமிழரது வானநூற் பயிற்சியை வியந்தார். வான சாத்திரத்திலும் அதன் காரியமாகிய சோதிடப் பயிற்சியிலும் பழந்தமிழர் தேர்ந்திருந்தனர். இன்றும் தென்னாட்டுத் தமிழர் வழங்கும் வாக்கிய நிருபணம் சிறந்து திகழ்கிறது. சந்திர சூரியருடைய இரேகாமிசங்களைக் கண்டுபிடிப்பதற்குத் தென்னாட்டாராகிய நாம் சௌர அல்லது வாக்கியம் என்னும் விதியை அனுசரிக்கின்றோம். அதன் பயன் யாது என்றால், 'மத்தியஸ்புடங்களைக் கண்டுபிடித்துப் பின் வாக்கியப் பிழை தீர்த்துச் சுத்த ஸ்புடத்தைக் கண்டுபிடிக்கும் முறையை விட்டு,

1. சிந். குணமாலை, 240, 241.

நேரே சுத்த ஸ்புடத்தைக் கண்டுபிடித்தலாம்[1] வான நூலறிவின் பயனைப் பழந்தமிழர் சோதிடமும் பயின்று வந்தனர் என்பதற்குப் பல சான்றுகள் உண்டு; அவை களிலே ஒன்று, 'ரோம நாட்டிலே மகளிர் தமது வீட்டை விட்டு வெளியிலே புறப்படும்போது, அது நல்ல நேரந்தானு என்பதைக் கணித்துச் சொல்லத் தமிழரை நியமித்திருந் தனர்' என்பது.

பழந்தமிழர் வானநூற் பயிற்சிக்கு ஆபிரகாம் பண்டி தர் சான்று தந்த பரிபாடற் பகுதி பின்வருவது;— 'இடப வீதி மிதுனவீதி மேடவீதி என்று வகுக்கப்பட்ட மூவகை வீதியிலே அடங்கிய இருபத்தேழு நாள்களுள் வெள்ளி இடபத்தைச் சேர, செவ்வாய் மேடத்தைச் சேர, புதன் மிதுனத்திலே நிற்க, கார்த்திகை உச்சமாக விடிதல் உண்டாக, குரு மீனத்திலே நிற்க, சனி மகரத்திலே நிற்க, இராகு மதியம் மறையும்படி வருகிற நாளிலே அகத்தியன் என்ற மீன் உயர்ந்த தன்னிடத்தைவிட்டு மிதுனத்தைப் பொருந்த, முறுகின வெயிலையுடைய முதுவேனிற்குப்பின், கார்காலத்து மழை பெய்க என்ற விதிப்படி உயர்ந்த சைய மலையிலே மழைபெய்ய மிகுதியாக வருகிற வையைப் புனல்—' இதனை,

"………மூன் றொன்பதிற் றிருக்கையுள்
உருகெழு வெள்ளிவந் தேற்றியல் சேர
வருடையைப் படிமகன் வாய்ப்பப் பொருள்தெரி
……………………………………
நெரிதரும் வையைப் புனல்." (பரி. கக: ந-கசு)

எனவரும் பரிபாடலடிகளால் உணர்க.

---

1. வராக மிஹிரர் திரட்டிய பஞ்ச சித்தாந்திகா என்ற நூலின் முன்னுரையிலே Dr. Thibaut இப்படி எழுதுகிறார். நாம் வழங்கிவரும் வாக்கிய சித்தாந்தம் தொன்று தொட்டு வருவது.

இக் கிரகநிலைக்கேற்ற இராசிச் சக்கரத்தைக் கீழே பார்க்கலாம். ஆவணி மாதம் அவிட்டநாள் சந்திர கிரகணத்தை இதிலடங்கிய கோள்நிலை குறிக்கிறது.[1]

| | | | |
|---|---|---|---|
| வியாழம் | செவ்வாய் | வெள்ளி | புதன் அகத்தியன் |
| | | | கேது |
| சனி மதி ராகு | | | ஆதித்தன் |
| | | | |

1. விரிகதிர் மதியமொடு வியல்விசும்பு புணர்ப்ப
எரிசடை எழில்வேழம் தலைஎனக் கீழிருந்து
தெருவிடைப் படுத்தமூன் றொன்பதிற் றிருக்கையுள்
உருகெழு வெள்ளிவந்து ஏற்றியல் சேர
வருடையைப் படிமகன் வாய்ப்ப, பொருள்தெரி
புந்தி மிதுனம் பொருந்தப் புலர்விடியல்
அங்கி உயர்நிற்ப அந்தணன் பங்குவின்
இல்லத் துணைக்கு உப்பால் எய்த, இறையமன்
வில்லிற் கடைமகரம் மேவப், பாம்புஒல்லை
மதியம் மறைய வருநாளில் வாய்ந்த
பொதியின் முனிவன் புரைவரைக் கீறி
மிதுனம் அடைய, விரிகதிர் வேனில்
எதிர்வரவு மாரி இயைகென இவ்வாற்றால்
புரைகெழு சையம் பொழிமழை தாழ
நெரிதரூஉம் வையைப் புனல்.

"இக் கோள் நிலையிலே ஐயங்கொண்டு தஞ்சை எஸ். சுப்பிரமணிய சாஸ்திரிகள் என்பவர் பழந்தமிழர் சோதிடமறியார் என்று எழுதினர். [1]அதனைக் கண்ணுற்ற திருவாரூர் சோமசுந்தர தேசிகர் அவர் கருத்தை மறுத்துப் பலவகையாகச் சோதித்துப் பரிபாடலிலே கண்ட சோதிடக் குறிப்புப் பொருந்துவதே என்று மெய்ப்பித்தார்.[2] இந்தக் கருத்துவேறுபாடுகளைக் கண்ட மதுரை டி. சி. சீனிவாசையங்காரவர்கள், பி. ஏ., பி. எல்., உண்மை அறிய அவாவி, ஆர். எஸ். நாராயணசாமி ஐயரவர்களைப் பார்த்து, அப்போது கூடுவதாயிருந்த மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் 20ஆம் ஆண்டு விழாவிலே தமது முடிபை அறிவிக்குமாறு வேண்டிக்கொள்ளவே, அவரும் (நாராயணசாமி ஐயர்) உ. வே. சாமிநாதையரவர்கள் தலைமையிலே பரிபாடலின் கிரகநிலை பொருந்துவதன்று என்று வாதித்தார். அதற்கு எதிர்வாதம் செய்தவர் தமிழ்ச்சங்கத் தலைமை யாசிரியர், திரு. நாராயணையங்காரவர்கள்.[3] இவரை ஆதரித்து ஆர். கணபதி ஐயர், எம். ஏ., பி. எல். பேசினர். பிறகும் நாராயணசாமி ஐயரவர்கள், இக் கோள்நிலை இயலாதென்றும் ஒருவேளை இருந்தால் அது கி.பி. 372 ஆடி 15இல் இயலுமே அன்றி ஆவணியில் சாத்தியமில்லை என்றும் எழுதினர்கள். இதனைக் கண்ணுற்ற சோமசுந்தர தேசிகரவர்கள் அதனை மறுத்தார்கள்.

அதன்பின் இந்த வாதம் தமிழறிஞரிடையே பெரும் பிரச்சனை ஆகிவிட்டது. திவான்பகதூர் சுவாமிக்கண்ணுப் பிள்ளை அவர்கள் ரூ. 75 விலையுள்ள தமது சோதிட கால கணித நூலிலே தாம் கணித்த கணித அட்டவணையை மெய்ப்பிக்கும்பொருட்டுப் பரிபாடலின் கோள்நிலையைத்

---

1. செந். தொ. கரு. 2. செந். தொ. கக.
3. செந். தொ. கரூ.

தமது கொள்கைப்படி சோதித்து, அக் காலம் 17-6-634 என்று எழுதினர். ஆனல், டாக்டர் எஸ். கிருஷ்ணசாமி ஐயங்காரவர்கள் இதனை ஒப்பாது இதன் உண்மையை வினவி ஜர்மானிய பண்டிதர் ஹெர்மன் யாக்கோப்பிக்கு[1] எழுத அவர் இதை ஏற்கவில்லை. இதற்கிடையிலே கே. ஜி. சங்கர ஐயரவர்கள் அக் கிரக நிலையின் காலம் கி. பி. 254 என்று கணித்தார்கள். இவைகளை எல்லாம் ஆராய்ந்து சோமசுந்தர தேசிகரவர்கள் சையமலையிலே மழை பொழிந்த அக் காலம் 27-7-17 ஆன கலி 319 என்று கொள்வதைவிட கி. மு. 161 ஆன கலி 2941-பிரமாதி ஆவணி 12 வியாழன் சதுர்த்தசி 15-4; அவிட்டம் 45-33 என்பது மிகவும் பொருந்தும் என்று மெய்ப்பித்தார்கள்.[2] இது பாடலிலே கண்ட நிறைமதியான அவிட்டநாள் ஆகிறது. அன்று சூரியன் சிம்மத்திலும், சந்திரன் மகரத்திலும், குரு கும்பத்திலும் காணப்படும் என்று காட்டியிருக்கிறார்கள். முப்பது ஆண்டுகளுக்கு மேலாகியும் தேசிகரவர்கள் கூற்றே நிலைபெற்றுள்ளது. இந்த விவாத இலக்கியங்களைத் தொகுத்து இன்று அச்சிடுவது ஆராய்ச்சிக்கு மேலும் பயன்படும். இவ் வாராய்ச்சியால் நல்லந்துவனர் காலத்தை நாம் அறிவதுடன், கடைச்சங்க காலம் கி. மு. முதல் நூற்றாண்டை ஒட்டியது என்றும் உணர்கின்றோம் அல்லவா? இக்காலம் வேறுபல சான்றுகளாலும் நிலைபெறுகிறது.

## ச. பொருளமைதி

பரிபாடல் ஆசிரியர்களின் வானநூற்புலமை கிடக்க, அதன் பொருட்பொலிவும் நம்மை வியப்புறுத்துகின்றன. அதன் ஒவ்வொரு பாடலின் பின்னர், பாடினர் பெயர்,

1. Heraman Jacobi. 2. செந். தொ. உஉ.

பண்ணின் பெயர், இசைவகுத்தார் பெயர்கள் கொடுக்கப் பட்டுள்ளன. இதன் இசையமைதி எம்முறையைப் பின் பற்றியது என்பது இன்று நம்மால் அறியக்கூடவில்லை. இதற்கு இசைவகுத்தோர் பெயர்களை[1] ஆராயும்போது நாகர் என்ற மரபினர் இசைப் பயிற்சியிலே தேர்ந்திருந் தனர் என்று தெரிகின்றோம். இந் நாகர் பாணருள் ஒரு பிரிவினரா என்பது அறியப்படவில்லை. கண்ணன் கேசவன் அச்சுதன் போன்ற திருமால்பெயர்களையும் இவ்விசைவாணர் பெற்றிருந்தனர்.

முற்காலத்திலே பல வகையான இசைப்பாடல்கள் வழங்கின. அவைகளை ஒன்பது வகையாகப் பகுத் துள்ளனர். அவை யாவன: சிந்து, திரிபதை, சவலை, சமபாத விருத்தம், செந்துறை, வெண்டுறை, பெருந்தேவ பாணி, சிறுதேவ பாணி, வண்ணம்.[2] இப் பாவைகளிலே பரிபாடல் எண்ணப்படவில்லை. அது நான்கு பாவானும் வந்து பல வடியானும் நிற்கும் என்பதாலோ, பல உறுப்புக்களும் தொடர்ந்து ஒரு பாட்டாகி முற்றுப் பெறும் என்பதாலோ, யாதாலோ அறியோம் இசைப் பாவகையிலே பரிபாடல் செந்துறையைச் சேர்ந்தது.

பண்ணமைந்த இப்பரிபாடலிலே கடவுள் வாழ்த்தா வன சில; வையையையும் மதுரையையும் வருணிப்பன

---

1. கண்ணனாகனார் 5ஆம் பாடலுக்கு இசை வகுத்தார்
நந்நாகனார் 12ஆம் பாடலுக்கு இசை வகுத்தார்
நன்னாகனார் 2ஆம் பாடலுக்கு இசை வகுத்தார்
நாகனார் 11ஆம் பாடலுக்கு இசை வகுத்தார்
பெட்டனாகனார் 3, 4ஆம் பாடலுக்கு இசை வகுத்தார்

2. செப்பரிய சிந்து திரிபதை சீர்ச்சவலை
தப்பொன்றும் இல்லாச் சமபாதம்-மெய்ப்படியும்
செந்துறை வெண்டுறை தேவபாணி வண்ணம்என்ப
பைந்தொடியாய் இன்னிசையின் பா.

சில; புனல்விளையாட்டு, பொழில்விளையாட்டு, உண்டாட்டு, திருவிழாச்சிறப்பு, தலச்சிறப்பு, மூர்த்திச் சிறப்புப் போன்றவை இப் பாடற்பொருள். இதிலே வேதாகம வழக்கைக் காண்கின்றோம்; உலகவழக்கைக் காண்கின்றோம்; சிங்காரவகை அலங்காரவகைகளைக் காண்கின்றோம். இவைகளைக் கருதும்போது தெய்வ வாழ்த்தும் மக்கள் வாழ்க்கையுமே இசைப்பாடலுக்கு இயைந்த பொருள் என்பதை அறிகின்றோம்.[1]

நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம்
கலியே பரிபாட் டாயிரு பாங்கினும்
உரியதாகும் என்மனார் புலவர்.

என்ற தொல்லாசிரியர் கருத்து, புனைந்துரைவகையானும் உலகவழக்கானும் புலவோராற் பாடுதற் கமைந்த புலவராற்று வழக்கம் கலியும் பரிபாடலும் என்கின்ற அவ்விரண்டு கூற்றுச் செய்யுளிடத்தும் நடத்தற் குரியது என்பதாம். ஆதலின், 'புலனெறி' என்ற புலவராற்று வழக்கிற்கு உரிய பாடலிலே புனைந்துரையோடு உலகியலையும் அறிகின்றோம். சங்ககால மக்களுடைய வாழ்க்கையிலே மலர்ந்த தெய்வபத்தியையும் ஆடலும் பாடலும் கண்டும் கேட்டும் காமநுகரும் இன்ப விளையாட்டுக்களையும் காண்கின்றோம். அவைகளைப் பின்வரும் பரிபாடற் சொற்பொழிவுகளிலே கண்டின் புறலாம்.

---

1. இன்பத்தையே பொருளாகக்கொண்டு கடவுள் வாழ்த்து மலைவிளையாட்டு புனல்விளையாட்டு முதலியவற்றிலே பரிபாடல் வரும் என்பர், பேராசிரியர், தெய்வ வாழ்த்து உட்படக் காமப்பொருள் குறித்து உலகியல்பற்றி வரும் என்பர், நச்சர். தெய்வமும் காமமும் பொருளாக வரும் என்னும், யாப்பருங்கல விருத்தி.

## எட்டுத்தொகை நூல்களும் பரிபாடற் சிறப்பும்

### வெண்பா

'நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு
ஒத்த பதிற்றுப்பத்து ஓங்கு *பரிபாடல்*
கற்றறிந்தார் ஏத்தும் கலியோடு அகம்புறமென்று
*இத் திறத்த எட்டுத் தொகை.*'

### பரிபாடலில் நுவலப்பெற்றன

'*திருமாற்* கிருநான்கு செவ்வேட்கு முப்பத்
தொருபாட்டு '*காடுகாட்கு* ஒன்று—மருவினிய
வையைஇரு பத்தாறு *மாமதுரை* நான்கென்ப
செய்ய*பரி பாடல் திறம்.*'

### பாண்டி நாட்டு வாழ்த்து

'ஆவியந் தென்றல் வெற்பின் அகத்தியன் விரும்பும் தென்பால்
நாவலம் தீவம் போற்றி நாவலந் தீவம் தன்னுள்
மூவர்கட் கரியான் நிற்ப முத்தமிழ்ச் சங்கத் தெய்வப்
பாவலர் வீற்றி ருக்கும் பாண்டிநல் நாடு போற்றி.'

---

1. (பாடம்) கார்கோளுக்கு.



வித்துவான்,

திரு. ந. சேதுரகுநாதன்



திரு. ச. கணபதி முதலியார்,

எம்.ஏ., எல்.டி.



வித்துவான்,
அ. க. நவநீதகிருட்டிணன்

திரு. கு. பரமசிவம்,
எம். ஏ.



# க. திருமால்

[வித்துவான் திரு. ந. சேதுரகுநாதன், விருதுநகர்]

இந்தப் பேரவையில் எனக்குப் பேசுதற்கு வழங்கிய தலைப்பு திருமாலைப் பற்றியது. திருமாலைப்பற்றிப் பேசும் முன்பு தமிழ் நிலத்தின் இயல்பு சிறிது காண்போம். இமய மலை முளைப்பதற்குப் பன்னூறுகோடி காலங்களுக்கு முன்பே பொதியமலை ஓங்கிச் சிறப்படைந்து தமிழை ஈன்று வளர்த்துத் தந்துவிட்டது. தமிழும் தண்பொருநை ஆறும் பிறந்த பொதியமலையின் சிறப்பு அளவிடமுடியாதது. வரலாற்றுக் கதிர்களால் எட்டியும் பார்க்க முடியாத காலப்பழமையும் மேன்மையும் வாய்ந்த தமிழ்மொழியைத் தாய்மொழியாகப் பெற்ற தமிழர்கள் இயற்கையுடன் இசைந்த வாழ்க்கை நடத்தினர்கள். இயல்பான முறைமைப்படி நிலத்தைப் பிரித்தார்கள்.

## க. ஐந்திணை

### 1. குறிஞ்சி

மலையும் மலைசார்ந்த இடமும் "குறிஞ்சி" நிலம் என்ற பெயர்பெற்றது. குறிஞ்சித்திணை என்று கூறினல் குறிஞ்சி நிலத்தையும் குறிக்கும்; காதலர்களின் கூட்டுறவையும் குறிக்கும்; குறிஞ்சி என்பது குறிஞ்சிப் பூவையும் குறிக்கும்; குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த மக்கள் "சேயோன்"

என்ற சொல்லால் கடவுளை வழிபட்டனர். சேயோன் என்ற சொல் செம்மையான நிறம் உடையவன் என்றும், குழந்தை போன்றவன் என்றும், உள்ளம், உரை, செயல், உலகம் இவற்றிற்கெல்லாம் சேய்மைப்பட்டவனாகியும் நிற்பவன் என்றும் பொருள் தரும். சேயோன் என்பதற்கு முருகன் என்றும் சிவன் என்றும் பொருள் கொள்ளுதலும் இயல்பேயாகும்.

## 2. பாலை

மலைசார்ந்த இடமும் காடு சார்ந்த இடமும் வேனிற் காலத்தின் வெப்பத்தால் கரிந்து கிடக்கும்போது அது பாலை நிலம் என்று சொல்லப்படும். பாலைக்குத் தனி நிலம் இல்லை. வேனிற்காலத்துப் பாலை நிலமாக விளங்கும் நிலம், மாரிக்காலத்தில் குறிஞ்சியும் முல்லையுமாக மாறிவிடும். பாலை என்பது ஒரு மரத்தின் பெயர். அரக்கத்தன்மையோடு திருக்கிட்டு ஓங்கி வளர்ந்து நிழல் தந்தும் மலர் தந்தும் பழம் தந்தும் பாலை நிலத்தில் அது நிற்கும் காட்சி பார்த்து மகிழ்வதற்கு உரியதேயாகும். அத்தகைய மரத்தின்பெயரே அந்த நிலத்திற்கு ஆயிற்றென்றுங் கொள்ளலாம். அவ்வாறன்றி, குறிஞ்சி, முல்லை என்று இரு கூறுகப் பிரிந்து நிற்கும் பான்மைவாய்ந்த பகுதியாகிய தன்மையினுல் பாலை நிலம் என்று பெயர்பெற்றதென்றுங் கொள்ளலாம். எனவே, பாலை நிலத்தில் நிற்குங் காரணம் பற்றி அந்த மரம் பாலை மரம் என்று பெயர்பெற்றது என்றுங் கருதலாம். பாலை என்ற சொல் பாலைநிறத்தையும் பாலை மரத்தையும் பிரிதலாகிய உரிப்பொருளையும் குறித்து வரும். அந்தப் பாலைநிலத்து மக்கள் வணங்கிய தெய்வத்தின் பெயரைக் "காடுகிழாள்" என்றும் "கொற்றவை" என்றும் "காளி" என்றும் வழங்கிப் போற்றினர்.

## 3. முல்லை

காடும் காடுசார்ந்த இடமும் முல்லை நிலம் என்று பெயர்பெற்றது. முல்லை என்ற சொல் முல்லை நிலத்தையும் குறிக்கும்; முல்லைப் பூவையும் குறிக்கும்; பிரிந்த தலைவன் வருந்துணையும் தலைவி பொறுத்து ஆற்றி இருத்தலாகிய இருத்தல் என்னும் உரிப்பொருளையும் குறிக்கும்; இந்த நிலத்து மக்கள் மாயோன் என்ற பெயரால் கடவுளை வழிபட்டனர். மா என்பது கருப்பு. மாயோன் என்றால் கரியவன் என்றும் பொருள்படும். பசிய கடலினையும் நீல வானத்தினையும் கரிய காயாம்பூ மலராகிய பூவைப் பூக்களின் தொகுதிகளையும், ஆங்கெல்லாம் பரந்து நிற்கும் வண்ணத்தையும் வனப்பையும் கண்டு அவற்றிற்கு உள்ளுறு பொருளாய் ஊடுருவி நின்றிலங்கும் செம்பொருளை மாயோன் என்றார்கள். மாய் என்பது மறைதல் என்றும் பொருள்படும். எனவே, மாயோன் என்பது தத்துவங் கடந்த பொருளாய்ச் சேய்மைப்பட்டு மறைந்து நிற்பது என்ற பொருளும் தரும்.

## 4. மருதம்

வயலும் வயல் சார்ந்த இடமுமாக அமைந்த நிலப்பரப்பு மருதம் என்று பெயர்பெற்றது. மருது என்ற மரம் ஆங்கே ஓங்கி வளர்ந்து பசுமையோடு பொலிவுற்று நிற்கும் காட்சியே தனி. மருதம் என்ற சொல் மருதமரத்தையும் குறிக்கும்; மருத நிலத்தையும் குறிக்கும்; ஊடலாகிய உரிப்பொருளையும் குறிக்கும்; அந்நிலத்து வாழ்ந்த மக்கள் தாம் வழிபடும் செம்பொருளுக்கு வேந்தன் என்று பெயர் வைத்தார்கள். இந்திரன் என்று கூறுதலும் உண்டு. இந்நிலத்து மக்களால் வேந்தன் என்றும் இந்திரன் என்றும் குறிக்கப்படுபவன் புராணங்களில் கூறப்படும் இந்திரர்

களுள் ஒருவன் அல்லன். யாண்டும் விரிந்து பரந்துநிற்கும் பேராற்றல் படைத்த ஒரு செம்பொருளையே இந்திரன் என்ற சொல்லால் குறித்துப்போந்தனர். இந்திரனுக்குக் கோயிலும் கட்டி வழிபாடும் செய்தனர்.

## 5. நெய்தல்

கடலும் கடல்சார்ந்த இடமும் நெய்தல் என்றுபெயர் பெற்றது. நெய்தல் என்பது நெய்தற் பூவையும் குறிக்கும்; நிலத்தையும் குறிக்கும்; கடலின் கண் கலத்திலும் படகிலும் ஏறிச்சென்ற காதலர்வரக் காலந்தாழ்த்தமை கருதிக் காதலிமார் இரங்குதலாகிய இரங்கல் என்ற உரிப் பொருளையும் குறிக்கும். இந் நிலத்துமக்கள் வருணன் என்ற பெயரால் கடவுளை வழிபட்டனர்.

இத்தகைய ஐவகை நிலத்தின்கண்ணும் வாழ்ந்த தமிழ் மக்கள் இயற்கையோடியைந்த வாழ்க்கை நடத்தியவர்கள். அந்த அந்த நிலத்தில் விளையும் பொருள்களை உண்டும், ஆங்கு மலர்ந்த மலர்களைச் சூடியும், அங்கே காணப்பட்ட இயற்கைப் பொருள்களின் இயல்பை வைத்து இறைவ னுக்குப் பெயரிட்டும் வாழ்ந்து வந்தனர். இந்த ஐந்து நிலத்து மக்களால் பல்வேறு பெயர்களால் குறிப்பிடப் பட்ட பேராற்றல் வாய்ந்த கடவுள் ஒன்றே யாகும். ஐவகை நிலத்தில் ஐவராக இலங்கும் ஒரு பொருளே "உலகுக்கு ஒருவனாய் நின்றாய் நீயே" என்றும் பாராட்டப்பட்டது. வானவெளியை அளக்க முயல்வது போன்ற செயலே கடவுளை அளக்க முயலுஞ் செயலும். சொல்லின் எல்லை யைக்கடந்த ஒரு பொருளைச் சொல்லின் வரம்புக்குட் படுத்திக் கூறிவிட வல்லார் எவருமில்லை. எனவே, அவ ரவர் தாம் தாம் வேண்டியவாற்றால் இறைவனைப்பற்றி

இயம்பியும் உருவமைத்தும் வழிபடலாயினர். கடவுள் நெறியைப்பற்றிப் பேசுந் தருக்கத்தையே நெறியாகக் கொண்டு உண்மை நெறியையும், உண்மைப் பொருளையும் கைவிட்டவர்கள், பெயர்களின் பன்மைகளால் குறிக்கப் பெறும் பொருள் ஒன்றே என்பதையும் அறியாராய், "யாம் கூறும் பெயர்ப்பொருள் சிறந்தது; அவர் கூறும் பெயர்ப் பொருள் தாழ்ந்தது" என்று கூறிக் கலாம்விளைத்துக் காலம் போக்கி உலகத்தையே போர்க்களமாக்கிவிட்டார் கள். இத்தகைய போர்வீரர்கள் மெய்யுணர்வு பெறுதலும் ஒற்றுமைப்படுதலும் வேண்டுமெனின், பெயர்களின் பன் மைப்போலியையொழித்து அவற்ருற் குறிக்கப்பெறும் ஒரு பொருளை மக்கள் உணரும் வண்ணம் எடுத்துக் காட்டுதல் வேண்டும்.

பண்டைக்காலத்துச் சான்ருேர்கள் ஐந்திணை நெறி யளாவிச்செல்லும் தமிழ்ப் பாடல்களை இசைக்கும்போது ஆங்காங்கே உள்ள நிலப்பகுதிகளில் வாழும் மக்கள் குறித்த பெயர்களால் கடவுளைக் குறித்தல் வழக்கம். அவற் றில் வேற்றுமை காட்டுதலோ போர்க்கொடி கட்டுதலோ அவர்களிடம் காண்டல் இயலாது. ஆசிரியர் தொல் காப்பியனர்,

"மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே."

என்ற நூற்பாவினுல் நானிலத்திற்கும் உரிய தெய்வத்தின் பெயர்களை இயம்பிப்போந்தனர். இந்த அமைப்பின் முறைவைப்பைப் பின்பற்றியே பரிபாடல் நடக்கின்றது.

மாயோனாகிய திருமாலைப்பற்றிய பாடல்களை முதற் கண்ணும் சேயோனாகிய செவ்வேளைப்பாடிய பாடல்களை இரண்டாம் நிலையிலும், "முல்லையுங் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து நல்லியல்பு இழந்து" பாலையாக விளங்கும் பாலைநிலத்துக் காடுகிழாள் ஆகிய கொற்றவையைப்பற்றிய பாடலை மூன்றும் நிலையிலும், இந்திரனையும் வையை ஆற்றினையும் மதுரையையும் மருதத்திணைக்கு உரிய ஊடல் உரிப்பொருளின் சுவை விரவிவரும் வண்ணம் பாடிய பாடல்களை நான்காம் நிலையிலும் தொகுத்து அமைத்தனர் என்று கொள்ளலாம். நெய்தல் நிலத்னதப்பற்றிய பாடல்களும் வருணனை வழிபடும் பாடல்களும் ஐந்தாவது நிலையில் அமைதற்கு உரியன

"திருமாற் கிருநான்கு செவ்வேட்கு முப்பத்
தொருபாட்டுக் காடுகாட் கொன்று—மருவினிய
வையையிரு பத்தாறு மாமதுரை நான்கென்ப
செய்யபரி பாடற் றிறம்."

என்ற பாடலினால், திருமாலைப்பற்றி எட்டுப்பாடல்களும், செவ்வேளைப்பற்றி முப்பத்தொரு பாடல்களும், காடுகிழாள் ஆகிய கொற்றவையைப்பற்றி ஒரு பாடலும், வையையைப்பற்றி இருபத்தாறு பாடல்களும், மதுரையைப்பற்றி நான்கு பாடல்களும் பாடியிருந்தனர் என்று தெரிந்துகொள்கின்றோம். இவற்றுள் வையையைப்பற்றிய இருபத்தாறு பாடல்களுள் நெய்தல்திணையைப்பற்றிய பாடல்களும் வருணனைப்பாடிய பாடல்களும் அமைந்திருக்கலாம். எழுபது பாடல்களுள் இருபத்திரண்டு பாடல்களே இப்போது உள்ளன. ஆதலின் அவற்றைப் பற்றித் தெளிவதற்கு வழியில்லை.

## உ. பரிபாடலின் சிறப்பு

பரிபாடல் என்பது ஒருவகை இசைப் பாட்டு. அதன் நடையே ஒருவகை இசை தழுவியது. மலைமுகட்டிலிருந்து குதித்தோடி வருகின்ற மிக்க அருவிநீர் பல்வேறு நிலத்தின் அமைப்பிற்கு ஏற்ப முடுகியும் விரைந்தும் நடந்தும் ஒலித்துக்கொண்டுஞ் செல்வதுபோல பாடலும் மலை முதல் கடல் வரை பலவகை ஓசை வேறுபாட்டுடன் நடந்துசெல்கின்றது. ஆறு ஐந்திணை நெறியளாவிச் செல்வது போன்றே பாடலும் ஐந்திணை நெறியளாவி நடக்கின்றது. பரி என்ற சொல்லுக்கு, 'நடை' 'ஓட்டம்' குதிரை' 'இரங்குதல்' என்ற பொருளெல்லாம் விரித்தல் தகும். பரிபாடலும் அத்தகைய நிலையில் குதிரைபோன்று குதித்தும் ஓடியும் நடந்தும் செல்லுதல் காணத்தகுங் காட்சியேயாகும்.

" மாசில் பனுவற் புலவர் புகழ்பல
நாவிற் புனைந்த நன்கவிதை மாறுமை
மேவிப் பரந்து விரைந்து வினைநந்தத்
தாயிற்றே தண்ணம் புனல்."

என்ற பகுதி—பரிபாடலின் இயல்பை உணர்த்துதல் காண்க. சங்க காலத்து நூல்களில் பெரும்பாலும் நமக்குக் கிடைத்தன இயற்றமிழே யாகும். இசைத் தமிழாகக் கிடைத்த நூல், பரிபாடல்.

யாழின் இசையொடும் தாளத்தொடும் பாடலின் நளினமும் ஒத்திசைந்து நடக்கும் வண்ணமாக இசைவல்லுநர்களின் குழுக்கள் அரங்கங்களிலே வீற்றிருந்து பாடி மகிழ்ந்த பாடல்கள் பரிபாடல்கள். வெறும் இலக்கியச் சுவை காணும் வகையில் மட்டும் பரிபாடல் ஆயத் தகுந்ததன்று. ஈங்குக் குறிப்பிடப்படும் "எழுபது பரிபாடல்கள்

தாம் இருந்தன வேறு பாடல்கள் இல்லை"யென்று கருது தல் தவறாகும். இப்போது உள்ள பரிபாடல்கள் தொல் காப்பியர் காலத்திற்குப் பல நூற்றாண்டுக்குப் பின்னர் எழுந்தவை. தொல்காப்பியர் காலத்திற்குமுன்னர் எழுந்த பாடல்களின் மாட்சிமையை வியந்து ஆசிரியர் தொல்காப் பியனார் பரிபாடலுக்கு இலக்கணமும் நன்றாக எழுதி யமைத்தார். ஆனால், அந்த இலக்கணத்திற்குப் பண்டைப் பரிபாடல் கிடைக்கப் பெறாத நாம் இந்தப் பரிபாடல் களையே எடுத்துக் காட்டாகக்கொண்டு உணர்கின்றோம்.

இந்தப் பாடல்களை நுணுகி யாராய்ந்து படித்தும் இசையில் ஈடுபட்டும் உணர்வோர், பண்டைத் தமிழ்மக்க ளின் இன்பக்கொந்தளிப்பு மீதூர்ந்த பேரின்ப வாழ்க்கை நிலையின் இயல்புகளையும் மலைவிளையாட்டு, புனல்விளை யாட்டு, கடல்விளையாட்டு முதலியவற்றையும் உணர முடி யும். சிலர், "பொருந்தாத புராணக் கதைகள், வடமொழி மரபுகள் முதலியன வெல்லாம் இந் நூலின்கண் விரவிக் கிடக்கக் காண்கின்றோமே, இது வென்னை" என்று வினவு தலும் கூடும். அது பொருத்தமான கேள்வியே யாகும். ஆனால், அந்தக் கதைகளை எடுத்துக் கையாளும் புலவர் களின் உள்ளக்கிடக்கையை நாம் உணரின் அவ்வாறு கதைகளைக் கையாண்டதும் குற்றமில்லை என்பது புலனாகி விடும்.

எவ்வாற்றாலும் ஒரு வரம்புக்கு உட்படுத்திக் கூற இயலாத மாட்சிமை வாய்ந்த இறைவனின் இயல்புகளை எவர் கூறினும் அவற்றில் குறைபாடு அமைவது இயல்பே யாகும். அத்தகைய செம்பொருளின்கண் அன்புவைத்து உள்ளத்தைத் தூயதாக்கி உண்மையான அன்பும் அருளும் பெற முயல்வார்க்கு அந்தக் கதைகள் ஒருவகையில் துணை

புரியுமென்பது கருதியே புலவர்கள் அத்தகைய கதைகளை அமைத்தார்கள். வீட்டின் பின்பக்கத்துத் தோட்டத்திலே வளர்த்திருக்கின்ற முருங்கை, அதன்மேல் ஏறி ஊஞ்சலாடுவதற்காக நிற்கின்றது என்று கருதி ஒருவன் ஏறி ஊஞ்சலாடி விழுந்து முருங்கையைக் குற்றம் கூறினுனென்றால், அது முருங்கையின் குற்றமாகாது. முருங்கையின் இலைகளையும், காய்களையும் கொண்டு பயன் துய்ப்பதே முறைமையாகும். முருங்கையின் அடிமரத்திலே அப்பிக் கிடக்கும் கம்பளிப் பூச்சியை மார்புடன் அணைத்துக் கொண்டு உடம்பின் பசபசப்புத் தாங்காமல் அலறும் ஒருவனைப்போன்று பரிபாடலினுள் விரவிக்கிடக்கும் புராணக்கதைகளை அலசிப் பார்த்து ஆராய்ந்து அலறிக்கொண்டிருப்பதிற் பயனில்லை. கதைகளினுல் குறிப்பிட்டு உணர்த்தக் கருதிய குறிக்கோள் எதுவென்று கருதி அன்பு செய்தலே செய்தற்குரிய செயலாகும். ஆராய்ச்சிக்காகக் கையாண்ட கதைக்ள் அல்ல அவை.

வையை ஆறுனது இருபத்தாறு பரிபாடல்களால் சிறப்பித்துப் பாடப் பெற்றமை கருதி இளங்கோவடிகள்,

"புலவர் நாவிற் பொருந்திய பூங்கொடி
வையை என்ற பொய்யாக் குலக்கொடி."

என்று பாராட்டினுர். இந்தப் பாராட்டு அவர் பரிபாடலை மதித்தற்கு உரிய சான்ருக மிளிர்கின்றது. ஒருதுறைக் கோவை பாடிய அமிர்தகவிராயர் "பால்வாய்ப் பசுந் தமிழ் வீசிய வாசம் பரந்தவைகை" என்று கூறியதும் பரிபாடலின் சிறப்புக் கருதியே யாகும்.

பரிபாடல்தான் இன்னும் ஓர் அரிய உண்மையை நமக்கு உணர்த்துகின்றது. தமிழனது நாட்டினை அரசியல் வேலியாகக் காக்குமோ எனின், அது காத்தற்கு ஆற்ற

லுடையதன்று. வேறு எந்த வகையிலும் தமிழ் நிலத்தின் எல்லை சுருங்காமல் காத்தலியலாது. ஒரே ஒரு வழிதான் உண்டு. தமிழை எந்த எல்லைவரை தமிழன் பரப்பிப் பேச்சு வழக்கில் வைத்திருக்கின்றனோ அந்த எல்லைவரை தமிழ் வேலியாக நின்று நாட்டினையும் மக்களையும் காக்குமென்று முன்பே அறிவுறுத்திய பெருமை பரிபாடலுக்கு உண்டு. தமிழன் தமிழைப் பேசாமல் தமிழைப் பரப்பாமல் இருப்பானென்றால் பிறமொழிகள் தமிழ்நிலத்திற் புகுந்து கால் கொண்டு தமிழ்நிலத்தைப் பிறருக்கு உரிய தாக்கிவிடுமென்றும், அதனால் அங்கு வாழும் தமிழர்களும் தமிழர்களல்லாதாரும் திக்கற்றோர்களாகி அகதிகளாகிப் போக்கும் புகலிடமுமின்றித் திணற நேரிடுமென்றும் கருதிய பண்டையாசிரியர்,

"தண்டமிழ் வேலித் தமிழ்நாட் டகமெலாம்."

என்று குறிப்பிட்டு அறிவுறுத்தினர்.

"அரைச வேலி யல்லது யாவதும்
புரைதீர் வேலி இல்."

என மொழிந்து அரசியலே தமிழ் நிலத்தைக் காக்குமென நினைப்பாருமுளர். அரசியல் காலத்திற்கேற்ப மாறும்; வளரும்; தளரும்; அழியும்; மீண்டும் முளைக்கும். மொழி அத்தகையதன்று. மொழி சுருங்கின் மொழியை உடைய மக்கள் வாழ்வும் வள்மும் ஆண்மையும் அறிவும் சுருங்கும். அவ்வாறு மொழியைச் சுருங்கவிடாமல் தமிழக நாட்டின் ஓரங்களிலெல்லாம் தமிழை நன்கு நிலைபெறச்செய்து பரப்பிப் பிறமொழிகளாகிய பகைகள் உட்புகுந்து நாட்டினை நச்சுத்தன்மையாக்காத வண்ணம் காத்தல் வேண்டும் என்று கருதியே தமிழ் நாட்டகமெல்லாம் தண்டமிழ் வேலி என்று கூறினர் என்பதைத் தமிழர்கள் உணர்தல்

வேண்டும். உணராவிடின் தங்கள் நிலத்திற்கும் வீட்டிற்கும் மற்றப் பொருள்களுக்கும் வரம்பும் எல்லையும் உரிமை எழுத்துக்களும் வைத்திருந்து பாதுகாத்தாலும், அவை களெல்லாம் இருந்தவண்ணம் இருக்க இவர்கள் எந்த வண்ணம் இந்த வண்ணமானார்கள் என்று காணவொண்ணாத வண்ணமாகத் தமிழ்நாட்டை இழக்க நேரிடும். பரிபாடல் கூறிய எச்சரிக்கையை அன்றைக்கே கொள்ளாத காரணத் தால் தமிழ்நிலம் சுருங்க நேரிட்டது. இனிமேலாவது தமிழர்களுக்கு உண்மையான உணர்ச்சி வருமா? அல்லது தனிநலந்தான் தளிர்க்குமா? என்பது மேற்கொண்டு காலப்போக்கிற் காணவேண்டுவதொன்று.

## ௩. திருமால்

இனி, திருமாலைப்பற்றிக் கூறும் பாடற் பொருள்களை ஆராய்வோம். இம் முதற்பாடலை இயற்றியவர் பெயர் தெரியவில்லை. இவர் திருமாலின் இயல்பினைப்பற்றிக் கூறும் போது,

> "இலங்குபூண் மாஅல்!, தெருள நின்வரவு அறிதல்
> மருளறு தேர்ச்சி முனைவர்க்கு மரிதே."

என்று பாடுகின்றார். மயக்கமற்ற தெளிவினையுடைய முனிவர்களுக்கும் (திருமாலே!) உன் வரலாறு அறிதற்கு அரிது என்று கூறுவதனால், மாயோனது அப்பாற்பட்ட தன்மையை விளக்குகின்றார். மேற்குறிப்பிட்ட அடிகளுடன்,

> "அங்கணேர் வானத்து அணிநிலாத் திகழ்தரும்
> திங்களும் தெறுகதிர்க் கனலியும் நீ."

> "வலனுயர் எழிலியும் மாக விசும்பும்
> நிலனும் நீடிய இமயமும் நீ."

என்று கூறும் அடிகள் படித்து இன்புறுதற்கு உரியன. இவையே யன்றிப் பொதுநோக்கு மிக்க இந்தப் புலவர்

எல்லாப்பெயராலும் குறிக்கப்பெறும் பொருள் ஒன்றே என்பது எல்லோருக்கும் விளங்கும் வண்ணம்,

"ஐந்தலை உயரிய அணங்குடை அருந்திறல்
மைந்துடை யொருவனும் மடங்கலும் நீ."

என்றும் குறிப்பிட்டார். "ஐந்து தலைகளையுடையவனாக ஓங்கிய—காண்போர்க்கு அச்சந் தரக்கூடிய—அரிய வலிமையை உடைய முருகனை மகனாகஉடைய ஒப்பற்றவனாகிய சிவபெருமானும் நீயே. அப்பெருமானால் அழிக்கப்பெறும் தொழிலும் நினதேயாகும்" என்று இவர் கூறுந்தன்மை பாராட்டுதற்கு உரியது.

"மற்றைக், கரியானை நான்முகனைக் கனலைக் காற்றைக்
கனைகடலைக் குலவரையைக் கலந்துநின்ற பெரியானை."

என்று கூறும் அப்பர் மொழியையும் ஒப்பு நோக்குக.

மேலும் கூறுகின்றார், 'பெருமானே! நீ இன்னவரை யொத்திருக்கின்றாய்; இன்னதன்மையை உடையை என்று உன்னைப்பற்றிக் கூறுவதற்கு உவமையாக அத்தன்மையுடையா ரொருவரையும், உன்தன்மை போன்ற தன்மைகளையும், யாம் இதுவரைக் கண்டோமில்லை. பொன்னால் அழகுறச் செய்தாற்போன்ற சக்கரத்தை வலனாக உயர்த்திய உயிர்களின் முதல்வனாக நீ விளங்குகின்றமையால் நினக்கு நீயே ஒப்பாக நின்புகழொடும் பொலிந்து விளங்குகின்றாய்' என்கின்றார்.

"இன்னோ ரனையை இனையை யாலென
அன்னோர் யாமிவட் காணா மையின்
பொன்னணி நேமி வலங்கொண் டேந்திய
மன்னுயிர் முதல்வனை யாதலின்
நின்னோ ரனையைநின் புகழொடும் பொலிந்தே."

என்ற பகுதியையும்,

"இப்படியன் இந்நிறத்தன் இவ்வண் ணத்தன்
இவனிறைவன் என்றெழுதிக் காட்டொ ணாதே"

என்ற அப்பர் மொழியையும் ஒப்பநோக்கிக் காண்க.

பாட்டின் இறுதியில், திருமாலை நோக்கி, வாய் மொழிப் புலவ! யாங்கள் எம் விருப்பம் மிகுந்த உறவின ரோடு எல்லோரும் உன் அடிமை யாங்கள் நாள்தோறும் ஒன்றுகூடி எல்லா நலமும் மிளிர்கவென்று நின்னை வழிபடு கின்ற இன்பம் நிரம்பிய மனத்தையுடையவர்களாய் வணங் குவோமாக' என்று முடிக்கின்றார்.

"காமரு சுற்றமோ டொருங்குநின் னடியுறை
யாமியைந் தொன்றுபு வைகலும் பொலிகென
ஏமுறு நெஞ்சத்தேம் பரவுதும்
வாய்மொழிப் புலவநின் தாள்நிழல் தொழுதே"

என்று பாடலை முடிக்கின்றார். திருமாலை "வாய்மொழிப் புலவ!" என்று கூறியது மனங்கொளற்கு உரியது.

## 1. முதற்பாடலின் பொருள்

திருமாலே! நீ, படங்களை விரித்த அச்சந்தருந்தன்மை யுடைய பாம்பின் அரிய தலைகள் ஆயிரமும் நெருப்பைக் கக்குகின்ற திறத்தினொடு உன் திருமுடிகளின் மேலே வந்து கவிந்து அணைந்து நிற்க, நின்மலர்ந்த மார்பின்கண் திருமகளும் வீற்றிருக்கப் பெற்றாய். அங்ஙனம் திருவொடும் பொலிந்து பாம்பணையிற் கிடந்த நீ, மாசற்ற சங்குபோன்ற வெண்மையான திருவுருவத்தினையும் உயர்த்திய மூங்கிற் கழியின்மேல் அழகிய யானை உருவம் எழுதப்பெற்ற கொடியினைக் கட்டி உயர்த்திய கூர்மையமைந்த கலப்பை யாகிய படைக்கலத்தையுடையவனுமாகிய பலராமனாகவும் ஆயினை; நெருப்பைப்போல மலர்ந்த தாமரை மலரை வென்ற கண்களையுடையை; மலர்ந்த பூவை மலர்களைப்

போன்ற நீலத் திருமேனியுடையாய்; அம்மேனியில் திருமகள் பொலிவுடன் விரும்பியிருக்கும் மார்பினை உடையை; அந்த மார்பினிடத்தது ஒளிவிடுகின்ற கௌத்துவமணி, அதனோடு விளங்கும் அணிகளையும் உடையை; பெரிய நீல மலையைச் சூழ்ந்து நெருப்புத் தகதகவென்று வளைத்துக் கொண்டாற்போல பொன்னுடையணியப் பெற்றுள்ளாய்; கருடனாகிய சேவலைக் கொடியாக உடையாய்; நின் வலப் பக்கத்தே உயிர்களை நிறுத்துகின்ற அணைப்பின்கண் நின்னை வழிபடும் முறைமையை நாவினால் உரைத்தல் வல்ல முனிவர்களின் அரிய மறைப்பொருளானது கூறுகின்றது.

போர் செய்வோமென்று குதித்து எழுந்தவர்களுடைய வலிமை கெடவென்று போரில் மேம்பட்ட குற்றம் இல்லாத பெருமையுடையாய்; காமனார் சாமனார்[1] ஆகிய இருவர்களின் தந்தையே! விளங்குகின்ற அணிகலன்கள் அணிந்த திருமாலே! மயக்கமற்ற தெளிவினையுடைய முனிவர்கட்குங்கூட நின் வரலாற்றைத் தெளிய அரிதல் அரிது. அத்தகைய முறைமையினையுடைய அன்ன தன்மைகளை யுடையாய்! உன்னை இன்னதன்மையன் என்று எளிதாக உரைத்தல் எவ்வாறு எங்களுக்கு இயலும்?

அகவிதழ்கள் நிரம்பிய செந்தாமரை மலரின்கண் வீற்றிருக்கும் திருமகளையும் மறுவினையும் மார்பின்கண்ணுடைய பெருமானே! நின் தன்மை எம்மால் உரைத்தற்கு அரிது என்ற அருமையை யாம் நன்கு அறிவோமென்றாலும் யாம் நின்பால் வைத்த ஆர்வம் பெரிதாகலின் அந்த ஆர்வத்தின் காரணமாக யாம் கூறுபவற்றை எளியன என நீ வெறுத்து விடாமல் அருள்புரிதல் வேண்டும். வெற்றி மிகுந்த மேம்பட்ட புகழினையுடைய முனிவர்களாற் காக்

1. சாமன்-பிரமன்.

கப்படும் அறமும் நீயே; நின்பால் ஆர்வமுள்ளவர்களுக்கு அருளுகின்ற அருளும் நீயே; நன்னெறியிற் செல்லும் திறவில்லாதவரைத் திருத்திய குற்றமில்லாத சிறப்பினையுடைய மறமும் நீயே; பகைவரை வருத்தும் வருத்தமும் நீயே; அழகினையுடைய இடத்தையும் நீலவண்ணத்தையும் உடைய வானத்தின்கண் அழகிய வெள்ளை நிலாவாகிய ஒளியினோடு விளங்குகின்ற திங்களும் வெப்பத்தைச் செய்கின்ற பகலவனும் நீயே; ஐந்து தலைகளுடன் நிமிர்ந்து தோன்றுகின்ற பகைவர்க்கு அச்சம் விளைவிக்கின்ற அரிய திறலையும் மைந்தனாகிய முருகனை மகனாகவுடையவனுமாகிய ஒப்பற்றவனாகிய சிவபெருமானும் நீயே; அவன் செய்கின்ற அழித்தற் றொழிலும் நின்னுடையதே.

எல்லா நலனும் பொருந்திய குற்றமற்ற மெய்யுணர்வினை அருளும் வேதமும், பூவின்கண் வீற்றிருக்கும் பிரமனும், அவனால் தோற்றுவிக்கப்பெற்ற உலகு உயிர்களின் தோற்றமும் நீயே; வலனாகச் சுழன்று வானின்கண் எழுகின்ற மேகத்தின் கூட்டமும் வானவெளியும் வானப் பெருவெளியும் நிலவுலகமும் நிலவுலகத்தின் கண்ணுயர்ந்து வளர்ந்திருக்கின்ற இமயமலையும் நீயே; அதனால், நீ இன்னவரை ஒப்பாய்; இன்ன தன்மையைப்போன்ற தன்மையையுடையாய் என்று கூறுவதற்கு உவமையாக அத்தகைய ஒருவரை, ஒரு தன்மையை யாம் இதுவரையுங் காணேம் ஆதலின், பொன்னின் அழகுகொண்ட சக்கரத்தை வலப் பக்கங் கொண்டவனும் உலகின்கண் நிலைபெற்றுள்ள உயிர்களுக்கு முதல்வனும் நீயாதலினால், நீ நின்புகழொடும் பொலிவுற்று நின்னையே யொத்தவனாக இருக்கின்றாய்.

நீ பால்போன்ற வெள்ளைநிறமும் உடையாய் ஆதலின்; நின்னையொக்கும், நினது புகழின் வெண்ணிற நிழலும்

நின் உடை பொன்னை யொக்கும்; நின் கொடிகள் கருடப் பறவைகள்; நின் ஊதுகருவிகள் சங்குகள்; நின் படைக் கலங்கள் இகழ்ந்தோர்களை நேர்நின்று பொருதுவென்ற சக்கரங்கள்; நின் உருவங்கள் கடைந்து கழுவிய நீல மணியின் நிறங்கொண்டவை; நின் புகழ்கள் எண்களின் எல்லையைக் கடந்தன; நின் மார்புகள் அழகுகள் உடையவை; எங்கள் விருப்பம் மிக்க சுற்றத்தாரொடு எல் லோரும் நின் அடிமை; யாங்கள் ஒன்றாய்க் கூடி நாள் தோறும் நலம் வளர்க என நின்னை வழிபடுகின்ற இன்பம் நிரம்பிய நெஞ்சம் உடையவராய், வாய்த்த மொழியை யுடைய புலவனே! நின் தாள்நிழல் தொழுது வணங்குவோ மாக என்பது, முதற்பாடலின் பொருள்.

இனி, இரண்டாவது பாடலை ஆராய்வோம். இப் பாடலை இயற்றியவர் கீரந்தையார் என்பது குறிப்பு. இதன் கண் ஊழிகளின் இயல்புகள் கூறிய செயலும், நெய்தல், குவளை, ஆம்பல், சங்கம், தாமரை, வெள்ளம் என்ற சொற் கள் மிகுந்த எண்களைக் குறித்து வரும் என்பதனை முறைப்படுத்திக் கூறிய செயலும் பாராட்டற்கு உரியது.

"ஐயம்பல்லென வரூஉம் இறுதி" என்ற தொல் காப்பிய நூற்பாவினால் தாமரை, வெள்ளம், ஆம்பல் என்ற சொற்கள் கோடிக்கணக்குக்கு மேற்பட்ட பேரெண்களை உணர்த்த வருகின்ற முறைமையை உணர்கின்றோம். இப் பாடலியற்றிய கீரந்தையார் அவற்றுடன் நெய்தல், குவளை, சங்கம் என்ற சொற்களையும் சேர்த்து அந்த ஆறு சொற் களும் முறையாய்ப் பேரெண்களைக் குறிக்கும் நிலைமையை வரிசைப்படுத்தி யிருக்குந் தன்மை போற்றுதற்கு உரியதே.

கடவுள்வழிபாடு எதற்கு என்பதனை இவர் விளக்குகின்றார். எவ்வாறு வழிபடுவது என்பதும் குறிப்பிக்கப் பெறுகின்றது. "எமது அறிவு கொடும்பாடு அறியற்க என்று நின்அடியைத் தலையுற வணங்கினேம்; துளக்கமில்லாத மனத்துடன் பலமுறை நின்னை ஏத்தினோம்; வாழ்த்தினோம்" என்கின்றார். கொடும்பாடு அறியா அறிவாகிய மெய்யுணர்வு பெறுதற்பொருட்டுக் குடும்பத்துடன் வணங்கினோம் என்கின்றார்.

"நின்னடி, தலையுற வணங்கினேம் பன்மாண் யாமும்
கலியில் நெஞ்சினேம் ஏத்தினேம் வாழ்த்தினேம்
கடும்பொடுங் கடும்பொடும் பரவுதும்
கொடும்பா டறியற்க எம்மறி வெனவே."

என்று கூறும் முறைமை இனியதே என்க.

## 2. இரண்டாம் பாடலின் பொருள்

இரவிலும் பகலிலும் ஒன்றற்கு ஒன்று மாறிமாறித் தோன்றி உலகுக்கு இருளோட்டி உதவிய பழைமையான முறைமையையுடைய திங்களும் ஞாயிறும் நொறுங்கித் துகளாகி விசும்பிற் கலக்க, இந்த மண்ணுலகமும் பசும் பொன்னுலகமாகிய வானோர் உலகமும் அவ்வாறே துகளாகி வெறும் பாழாகப், பின்னர் அந்த ஆகாயமும் கெட்டு இல்லாமற் சிதைந்து ஒடுங்கிய ஊழிக்காலங்கள் முறைமுறையாகக் கழிந்தனவாக.[1]

---

1. ஊழ் என்ற சொல் மலர்தலும் உதிர்தலுமாகிய இரு பொருள் குறித்து வரும். "இணரூழ்த்தும் நாறா மலரனையர்" என்புழி மலர்தலும், "ஊழ்கோடு" என்றவிடத்து உதிர்தலும், "ஊழ்முகை" என்று வாழைப்பூவினைக் குறிக்குங்கால் புதிது மலர்தலும் பழையது அழிதலுமாகிய இருபொருளும் குறித்து வருதல் காண்க. ஈண்டு ஊழி என்ற சொல், உலகம் அழிந்து உதிர்ந்து பொடியாகின்ற காலத்தையும், பின்னர் மலர்ந்து உருவாகின்ற காலத்தையும் குறிக்கும்வண்ணம் கையாண்டிருத்தல்

தன்குணமாகிய ஒலியுடன் தோன்றி உருவம் காணப் படாத காற்று முதலிய மற்றப் பூதங்களின் நுண்ணிய அணுக்கள் வளர்கின்ற வானம் தோன்றி மலர்ந்த முதற் பூதத்தின் ஊழிக்காலமும்.

அந்த வானவெளியிலிருந்து தோன்றி எல்லாப் பொருள்களின்மேலும் மோதிச் சலிக்கச்செய்யும் காற்றுக் கிளர்ந்து வீசுகின்ற முறை முறையாகிய இரண்டாம் பூதத்தின் ஊழிக்காலங்களும்,

அந்தக் காற்றிலிருந்து செந்தீயானது கொழுந்து விட்டுத் தோன்றிய மூன்றும் பூதத்தின் ஊழிக்காலங்களும்,

அந்தத் தீயிலிருந்து தோன்றிப் பனியும் மழையும் பெய்த நான்காம்பூதத்தின் ஊழிக்காலங்களும்,

நிலஉலகங்கள் முன்பு சிதைந்து தன்னை உள்ளகப் படுத்திக் கரைத்து விழுங்குகின்ற வெள்ளத்தின்கண் மூழ்கி அணுவாகக் கரைந்து போயினவை மீண்டும் அந் நீரிலிருந்து பீடுபெற்றுத் திரண்டு உயர்ந்து அந் நீர்ப்பரப் பிற்கு உள்ளீடாக உயர்ந்து நிற்கின்ற நான்காம் பூதமாகிய இந்தப் பெரிய உலகம் தோன்றிய ஊழிக்காலங்களிலும், எண்களுக்கு மேற்பட்ட பேரெண்ணுகிய நெய்தல், குவளை, ஆம்பல், சங்கம், தாமரை, வெள்ளம் என்ற எண்களால் குறிக்கும் வரம்புகடந்த காலங்கள் கழிந்தபின்பு, உயிர்கள் உண்டாகும்பொருட்டு நீ பன்றி உருவங்கொண்டு நீரினுள் மூழ்கிக்கிடந்த நிலவுலகினை மேலே கொண்டுவந்து தந்த காரணத்தினால் இந்த ஊழிக்காலம் வராககற்பம் என்று நின்பெயரினைத் தாங்கி நிற்கின்றது. இது நீ பல்வேறு

---

காண்க. "வான்கெட்டு மாருத மாய்ந்து" என்ற திருவாசகப் பாட்டினால் வானமும் கெட்டு இறையினிடத்தில் ஒடுங்கும் என்பது காண்க.

ஊழிகளிற் செய்தனபோன்ற செயல்களில் நினது ஒரு செயலையே காட்டுகின்றது. அந்தப் பண்டை யூழிக்காலங் களில் நீ செய்தவை இவை யென்று எவரும் அறியார். அங்ஙனம் உணர்தற்கு அரிய சக்கரத்து அண்ணலே! நின்னைப் போற்றுகின்றோம்; வணங்குகின்றோம்.

பெருமானே! நீ வெண்சங்கு போன்ற தூய வெள்ளை நிறமுடைய பலதேவனுக்கு இளையவன் என்று கூறுவார்க் குப் பிறப்பு முறையால் அங்ஙனம் இளையனாகக் கருதப் படும் நிலைமையுடையை; அங்ஙனமன்றி நின் பண்டைக் கோலங்கருதி பனைக்கொடியோனாகிய பலதேவனுக்கு முதி யோன் என்பார்க்கு முதியனாகக் கருதப்படுந் தன்மை யையும் உடையை; குற்றமில்லாத கொள்கையை யுடைய முனிவர்களால் ஆராயப்பட்ட கெடுதலில்லாத ஞானக் கேள்வியினால் உணரின், நீ உயிர்க்கு உயிராகக் கரந்த சில்லிடந்தொறும் இடந்திகழ் பொருள்தொறும் கரந்து எங்கும் பரந்துள்ளாய் என்பது புலனாகும். இங்ஙனம் இளையன் என்றும் முதியன் என்றும் உயிர்க்கு உயிராய் உள்ளாய் என்றும் முரண்பட வருகின்ற இந்த நிலைமையை ஆராயின், இந்த நிலைமைகள் நின்னிடமிருந்து தோன்று கின்ற பழைமையான சிறப்புக்களேயாகும்.

ஓங்கி உயர்ந்த நீல வானவெளியில் வளைந்து ஒளிரும் வானவில்லைப்போல, நின் அகன்ற நீலமார்பினிடத்தில் பல்வேறு மணிக்கற்கள் பதித்த அணிகலன்களாகிய மணி மாலைகள் வளைந்து தழுவிக்கிடந்து ஒளிர, அவற்றின் நடுவில் அரிய முத்துக்களினால் அழகாகச் செய்யப்பெற்ற நித்திலமதாணி என்ற அழகிய அணிகலன் வெண்மையான முழுநிலாவினைப்போல மிளிர, அந்த நிலாவின்கண் மறுப் போன்று திருமகள் வீற்றிருக்கும் நின் குற்றமில்லாத

மார்பு (தன்கண் திருமகள் வீற்றிருக்கவும் நிலமடந்தையைத் தழுவ விரும்பிய நீ) நிலம் நீரினுள் மூழ்கிக்கிடந்த காலத்தில், அதன்கண் மூழ்கி நின் கொம்பினுல் ஏந்திக் கொண்டுவந்த காலத்தில், அந்த ஊழிப்புனலால் கழுவப் பட்ட கிளர்ந்த புகராகிய புள்ளிகள் உள்ள நின் கொம்பினுல் நிலமகளை அணைந்து மணந்து ஒரு புள்ளியளவாகிய நிலமும் குற்றப்படாத வகையாகக் காத்தனை என்று ஆராய்ந்து சொல்லுவோரின் உரையொடு பொருந்திற்றன்று. (ஒருத்தியை மணக்குங்கால் மற்ருெருத்தியை மார்பின்கண் இருத்தி வைத்திருந்தனேயே இஃது உரையொடு பொருந்துமோ என்று வினவுகின்ருர்.)

கெடாத மன ஊக்கத்தொடு சினந்து ஒருங்கே திரண்டு சூறைக்காற்றைப் போன்று விரைந்து போர் குறித்து எழுந்த அவுணர்களின் கொடிகள் அற்று இற்றுச் செவிகள் செவிடுபட்டு முடிகள் அதிரப் படிகள் நிலைதளர மிகவும் முழங்குகின்ற நின் சங்கு இடிமுழக்கம்போல எதிர்ந்து முழங்கும்.

போரில் பகைவரை அழிக்கும் சிறந்தோனே! நீ ஏந்திய ஆழிப்படை, நின்ற நிலைகெட்டு வேரும் தூரும் மடலும் குருத்தும் பறிக்கப்படாத நீண்ட கரிய பனைகளின்மேலிருந்து பல பதிஞயிரம் பனங்காய்க் குலைகள் தரையில் உதிர்வனபோல, பகைவரின் தலைகள் அவர்களின் உடல்மிசை நில்லாமல் ஒருமுறையிலேயே கொய்யப்பட்டு அந்தத் தலைகள் ஒருங்கே கீழே விழுந்து உருண்டு நெரிந்து சிதறி நிலத்தைக் குருதியாற் சேறுக்கித் தளரச்செய்யும் படியாகப் பகைவருடைய இனிய உயிரை அழிக்கும்.

பகைவரின் கூட்டங்களை ஒருசேர உண்ணும் உன் படைக்கலத்தின் உடல், கூற்றுவனை ஒக்கும்; உருகிநிற்கும்

பொன்னின் நிறத்தையொத்து எரிகின்ற நெருப்பின் நுடக்கம்போன்று விளங்கும் உன் படைக்கலத்தின் நிறம், உன்னுடைய விளங்குகின்ற ஒளிச் சிறப்பினையுடைய இருண்ட நீலமான திருமணியையொக்கும்; நின் கண்கள் புகழடைந்த இரண்டு தாமரை மலரின் பிணையல்களை யொக்கும்; நின் வாய்மை தப்பாது வருகின்ற ஞாயிற்றை யொக்கும்; நினது சிறந்த பொறுமையை ஆராயின் அது அகழ்வாரைத் தாங்கும் பெரிய நிலத்தை யொக்கும்; யாவர்க்கும் நீ அருளுகின்ற மெல்லிய அருள் வானின்கண் மழைபொழிதற்கு நீரொடு நிறைந்து நிற்கின்ற மேகத்தை யொக்கும்; இங்ஙனம் நாவால் மொழிதல் வல்ல முனிவர் களின் அரிய மறைநூல்கள் கூறும். மேற்கூறிய அவற் றையும் அவையல்லாத பிறவற்றையும் பண்பாலும் தொழி லாலும் ஒத்தனை; அங்ஙனம் ஒத்திருந்தும் மேலும் ஒப் பின்றி எப்பொருள்களின் உள்ளும் புறம்பும் நிரம்பி இருப் பவனும் நீயே.

வேதத்துட் சொல்லப்பட்ட வேள்வி முதல்வனது மொழி, நின் உருவம்; தலைமுறை தலைமுறையாக இந்த உலகில் நிலைத்துவந்த வேள்வியில் யூபத்தூணாக நின்று வேள்வியாட்டினைப் பற்றிக்கொள்ளுதல் நின் உணவு; புகழ் பொருந்தி இசைக்கின்ற மறையின்கட் கூறுதலுற்ற முறை மைப்படி அரணியாற் கடைந்து நெருப்பினை மூட்டித் திகழுகின்ற ஒள்ளிய சுடரை[1] வளப்படுத்திக்கொள்ளுதலே அதனை நோக்கியோராகிய பிறரும் கடவுள் உண்டென்று

---

1. ஊனக்கணுர்க்குப் படிமையினும் அந்தணர்க்கு வேள்வித் தீயினும் யோகிகட்கு உள்ளத்தினும் ஞானிகட்கு எவ்விடத்தும் வெளிப்படுதலால் சுடர்வளப்பாடு கோடலே, "அந்தணர் காணும் வரவு" என்றும் கூறினர் என்று பரிமேலழகர் கூறும் உரை நயம் காண்க.

சொல்லவும் நின் பெருந்தகைமைக்கு ஏற்பவும் நீ வேதியர்க்குக் காட்சிகொடுக்கும் வண்ணம் வருகின்ற வரவாகும்.

வாயடையாகிய அமிழ்தத்தை நீ வானோர்க்கு வழங்குதல் வேண்டுமென்று உன் மனத்தகத்துக்கொண்ட அவ்வளவிலேயே அந்த வானோர்களுக்கு என்றும் மூப்படையாத முறைமையும், நீங்குதலில்லாத வலிமையும் சாவாத இயல்பினுடன் சென்று சேர்ந்தன. அத்தகைய முறைமையினையுடைய நின் அடிகளை யாங்கள் பலமுறை வணங்குகின்றோம்; துளக்கமில்லாத நெஞ்சத்துடன் போற்றுகின்றோம்; வாழ்த்துகின்றோம்; குடும்பத்தொடும் குடும்பத்தொடும் ஒருங்குகூடி வழிபாடு செய்கின்றோம்; (எதன் பொருட்டு எனின், பொன்னும் பொருளும் போகமும் விரும்பியல்ல) எங்கள் அறிவு கொடும்பாடு அறியற்க. மெய்யுணர்வு அடைவோமாக என்றே பரவுதும்.

இனி மூன்றும் பாடலை நோக்குவோம்; இதனை இயற்றியவர் கடுவனிளவெயினனார். இப் பாடலின்கண் வடமொழிக் கதைகளை மிகவும் எடுத்தாண்டுள்ளனர். வடமொழி மறையையும் பாராட்டும் கருத்தினராய் அம்மறை கூறியவண்ணம் கூறுகின்றேன் என்கிறார். திருமாலின் திருவடிகளை, 'மறுபிறப்பறுக்கும் மாசில் சேவடி' என்று கூறுகின்றார். மேலும், 'சிவந்தோங்கு உயர்கொடிச் சேவலோய்! நின்சேவடி தொழாருமுளரோ!' என்று வினவுகின்றார். இப் பாடலினுள் திருமாலை,

"தீயினுள் தெறல்நீ; பூவினுள் நாற்றம் நீ;
கல்லினுள் மணியுமநீ; சொல்லினுள் வாய்மைநீ;
அறத்தினுள் அன்புமநீ; மறத்தினுள் மைந்துமநீ;
வேதத்து மறைநீ; பூதத்து முதலுநீ;
வெஞ்சுடர் ஒளியுநீ; திங்களுள் அளியுநீ;
அனைத்துநீ; அனைத்தினுட் பொருளுநீ; யாதலின்

உறைவும் உறைதலு மிலேயே; உண்மையும்
மறவியில் சிறப்பின் மாயமா ரனையை;
முதன்முறை இடைமுறை கடைமுறை தொழிலிற்
பிறவாப் பிறப்பிலே; பிறப்பித் தோரிலேயே.''

என்று கூறும் பகுதி அறிந்து உணர்தற்கு உரியது.

### 3. மூன்றும் பாடலின் பொருள்

மாயையின்கண் மறைந்து எமக்கு அப்பாற்பட்டு நிற்பவனே! அந்த மாயையைத் தன்கண் ஒடுக்கிக்கொண்டு எமக்கு வெளிப்பட்டு நிற்பவனே? மறு பிறப்பு இல்லையாம் படி உயிரின் மாசினை அறுக்கவல்ல மாசில்லாத சேவடியையும், நீலமணி போன்று திகழும் கரிய நிறத்தையும் உடையாய்!

ஆகாயம், காற்று, தீ, நீர், நிலம் என்ற ஐம்பெரும் பூதங்களும், பகலவனும், திங்களும், வேள்வி முதல்வனும் ஆகியவற்றோடு கூடி எட்டு வடிவங்களும், மற்றச் செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி ஆகிய ஐந்தும், அசுரர்களும் விதியின் மக்களாகிய ஆதித்தர் பன்னிருவரும், குற்றமில்லாத எட்டு வசுக்களும், பதினொரு உருத்திரர்களும், அச்சுவினி தேவர் இருவரும் இயமனும் அவனுடைய ஏவலனாகிய கூற்றுவனும் மூவேழு உலகமும் அவ்வுலகினுள் வாழும் உயிர்க் கூட்டங்களும் ஆயவனே! நின்னிடத்திலிருந்து தோன்றிப் பரந்தன என்று, என்றும் மாயாத வாய்மொழியாகிய வேதம் சொல்ல, அதனை யுணர்ந்து தொகுத்துக் கூறினேம். வாய்மொழி என்கின்ற வேதமாகிய நீரோடையில் மலர்ந்த (சிறப்பித்துப் பாராட்டப்பெற்ற) தாமரைப்பூவினுட் பிறந்த பிரமதேவனும், அவன் தந்தையும் நீ என்று வேதியரின் வேதம்

விளம்புகின்றது. அழகு விளங்குகின்ற அணிகலன் அணிந்த அமரரிடமிருந்து கவர்ந்து எடுத்துக்கொண்டு வந்த அமிழ்தத்தினால் தன்னை யீன்ற அன்னையாகிய வினதையின் துன்பத்தை நீக்கிய கருடனை ஊர்தியாக உடையை; அங்ஙனம் அன்னையின் துன்பந்தீர்த்த புள்ளின் வடிவுடன் திகழும் உயர்ந்தோங்கிய கொடியை உடையாய்! நின் சேவடியைத் தொழாதவரும் உளரோ?

அங்ஙனந் தொழப்படும் அடிகளுள் கீழ் ஏழுலகங்களையுந் தாவியளந்த ஓர் அடியினையும் உடையை; அதுவுமன்றி உலகத்தைத் தீயச் செய்கின்ற ஊழிக்காலத்துச் செந்நெருப்பும், இயமனும், அவனுடைய ஏவலனாகிய கூற்றுவனும், மாசில்லாத ஆயிரங் கதிர்களையுடைய பன்னிரு ஞாயிறுகளும், ஒன்றாய்க் கூடும் ஊழிக்காலத்தில் கடலினுள் மூழ்கி நின்ற நிலமகளை, அச்சத்தையுண்டாக்கும் பன்றியாய் உருவுகொண்டு கொம்பினாற் பெயர்த்து எடுத்துக்கொண்டு வந்து நிலைநாட்டினை எனவும், கரிய வானத்தின்கண்ணிருந்து அளவிறந்து ஒழுகும் புனலை வறளச்செய்யும் பொருட்டு அன்னச்சேவலாய் உருவெடுத்துச் சிறகுகளினால் தாங்கி நீர் புலரச்செய்தாய் எனவும், இந்நிலவுலகத்து முனிவர்களும், வானின்கண்ணுள்ள முப்பத்து மூன்றுவகைத் தேவர்களும் நின்னை விரும்பிப் பாடுவார்கள். அவர்கள் பாடும் முறைமையும் அவர்களின் முன்னோர்கள் பாடும் வகைதான்; யாங்கள் பாடுவது அவர்கள் பாடும் அந்த வகைதாம்; அங்ஙனம் பாடுதலன்றி நின் தொன்மையை அறிவது எங்ஙனம் இயலும்?

கூந்தன்மா (பிடரிமயிரையுடைய குதிரை)' என்று கண்டோர் கருதும் வடிவுகொண்ட கூந்தல் மாவினது எரிசினம் அடங்க அடக்கி (அந்தக் கேசி என்னும்

அசுரனை) வென்றோய்! நின கைகள் நின் புகழை ஒத்தன; நீ மோகினி வடிவங்கொண்டு அமிழ்து வழங்கியபோழ்து நீ சிரித்த சிரிப்பே அவுணர்களுக்கு அச்சமாக முடிய, நல்ல அமிழ்தத்தைத் தேவர்கட்குமட்டும் வழங்கிய நடுவு நிலை திறம்பிய நயமில்லாத ஒரு கையினை ஆக இரண்டு கையையுடைய திருமாலே! மூன்று கையையுடைய முனிவனே! நான்கு கைகள் உடைய பெரியோனே! ஐந்து கைகள் உடைய வலியோனே! ஆறு க்கைகள் உடைய நெடிய வேளே! ஏழு கையுடைய ஒருவனே! எட்டுக் கையுடைய ஏந்தலே! ஒன்பது பெருங்கைகளையுடைய நிலை பெற்ற பெருமையையுடையோனே! பத்துக்கைகளையுடைய மதமுள்ள வலிய யானைபோன்றவனே! நூறுகைகளை யுடைய ஆற்றலின் வடிவாயினவனே! ஆயிரமாக விரித்த கைகளையுடைய மாயங்கள் வல்ல வீரனே! பதினாயிரங் கைகளையுடைய பழைமையான புகழுடைய முதல்வனே! நூறாயிரங் கைகளையுடைய நன்னெறியை அறிவிக்கின்ற கடவுளே! இவை அவ்வளவு மல்லாமல், ஆம்பல் என்ற பேரெண்ணினால் இவ்வளவென்று எண்ணின் வரம்பு அறி யாத வண்ணம் அடுக்கிக்கொண்டே செல்லலாம். அவ் வளவு யாக்கையை யுடையாய். நின்னை உயர்வுகூறக் கரு தின் அந்த முறைமையை நீயே உணரினல்லது பிறரால் உணரப்படுதியோ! பழைமையான மரபினையுடைய முது மொழியாகிய வேதத்திற்கு முதல்வனே! நின்னைப்பற்றி நுவலும் பொருட்டு விரிந்து அகன்ற ஆகமங்கள் எல்லா வற்றாலும், அகங்காரத்தாலும், மனத்தினாலும், உணர் வினாலும் மற்றும் எல்லாவழியாலும் நின் வனப்பும் வரம் பும் அறியப்படாத முறைமையினையுடையாய்! பிறைமதி யாகவும் வளர்மதியாகவும், நிறைமதியாகவும், ஒளி மதியாகவும் அழகிய குளிர்ச்சியுடன் விளங்குகின்ற

இனிய கதிர்களையுடைய நிலவினை உணவாகவுடைய அம ரர்க்கு முதல்வனும் நீ.

நீ இந்தப் பேருலகத்தை யளக்கும்போது ஓடித் திரிந்து அகன்று அயர்ந்து நினக்கு அஞ்சிக் கடலின்கட் பாய்ந்த முறுக்கவிழ்ந்த மலர்மாலையை அணிந்த அவுணர் கள் பட்டொழிய, அங்ஙனம் பட்டொழிந்தோர்க்கும் படா மல் எஞ்சிநிற்கும், அவுணர்க்கும் முதல்வன் நீயே. ஆதலால் நின் முறைமையை உணர்வார் நினக்குப் பகைவரும் இல்லை; நண்பரும் இல்லை என்ற வகையை உணர்வார்கள். ஆயிரந் தலைகளையுடைய சேடனாகியபாம்பினை வாயின்கட்கொண்ட கருடச் சேவகனாகிய ஊர்தியும், செங்கண் மாலே! ஓவென்று அலறி நின்னை அழைக்கும்படியான காலமுதல்வனும் நீயே! நின் தன்மையை ஏஎ என வியந்த வேதம் சொல்லு தலினாலே இந்தத் தன்மையை நன்கு அறிந்தோம்.

தீயினுள்ளமைந்த அழிக்கும் பண்பும் நீயே; பூவினுள் நறுமணமும் நீயே; கல்லினுட் டோன்றுகின்ற மாணிக்க மணியும் நீயே; சொற்களுள் வாய்மையும் நீயே; அறத்தி னுள் அன்பும் நீயே; ஆண்மைச் செயலுள் வலிமையும் நீயே; வேதத்தினுள் நுண்பொருளும் நீயே; பூதங்களுக்கு முதலும் நீயே; வெப்பமான ஞாயிற்றின்கண் ஒளியும் தண்மையான நிலாவின்கண் அளியும் நீயே; எல்லாமும் நீ; எல்லாப் பொருள்களின் உட்பொருளும் நீ; ஆதலால் நீ எங்கும் உறைதலுமில்லை; உறையும் இடமுமில்லை. மறதியுடையார் மறதியினால் நின்னைச் சிறப்பிக்குங் காரண மாக மேற்கூறியவற்றிற்கு முரணாக உரைப்பது பொய்; நீ மேலே கூறிய தன்மைகளையுடையை; உலகில் முதலி னும் இடையினும் கடையினும் படைப்பு அளிப்பு அழிப்பு என்னுந் தொழில்களைச் செய்வதற்காக நீ பிறவாத பிறப்

பில்லை; ஆனால், நின்னைப் பிறப்பித்தோரும் இல்லை; பிறவாத பூவையாகிய காயாம்பூவின் நிறத்தினையுடையாய்; அருளே வெண்கொற்றக் குடையாக, அறமே (செங்கோலாக) குடைக்குக் காம்பாக, வேறொரு குடை நிழல் படாதவண்ணம் மூவேழுலகத்தையும் தன் ஒருகுடை நிழலின்கண் ஆக்கிய இனிய காவலினை உடையாய்.

பாழ் என்ற புருடதத்துவமும், ஆகாயமும் முதலிய ஐம்பெரும் பூதங்களும், கன்மேந்திரியங்கள் ஐந்தும், சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐந்தும், மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐந்துடன் மனமும், அகங்காரமும், மான் என்ற தத்துவமும், தொண்டு என்ற மூலப்பகுதியும் என்ற எட்டுத் தொகுப்பான எண்களால் நால்வகை யூழியின் கண்ணும் சிறப்பித்துக் கூறப்படும் மேன்மையுடையாய்! செங்கட்காரியாகிய வாசுதேவனே! கருங்கண் வெள்ளை என்ற சங்கருடணனே, சிவந்த உடம்பினை உடைய காமனே (பொன்கட்பச்சை) பைங்கண்மால் என்ற பசிய உடம்புடைய அநிருத்தனே, குரவைக் கூத்தாடும் காலத்தில் ஆய்ச்சியருக்கு இடப்பக்கத்திலும் வலப் பக்கத்திலும் ஆயினோய், கூத்தாட எடுத்த குடத்தினையும் கலப்பையாகிய படைக்கலத்தையும் உடையோய்! கோவலனே, காவலனே, காணப்படாத மரபினையுடையாய்! அன்பர்களின் விடாத நினைவினையுடையாய்! மாயாத மன்னும் நிலையையுடையவனே! உலகத்தையாளும் மன்னவனே! பழைமையான இயல்பையுடைய புலவனே! நல்ல யாழ்ப் பாணனே! வனமாலையணிந்த செல்வனே! தோல்வியறியாத சங்கினை இடப்பக்கம் உடையாய்; ஆழியை வலப்பக்கம் உடையாய்; பொன்னுடையணிந்து வெண்சங்கத்தின் நிறத்தொடு மிளிரும் வெள்ளை மாலே? போர் செய்யும் திறல் வாய்ந்த வீரனே! திருமகளின் கணவனே! பெரிய வெற்

றியை யுடைய வீரனே! பெரிய நிலவுலகம் வெளிப்பட்டுக் காணப்படாத ஆதியூழியின்கண் அந்த அச்சந்தரும் ஊழிக்காலத்து வெள்ளத்தின் நடுவே வாய்மொழியாகிய வேதத்தை யுரைக்கும் மகனாகிய பிரமதேவனோடு மலர்ந்த பொகுட்டினையுடைய உந்தித்தாமரை யுடையாய்! நின் நேமியே உலகுக்கு நிழல் தந்து காப்பாற்ற வல்லது.

இனி நான்காவது பாடலை நோக்குவோம்; இந்த நான்காவது பாடலும் கடுவன் இளவெயினனாராலேயே பாடப்பட்டது. மூன்றும் பாடலைப்போன்றே இதுவும் விரைந்து இனிதாய் நடப்பது. இதன்கண் திருமாலைப்பற்றி,

"நின், வெம்மையும் விளக்கமும் ஞாயிற்றுள
நின், தண்மையும் சாயலுந் திங்களுள
நின், சுரத்தலும் வண்மையும் மாரியுள
நின், புரத்தலும் நோன்மையும் ஞாலத்துள
நின், நாற்றமும் வண்மையும் பூவையுள
நின், தோற்றமும் அகலமும் நீரினுள
நின், உருவமும் ஒலியும் ஆகாயத்துள
நின், வருதலும் ஒடுக்கமும் மருத்தினுள
அதனால், இவ்வும் உவ்வும் அவ்வும் பிறவும்
ஏம மார்ந்த நிற் பிரிந்து
மேவல் சான்றன எல்லாம்."

என்று கூறும் பகுதி படித்து உணர்ந்து இன்புறுதற்கு உரியன. யாங்கும் நீக்கமற நிறைந்திருக்கின்ற. ஒரு பொருளையே வேறுவேறு பெயரொடும் உருவத்தொடும் புணர்த்திப் பலரும் பலவாறாக இயம்புகின்றனர். எல்லாப் பெயராலும் எல்லா உருவத்தாலும் குறிக்கப்பெறும் பொருளை உண்மையான நெறியின்கண் நிற்போர் உணர்வர்; போற்றுவர்; ஒற்றுமை காண்பர். உண்மை நெறியின்கண் நிற்பவர் போன்றிலங்கும் பொய்மைப் போலிகளே "நின் தெய்வம் வேறு; என்தெய்வம் வேறு" என்று

கலாம் விளைத்து நாட்டைக் காடாக்கித் திரிவர். அவர்கட்கு அறிவுகூறும் வண்ணமாக இப்பாடலில் அமைந்த பகுதியை நோக்கின், அது மிகவும் இன்புறற்பாலதே என்க.

"அழல்புரை குழைகொழு நிழல்தரும் பலசினை
ஆலமும் கடம்பும் நல்யாற்று நடுவும்
கால்வழக் கறுநிலைக் குன்றமும் பிறவும்
அவ்வவை மேய வேறுவேறு பெயரோய்
எவ்வயி னோயும் நீயேநின் னார்வலர்
தொழுதகை யமைதியி னமர்ந்தோயும் நீயே
அவரவர் ஏவ லாளனும் நீயே
அவரவர் செய்பொருட் கரணமும் நீயே."

என்று இயம்பும் பகுதிகளை நோக்கிச் சமயப்பூசலை விடுத்து மக்கள் உய்வார்களாக. பண்டைத் தண்டமிழ்ச் சான்றோர் பெயர்வேற்றுமை காரணமாகக் கலாம் விளைத்தா ரில்லை என்பதற்கு இஃதோர் எடுத்துக்காட்டு.

## 4. நான்காம்பாடலின் பொருள்

ஐம்பொறிகளால் உளதாகும் மயக்கஇருள் அறும் வண்ணம் தவமுயற்சியால் நீக்கி, நால்வகைப் பயிற்சியால் மனமாசறுத்து மனத்தைத் தவநெறியாகிய ஒரு நெறியின் கண்ணே செலுத்திய நின் அன்பர்கள் நின்னைத் தொழுது போற்றி நின் புகழை விரித்து உரைத்தனர். சொல்லுங்கால் அவை நினக்கு இயல்பான புகழேயன்றி வியக்கத் தக்கன அல்லது என்பது அறிந்தோம் எனினும், ஈங்கே அவற்றுட் சிலவற்றை யாம் நெறி பிறழக்கூறும் முறைமை நோக்கி நீ நகுதலுங் கூடும். அந்த நகையைப் பெறுதலும் எமக்கு ஒரு தகுதியேயாகும். ஆதலால் யாமும் யாம் அறிந்த வண்ணம் நின்னைப் போற்றி வழிபடுதற்கு உரியோம்.

அழகிய நீலமணியையும், திரையடங்கிய கடலையும்,சூற் கொண்டுவரும் மேகத்தையும் ஒக்கும் நின் பெரிய திரு மேனி. அந்தப் பெரிய நீலத் திருமேனியொடு மாறுபட்ட பொன்னிறமான உடுக்கையை உடையாய்; பகைவர் உயி ருடன் மாறுகொண்ட சக்கரத்தையுடையை;குற்றமில்லாத செங்கண்ணையுடைய செல்வனே! பிருங்கலாதன் (பிரக லாதன்) நின்னைப் புகழ, அதனைப் பொறுமல் சீற்றங் கொண்ட நெஞ்சினையும் சாந்தம் புலர்ந்த மார்பினையு முடைய இரணியன், அவனைப் பலவாறு பிணித்து வருத்த, அந்தத் துன்பத்தினுல் ஒடுங்குதற்குக் காரணமான துன்பம் மிக்கு ஒடுங்கிய நடுக்கம் அடைந்த காலத்திலும் தன் தந்தை யென இகழாமல் நிற்ப, அவன் தந்தையை நீ கொல்லுவ தற்கு அவன் நெஞ்சு பொறுக்கும் வண்ணம் அவன் நெஞ்சி லும் புகுந்து நின்று இரணியன் மார்பினையும் பிளந்த கைநகத்தினை உடையை.

நீ நீரினுட் கிடந்த நிலத்தைக் கொம்பினுல் தாங்கிக் கொண்டு வந்து நிறுத்திய செயல் உலகினைத் தாங்கி நிற் கின்றதெனப் பலரால் புகழப்படும் மேருமலையின் செய லோடு ஒக்கும்.

உன்னுடைய வெம்மையும் விளக்கமும் ஞாயிற்றி னிடத்தும், தண்மையும் மென்மையும் திங்களிடத்தும், அருளும் வண்மையும் மாரியினிடத்தும், காவலும் பொறையும் நிலத்தினிடத்தும், நறுமணமும் ஒளியும் காயாம்பூவி னிடத்தும், தோற்றமும் அகலமும் கடலி னிடத்தும், உருவமும் ஒளியும் ஆகாயத்தினிடத்தும், வரு கையும் ஒடுக்கமும் காற்றினிடத்தும், உளவாதலைக் கண் டேம். இவையும் இவைபோல்வன பிறவும் நின்பாலிருந்து பிரிந்து நின்றுற் காக்கப்பட்டு நின்னைத் தழுவியே அமைந் துள்ளன.

கருடச் சேவற் கொடியை உடையானே! நின் உயர்ந்த மற்றொரு கொடி பனை; மற்றொரு உயர்கொடி கலப்பை; வேறு ஓர் உயர் கொடி யானை; நினக்குப் பொருந்தாத கொடியே உலகில் இல்லை. என்றாலும் எல்லா வற்றிலும் உயர்ந்த கொடி கருடக் கொடியே. அதனோடு ஒப்பது எதுவுமில்லை; இந்தக் கொடிகளுள் கருடன் ஒன்று தான் பாம்பின் உடல், உயிர் இவற்றை ஒருசேர உண்ண வல்லது; அந்தக் கருடனின் இடுப்பிற் கட்டப்பட்ட பட்டிகையும் பாம்புதான்; பாம்பே அவனுக்குத் தோள் வளை; பாம்பே அவனுக்குத் தலைமாலை; பாம்பே அணிகலன்; அவன் தலையினிடத்து உச்சிக் கொண்டையும், சிறகுகளுக் கும் பக்கமாக அணி செய்வனவும் பாம்பே யாகும். அவன் உணவும் பாம்பேயாகும். வெம்மையுடையாரிடத்து அவ் வெம்மையாயிருந்து சீறி வருத்துவாய்; தண்மையுடையா ரிடத்து அந்தத் தண்மையாயிருந்து அருள்புரிவாய்; இவ்வா றன்றி இருவினையும் இல்லாரிடத்து நீயும் அவ்வாறே யாவாய்; உனக்குப் பகைவரும் இல்லை; அன்பரும் இல்லை; அன்பர்கள் மனத்திற் கொண்ட வடிவேயன்றி நினக்கென வேறு வடிவமும் நினக்கில்லை; நீலமணி போன்ற மேனி யிடத்து நறுமணங் கமழும் திருத்துழாய் மாலை யணியப் பெற்றுளாய்; நிறத்தால் பொன்போலத் தோன்றிய புகழப் படும் திருமகளாகிய மறுவினையுடையாய்; நின் உந்தித் தாமரைமலரைப் போன்ற கண்கள் உடையாய்; அள விடற்கரிய தன்மையுடையை; வீடுபேறு தருதலின் நின் னினுஞ் சிறந்த நின் மாசில் சேவடிகளை யுடையை; நின்னி டத்துச் சிறந்த நிறைந்த கடவுட்டன்மையையும்உடையை; இத் தன்மையன அல்லாத பண்புகள் பலவும் உடையை; அவை முனிவர்களின் மறைநூற் பொருளாயுள்ளன.

நீயே ஆலமர் செல்வனாகவும், கடம்பமர் காளையாகவும், ஆற்றிடையமர்ந்த திருமாலாகவும், காற்றின் போக்கினைத் தடுக்கும் கனவரைதோறும் அமைந்த கடவுளாகவும், மற்றும் பிற இடங்களிலுள்ள தெய்வங்களாகவும் வேறு வேறு பெயரும் வேறு வேறு உருவுங்கொண்டு இருக்கின்றாய்; நின் அன்பர்களுக்குத் தொழுந் தகைமை கூடிய அமைதியாக வீற்றிருப்பவனும் நீயே; அன்பர்களுக்கு ஏவலாளனாக இருப்பவனும் நீயே; அவரவர் செய்கின்ற அறம் பொருள் இன்ப வீட்டுக்குரிய செயல்களின் காரணமும் நீயே என்பது, பொருள். இதன்கண் ஏவலாளனும் நீயே என்று கூறியமை காண்க.

பதின்மூன்றும் பாடலில் திருமாலைப்பற்றிக் கூறுவன காண்பாம். இயல்பாக யாண்டும் நீக்கமற நிறைந்த ஒரு செம்பொருளையே தமிழர் வழிபட்டனர் என்பதற்கு இப் பாடலில் வரும் ஓர் எடுத்துக்காட்டு நோக்கத்தக்கது. திருமாலைப்பற்றிக் கூறுகின்றார் ஆசிரியர் நல்லெழுநியார்.

"சுவைமை இசைமை தோற்றம் நாற்றம் ஊறு
அவையும் நீயே அடுபோ ரண்ணல்
அவையவை கொள்ளுங் கருவியும் நீயே
முந்தியாங் கூறிய ஐந்த னுள்ளும்
ஒன்றனிற் போற்றிய விசும்பும் நீயே
இரண்டின் உணரும் வளியும் நீயே
மூன்றின் உணருந் தீயும் நீயே
நான்கின் உணரும் நீரும் நீயே
ஐந்துடன் முற்றிய நிலனும் நீயே."

என்ற பகுதியைக் காண்க. இனி இவ்வாசிரியர், திருமாலுக்குப் பல பண்புகள் கூறி,

"அன்னை என நினைஇ நின்னடி தொழுதனெம்
பன்மா ணடுக்க இறைஞ்சினெம் வாழ்த்தினெம்
முன்னும் முன்னும்யாம் செய்தவப் பயத்தால்
இன்னும் இன்னும்எம் காமம் இதுவே."

என்று கூறி முடிக்குந் தன்மை காணத்தக்கது. "அன்னை என நினைஇ" என்பதற்கு அந்தத் தன்மைகளையுடையை என நினைந்து என்று பொருள் கொள்ளுதலேயன்றி, இரட்டுற மொழிதலால் "தாய்" என்று நினைந்து நின்னடி தொழுதனம் என்ற பொருளுங் கொள்க. திருமாலைத் தாயாக வழிபடுதலுக்கு ஏற்ப இது பொருந்தும்.

"முடிந்தது முடிவது முகிழ்ப்பது மவை மூன்றும்
கடந்தவை யமைந்த கழலி னிழலவை."

என்று காலங்கடந்த கடவுளின் இயல்பினையும் கழற்காலின் இயல்பினையும் கூறுதல் காண்க.

## 5. பதின்மூன்றும் பாடலின் பொருள்

நீலமணி போன்ற பெரிய மலையை இள ஞாயிறு சுற்றி வளைத்துக் கொண்டாற் போன்ற பொன்னுடை யணிந்து, இள ஞாயிற்றை முடிமிசைக் கொண்ட நீல மலைபோன்று தலைமிசை முடிசூடி, மலைமிசை நின்று வீழும் மணியருவி போன்று மாலையணிந்து, கருடக்கொடியை உயர்த்து, வானத்தின்கண் தண்ணிய நிலவினைப்பொழியும் வெண்ணிலாவைப் போன்று இனிய அருளினைப் பொழிகின்ற நேமியையும் உடைய திருமாலே! கார்கால மேகத்தின் இருமருங்கும் செஞ்ஞாயிறும் வெண்மதியும் நின்றிலங்கிறுற் போன்று, ஆழியையும் வெண்சங்கினையும் ஏந்திய கையினுல் மின்னலைப் போன்ற பொன்னுடையையும், அருவியை யொத்த ஆரத்தினையும், அணிந்த நின் திரு வீற்றிருக்கும் மலைபோன்ற மார்பினைத் தொழுவோர்க்கு நினக்கு உரிய துறக்கமும் வைகுண்டமும் உரிமையாம்.

சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றமாகிய ஐந்தும் நீயே; அந்த ஐம்புலன்களையும் கொள்ளும் ஐம்பொறியும் நீயே;

முற் கூறப்பட்ட ஐந்தனுள் ஒன்ருகிய ஒலியை யுடைய ஆகாயமும் நீயே; ஓசையும் ஊறுமாகிய இரண்டனையு முடைய காற்றும் நீயே; ஓசை, ஊறு, ஒளி என்றவற்ருல் உணரப்படும் நெருப்பும் நீயே; ஓசை, ஊறு, ஒளி, சுவை என்ற அவற்ருல் உணரும் தண்ணீரும் நீயே; ஓசை, ஊறு ஒளி, சுவை, நாற்றம் என்ற ஐந்தனுல் உணரும் நிலமும் நீயே. அதனுல் நின்னிடத்தி லிருந்தே இந்த மூவேழு உலகத்து உயிர்த்தொகுதிகளும் உளவாயின.

பாற்கடலின் கண் பாம்பணையின்மிசை அறிதுயில் புரி வோனும் நீயே; நாஞ்சிலாகிய கலப்பையைப் படையாக வுடைய பலதேவனும் நீயே; கடலுள் மூழ்கிக் கிடந்த நிலத்தை நிமிர்த்துக்கொண்டு வந்த ஆதிவராகமூர்த்தியும் நீயே. இங்ஙனம் மூன்றுருவாகிய ஒருவன் நீ; பாம்பின் பகையாகிய கருடனைக் கொடியாகக் கொண்ட செல்வன் நீ; நின் புகழினை வேதம் கூறும்; நின் மேனி கடலையும் நீல மணியையும் காயாம்பூவையும் ஒத்த நிறமுடையது: அரு ளினுல் நீ கூறும் மொழி வலம்புரிச் சங்கின் மொழியையும் வேதத்தின் முழக்கினையும் ஒத்தினியவாம்; சீற்றத்தால் நீ இயம்பும் மொழி, கொண்டலும் இடியும் குமுறுவன வொக்கும்; கடந்த கடக்கின்ற கடக்கும் முக்காலங்களையுங் கடந்து அவையும் நின்கண் ஒடுங்கிய திருவடி நீழ லுடையை; நின்னை வழிபடுவோர் இருவினையும் நீங்கும்; நீ காத்தலாகிய தொழிலிலேயே மிகுந்த விருப்பம் மிகவும் உடையை: நின் கைகளும் கால்களும் கண்களும் வாயும் தாமரை மலர் போல்வன; நின் தோள்வளைகளும் திரு வுந்தியும் திருவடியும் தோளும் பெரியன. திருமார்பும், பின் பக்கமும், திருவுள்ளமும் பெரியன; நின் கேள்வியும் அறிவும் அறத்தொடு நட்பமுடையவை; வேள்வியில் விருப்பம் உடையை; இயல்பாகவே சிவந்த கண்கள்

உடையை; துழாய்மாலையணிந்த அழகிய மார்பினை உடையை; நின்னை அன்ன தன்மைகளை உடையாய் என அன்னை என்று கொண்டு நின்னடிகளை வணங்கினோம், பலமுறை அடுத்தடுத்து வணங்கினோம்; வாழ்த்தினோம்; இவையெல்லாம் முன் யாம் செய்த தவப்பயனால் நிகழ்ந்தன. இன்னும் எங்கள் ஆர்வம் அதுவேதான்.

இனி, பதினைந்தாம் பாடலை நோக்குவோம். இப் பாடல் இளம் பெரு வழுதியால் பாடப்பெற்றது. பாடல் இனிமையாகவும் மிடுக்காகவும் நடக்கின்றது. இருங்குன்றமென்ற திருமாலிருஞ் சோலைமலை இதன்கட் பாடப்படுகின்றது.

"நாறிணர்த் துழாயோன் நல்கின் அல்லதை
ஏறுதல் எளிதோ வீறுபெறு துறக்கம்."

என்று கூறுகின்றார். பெறுதற்கரிய துறக்கத்தை எளிதிற் பெறச் செய்கின்ற இருங் குன்றத்தை ஏத்தி வழிபடுவோம் என்கின்றார்.

"இருங் குன்றத் தடியுறை இயைகெனப்
பெரும்பெயர் இருவலரைப் பரவுதுந் தொழுதே."

என்று கூறுவதனால் திருமாலின் மேல் இப் புலவர் வைத்த பற்றுதலையும் இருங்குன்றத்தின் கண்ணேயே தங்கிவிட வேண்டுமென்னும் அவரது ஆர்வத்தையும் உணரலாம்.

### 6. பதினைந்தாம் பாடலின் பொருள்

உலகத்து உயிர்களைப் பாதுகாத்துத் தாங்கிக்கொண்டு அறிவெல்லையால் அறியப்படாத புகழையுடைய நேமி மலை முதலிய மலைகள் பலவுள; அவற்றுள் உலகத்தாரின் பசித் துன்பத்தைப் போக்கி எல்லாப் பயன்களையும் எல்லோரும் பெற உதவும் மலைகள் சிலவே; அவற்றுள்ளும் தெய்வங்

காதலித்துறையும் மலர்கள் உடைய நீர்த்தடாகங்களும் கொண்டல் தவழும் கொடுமுடிகளும் உடைய குலவரைகள் சிலவே சிறந்தன; அவற்றுள் அலைகள் கல்லென்று அறைகின்ற நீலக்கடலும் வெண்மணல் பரந்த கானலும் போல, வேறுவேறாகிய வண்ணங்களையும், சொல்லினையும் பொருளினையும் போல, வேற்றுமைப் படாத தொழிலையுமுடைய மாயோனும் பலதேவனும் எழுந்தருளியிருக்கும் சோலைமலை மிகவும் மேம்பட்டது. துழாய்மாலை யணிந்த திருமால் அருளாவிடின் துறக்கம் ஏறுதல் எளிதோ? அரிதிற் பெறுந் துறக்கத்தை எளிதிற் றருகின்ற இருங் குன்றமாகிய திருமாலிருஞ் சோலை மலையை யாம் போற்றி வழிபடுவோமாக.

பலதேவரது திருமார்பின்கட் கிடந்து மிளிரும் வெண்கடப்ப மாலையைப் போன்று, அருவி வீழ்வதனால் சிலம்பாறு அழகுடன் மிளிர்கின்றது.

இருங்குன்றத்தின் பெயர், யாங்கணும் பரவும் வண்ணம் மகளிரும் ஆடவரும் காமத்தை விதைத்து விளக்கும் யாமத்தின் இயல்பையுடைய அக்குன்றத்தில் இளவெயிலை உடுத்துக்கொண்டு இருள் வளர்தல்போல பொன்னுடை யணிந்து நீலமணிபோல மிளிருந் திருமால் வெள்ளை நிறப் பலதேவரோடு நிற்குங் காட்சியை மக்களே, நினைந்து வழிபடுங்கள்.

"சுனையெலாம் நீலம் மலரச் சுனைசூழ்
சினையெலாஞ் செயலை மலரக் காய்கனி
உறழநனை வேங்கை யொள்ளிணர் மலர
மாயோ னொத்தஇன் னிலைத்தே
சென்று தொழுகல்லீர் கண்டுபணி மின்மே."

என்கின்றார்.

மகவு தழுவிய மந்தி பாயவும், முல்லைமலர் கற்பின் இயல்பு காட்டவும், மயில்கள் அகவவும், குருக்கத்தியின் இலைகள் உதிரவும், குயிலினம் கூவவும், இவ்வொலிகள் இருங்குன்றக் குகைக்குட் சென்றெதிர்த்தொலிக்கும் எதிரொலி என்றும் நீங்காது. நும் மனைவியரொடும், இரு முது குரவரொடும், மக்களொடும் ஒக்கலொடும் அக் குன்றத்தைத் தெய்வமாகப் போற்றி வழிபாடு செய்ம்மின். தன் உந்தியின் மலர்ந்த மலர் போன்ற கண்ணையுடையவனும், நீலக் கொண்டல், காரிருள், கழுவிய மணி ஆகியவற்றையொத்த திருமேனியுடையவனும், எல்லா உலகத்தும் வெளிப்பட்டு உயிர்களின் மறுக்கங்கள் தீர்ப்போனுமாகிய திருமால் அன்புடன் விரும்பி இருங் குன்றத்தை இடமாகக் கொண்டுள்ளான். திருமாலே! பசுந்துழாய் அணிந்தனை; நீலமலை போன்றாய்; மிக்க ஒளியுடையை; ஒற்றைக்குழையினை; கருடக்கொடியினை; கலப்பைப் படையினை; படைக்கலம் பலவும் ஏந்தினை.

இங்ஙனம் மறைகள் அவன் பெருமை ஈதென்று அறைதலால், யாமும் அவற்றுட் சில கொண்டு கூட்டி உரைத்துத் திருமால் பலதேவர் என்னும் இருவரையும் வணங்கி அவ் விருங் குன்றத்தின் அடியிலேயே வாழும் வாழ்வு எமக்கு உண்டாகுக என்று வேண்டுவோமாக.

இனிப் பரிபாடற் றிரட்டிலுள்ள திருமாலைப் பற்றிய பாடலை நோக்குவோம். இப் பாடல் இனிய நடையும் தெளிவும் ஒட்டமும் இயற்கை யழகும் உடையது; உரையின் உதவியில்லாமலே உணரக்கூடிய அளவில் நடக்கின்றது; கவிதைநலங் கனியப் பாடப்பெற்றுள்ளது; இருந்தையூர் எம்பெருமான் சீர்பரவிப் போற்றுகின்றது. சுற்றத்துடன் பிரியாவண்ணம் அவனடி போற்றுதுமென்று பாடலை முடிக்கின்றார்.

ஆங்கே ஆதிசேடன் கோவிலில் மக்கள் வழிபடும் முறையைக் கூறுந்தன்மை பாராட்டற் பாலது.

"புலத்தோ டளவிய புகழணிந் தோரும்
நலத்தோ டளவிய நாணணிந் தோரும்
விடையோ டிகலிய விறனடை யோரும்
நடைமடம் மேவிய நாணணிந் தோரும்
கடல்நிரை திரையில் கருநரை யோரும்
சுடர்மதி கதிரெனத் தூநரை யோரும்."

இடையொழிவின்றி வழிபாடு நடத்துகின்றனர் என்று பாடுகின்றார். இதிற் கூறப் பெறும் இயற்கை வருணனை யில் ஒன்றுகாட்டி முடிப்போம்.

"ஒருசார், தண்ணறுந் தாமரைப் பூவின் இடையிடை
வண்ண வரியிதழ்ப் போதின்வாய் வண்டார்ப்ப
விண்வீற் றிருக்குங் கயமீன் விரித்தகையின்
கண்வீற் றிருக்குங் கயம்."

இதுவரை திருமாலைப்பற்றிப் பண்டைத் தண்டமிழ்ச் சான்றோர் கூறியவற்றை நோக்குவதனால் உண்டாகும் பயன் என்னையெனின், எவ்வுருவத்தால் எந்தப் பெயரால் எவ்வாறு வழிபாட்டாலும் எல்லாவற்றாலும் குறிப்பிடப் பெற்ற பொருள் ஒன்றே என்று உணர்தலும், சமயப்பூசலை நிறுத்திச் சான்றோராக வாழ்தலும், வழிபாடு செய்தலுமே என்க. காழ்ப்பும், வெறுப்பும், பொறாமையு மில்லாத நிலை யில் வழிபாடு செய்து, அன்பு நிலவிநின்ற காட்சியையே பரிபாடல் காட்டுகின்றது; புராணக் கதைகளும், வேதக் கருத்தும் விராவிக்கிடப்பினும், இறைநிலையைப் பிழைபட உணராத மேன்மை நிலவிற்றென்று உணர்தல் வேண்டும்.

---

# உ. செவ்வேள்

[திரு. சா. கணபதி முதலியார், எம்.ஏ., எல்.டி., அவர்கள்]

## க. தொகை நூல்களும் பரிபாடல் விளக்கமும்

ஈண்டிய வளனுடைய பாண்டிய நன்னாட்டு மதுரையில் இருந்து நற்றமிழாய்ந்தோர் முடத்திருமாறன் முதலாக உக்கிரப்பெருவழுதி ஈறாக நாற்பத்தொன்பதின்மர் என்பர். இந் நாற்பத்தொன்பதின்மரும் நுண்மாண் நுழைபுலமிக்கவர்; பாடறிந்து ஒழுகும் பண்புடை நல்லவர்; ஆன்றவிந்து அடங்கிய கொள்கைச் சான்றாண்மை மிக்கவர். இவர்களுள் கவியரசராயினார் பலர்; புவியரசராயினார் சிலர்; அந்தணராவார் சிலர்; வேளாளராவார் பலர்; பார்புரக்கும் பார்த்திபரின் படைமடம் பகர்ந்தோர் சிலர்; கொடைமடம் கூறினோர் பலர்; அகம் பாடினோர் பலர்; புறம் பாடினோர் சிலர்; அரசர்க்குக் காலத்தால் அறவுரை கூறித் தம் சீலத்தால் உயர்ந்தோர் பலர்; மாந்தர்க்கு மதியுரை கூறித் தம் மாண்பால் மிளிர்ந்தோர் சிலர். ஈடும் எடுப்புமில்லா இந் நல்லிசைப் புலவர் அனைவரும் பண்டைத் தமிழர்வரலாற்று ஏட்டில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கத் தக்கார். இவர்கள்தாம் பொதுவில் உலகிற்கும், சிறப்பில் தமிழகத்திற்கும் பேரருளால் ஈத்துவந்த நூல்கள் எட்டுத் தொகை, பத்துப் பாட்டு, பதினெட்டுக் கீழ்க்கணக்கு என்பனவாம்.

"நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு
ஒத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
கற்றறிந்தா ரேத்துங் கலியே அகம்புறமென்
றித்திறத்த எட்டுத் தொகை."

என்பவை எட்டுத்தொகை நூல்களாம்.

இவற்றுட் பரிபாட லென்பது எட்டுத்தொகையுள் ஐந்தாவதாய் மிளிர்வது. தொகை நூல்கள் எட்டனுள் சிறப்படைபெற்று நிற்கும் நூல்கள் மூன்றும். அவற்றுள் 'நல்ல' என்ற முன்னடை பெற்று விளங்கும் குறுந்தொகை ஒன்றும்; 'ஓங்கு' என்ற சிறப்படை பெற்று இலங்கும் பரிபாடல் மற்றொன்றும்; 'கற்றறிந்தார் ஏத்தும்' என்ற தொடரை பெற்றுத் துலங்கும் கலித்தொகை பிறிதொன்றும். பரிபாட்டமுதம், இம் மூன்றனுள் குன்றின்மீதிட்ட விளக்கென நடுவணின்று ஒளிவிடுவதாகும். இந் நூலைக் கற்பார் பல்லாற்றானும் ஓங்குவர் என்பது வெள்ளிடைமலை.

எட்டுத்தொகை நூல்களை நுதல்பொருள்களைக் குறித்துப் பகுக்குங்கால், அவை முக்கூற்றினவாகத் திகழா நிற்கும். நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு ஆகிய ஐந்தும் அகப்பொருள் பற்றியன; புறநானூறு, பதிற்றுப்பத்து ஆகிய இரண்டும் புறப்பொருள் பற்றியன. பரிபாடல் ஒன்றே பொருளால் தனிநிலை பெற்று, அறம், பொருள், இன்பம், வீடு நுதலி, மலை விளையாட்டு, புனல் விளையாட்டு, 'கடவுள் வாழ்த்'துடன் பல உறுப்புக்கள் கலந்து வரும் பான்மைத்து. பிற்கால நூல்களைப்போலக் கடைச்சங்க நூல்கள் சிவனைப்பற்றியாதல், திருமாலைப்பற்றியாதல், முருகனைப்பற்றியாதல், விதந்தோதுதல் செய்யா. பரிபாடல் நீங்கலாக ஏனைய தொகைநூல்கள் ஏழினுக்கும் கடவுள்வாழ்த்துப் பாக்களைக் காண்டல் கூடும். பாரதம் பாடிய பெருந்தேவனார்

அகநானூறு, ஐங்குறுநூறு, குறுந்தொகை, நற்றிணை புறநானூறு ஆகிய ஐந்து நூல்களுக்கும் முறையே "கார் விரி கொன்றை", "நீலமேனி வாலிழை பாகத் தொரு வன்", "தாமரை புரையுங் காமர் சேவடி", "மாநிலஞ் சேவடியாக", "கண்ணி கார்நறுங் கொன்றை" என்ற தொடக்கத்தினையுடைய கடவுள் வாழ்த்துப் பாக்களை யாத்துள்ளனர். நல்லந்துவனார் "ஆறறி அந்தணர்க் கரு மறை" என்ற முதலுடன் கலித்தொகைக்கு இறைவணக் கம் பாடிப் போந்தார்.

"எரியெள்ளு வன்ன நிறத்தன்" என்ற செய்யுள் பதிற்றுப் பத்துக்குரிய கடவுள் வாழ்த்துச் செய்யுளென்று இஞ்ஞான்று புலவர் பெருமக்களால் ஊகிக்கப்படுகின்றது. அச் செய்யுளைப் பாடிய புலவன் யாவன் என்பதனையும் இதுகாறும் அறிந்திலோம். எனவே, இவ்வேழு தொகை நூல்களும் மேலே கூறப்பட்ட கடவுள் வாழ்த்துப் பாக்க ளோடு ஆதிரைமுதல்வன் ஆலமர்செல்வன், முக்கட் செல்வன், ஆனேற்றுக் கொடியோன், நீலமணிமிடற் றொருவன், நெடியோன், பைங்கட் பார்ப்பான், நெடுவேள் என்ற சொற்றொடர்களோடன்றி சமய நுட்பங்களையோ கோட்பாடுகளையோ எங்ஙனும் புலப்படுத்துவன அல்ல. பரிபாடல் அங்ஙனமின்றிச் செவ்வேளைப் பற்றியும், திரு மாலைப்பற்றியும் வரலாற்றுக் குறிப்புக்களையும் அக்கால வழிபாட்டு முறைகளையும் நன்கு எடுத்து இயம்புகின்றது. எனவே, தொகை நூல்கள் எட்டனுள் தனிக் கடவுள் நூல் என்ற பெயர்க்குரியது பரிபாடல் ஒன்றேயாம் என்பது தெளிவு. என்னை? பிற தொகைநூல்களும் பத்துப் பாட்டும் இறையுணர்வை எழுப்பும் சமய இலக்கியங்கள் அல்லவோ எனின் அற்றன்று. அவை கடவுட் கொள்கை களையும், சமய நுண்பொருள்களையும் புலப்படுத்தும் நூல்

கள் தாம் என்பதற்கு ஒரு சிறிதும் ஐயமின்று. ஆனால், பரிபாடல் போல அத்துணை வெளிப்படையாய் அங்கை நெல்லியெனச் சமயக்கோட்பாடுகளையும் உட்கிடக்கைகளையும் புலப்படுத்தா. பரிபாடலில் செவ்வேட்குரிய பாடல்கள் 5, 8, 9, 14, 17, 18, 19, 21 ஆகிய எண்களைத் தாங்கிய எட்டுப் பாடல்கள்; திருமாலைப்பற்றிய பாடல்கள் 1, 2, 3, 4, 13, 15 ஆகிய எண்களையுடைய ஆறுபாடல்கள். இப் பதினான்கு பாடல்களும் முறையே செவ்வேளைப்பற்றியும் திருமாலைப் பற்றியும் ஐயந்திரிபின்றி எடுத்தோதும் திருநெறித் தமிழ்ப்பாக்களாம்.

இனி, பரிபாடல் என்ற சொற்றொடரையும் அதன் யாப்பு முறையையும் ஆராய்வாம். பரிபாடல் பரிபாட்டெனவும் வழங்கப்பெறும். பரிபாடல் என்பதற்கு பரிந்து வருவது; ஏற்று வருவது என்பது பொருள். உரையாசிரியர்கள் இதனையே பலவேறு முகத்தான் வலியுறுத்துவர். "பரிபாட்டாவது, பரிந்த பாட்டு பரிபாட்டெனவரும், அஃதாவது ஒரு வெண்பாவாக வருதலன்றிப் பல வெண்பாவுமாகிப் பல வுறுப்புக்களோடு தொடர்ந்து ஒரு பாட்டாகி முற்றுப் பெறுவது" என்பது இளம்பூரணருரை. "பரிபாட லென்பது பரிந்து வருவது; அஃதாவது, கலியுறுப்புப் போலாது பல வடியும் ஏற்று வருவது" என்பது பேராசிரியர் உரை. "பரி பாடலென்பது பரிந்து வருவது; அது கலியுறுப்புப் போலாது நான்கு பாவானும் வந்து பல வடியும் வருமாறு நிற்குமென்றுணர்க" என்பது நச்சினார்க்கினியருரை.

பரிபாடல் பரிபாட லென்னும் பாவால் தொகுக்கப் பெற்றமையின் அப்பெயர் பெற்றதென அதன் இலக்கணங் கூற முற்படுவர் யாப்பறி புலவர். பரிபாடல்,

வெண்பா யாப்பி னியல்பைக் கொண்டு வருவது. வெண்பா யாப்பாவது "வெண்சீரானும் இயற்சீரானும் வெண்டளை யானும் செப்பலோசையானும் அளவடியானும் முச்சீர்ற் றடியானும் வருவது." இவ் வெண்பா யாப்பில் வருவன நெடுவெண் பாட்டு, குறுவெண் பாட்டு, கைக்கிளை, பரி பாடல், அங்கதம் எனும் ஐந்துமாம்.

"நெடுவெண் பாட்டே குறுவெண் பாட்டே
கைக்கிளை பரிபாட் டங்கதச் செய்யுளோ
டொத்தவை யெல்லாம் வெண்பா யாப்பின."

என்ற தொல்காப்பியப் பொருளதிகாரச் செய்யுளியல் 118ஆம் நூற்பா இதற்குச் சான்றுதல் காண்க: இங்ஙனம் கூறிய தொல்காப்பியரே பரிபாடற் செய்யுளுக்கு ஒரு புற னடையும் அடுத்துக் கூறினர்.

"பரிபா டல்லே தொகைநிலை விரியி
னிதுபா வென்னு மியனெறி யின்றிப்
பொதுவாய் நிற்றற்கு முரித்தென மொழிப."

என்றதனுல் "பரிபாடல் வெண்பா வுறுப்பாக இன்ன பா வென்ப துணராமைப் பொதுப்பட நிற்றற்கு முரித்து;" என அதன் பொதுத் தன்மையையும் நம் கருத்துட் புகுத் தினர். அன்றியும் பரிபாடல்,

"கொச்சக மராகஞ் சுரிதக மெருத்தொடு
செப்பிய நான்குந் தனக்குறுப் பாகக்
காமங் கண்ணிய நிலைமைத் தாகும்."

கொண்டு நடக்குமென்பது தொல்காப்பியம்.

"தரவே யெருத்த மராகங் கொச்சக
மடக்கியல் வகையோ டைந்துறுப் புடைத்தே."

என்பது அகத்தியம். "தரவாவது மற்றையுறுப்பின் பொருள்களைத் தொகுத்துத் தந்து கலிப்பாவின் முத லுறுப்பாய் முன்னிற்பது. தரவு தருதலையுடையது. தரம்

போன்று நிற்றல் பற்றித் தரவெனப்பட்ட தென்பாரு முளர். தரம்-தலை. எருத்தம் என்றும் இதற்குப் பெய ருண்டு" என்பது யாப்பருங்கலக் காரிகை உரை. எருத் தென்பது கழுத்தின் புறத்திற்குப் பெயராக வேண்டுமாத லானும் பாட்டிற்கு முகம் தரவு ஆகலானும் எருத்தென் பது தரவெனக் கோடல்வேண்டு மென்பர். "கொச்சகம் என்பது ஒப்பினாகிய பெயர். ஓராடையுள் ஒரு வழி யடுக்கியது கொச்சகம் எனப்படும். அதுபோல ஒரு செய் யுளுள் பல குறள் அடுக்கப்படுவது கொச்சகமெனப்பட் டது", என்பது பேராசிரியர் கண்ட வுரை. "பல கோடுபட அடுக்கி யுடுக்கும் உடையினைக் கொச்சகம் என்பவாகலின், அதுபோலச் சிறியவும் பெரியவும் விராய் அடுக்கியும் தம் முள் ஒப்ப அடுக்கியும் வரும் செய்யுளைக் கொச்சக மென்றார். இது ஒப்பினாகிய பெயர். இக் காலத்து மக ளிர்க்குரியதாய்க் கொய்சகமென்று வழங்கிற்று" என்பது நச்சினார்க்கினியர் கொண்ட உரை. "பெரும்பான்மையும் கொச்சகவுறுப்புப் பயின்று வருதலின், அதனை முன்வைத் தான். அராகம் எழுவாய் ஆகாமையின், அதனை இடை வைத்தான். சுரிதகமென்பது, எஞ்ஞான்றும் ஈற்றதாக லான் அதனை அதன்பின் வைத்தான். எருத்தினை ஈற்றுக் கண் வைத்தான். அதனை யின்றியும் வரும் பரிபாடலென் றற்கு" என்ற பேராசிரியர் உரை விளக்கத்தானும் பரி பாட்டின் உறுப்புக்களைப்பற்றி ஓர்ந்துணர்ந்துகொள்க.

இன்னணம் பல உள்ளுறுப்புக்களைக் கொண்ட பரி பாடல் "காமங் கண்ணிய நிலைமைத் தாகும்" என்ற தொல் காப்பியச் செய்யுளியல் 121—ஆவது நூற்பாவின்படி அறம், பொருள், இன்பம் என்ற மூன்றனுள் இன்பத்தையே முதல்பொருளாகக் கொண்டு கடவுள் வாழ்த்து, மலை விளையாட்டு, புனல்விளையாட்டு முதலியவற்றுள் வந

மென்பர் பேராசிரியர். இதனையே "தெய்வ வாழ்த்து உட்படக் காமப் பொருள் குறித்து உலகியலைப்பற்றி வருமென்பர்" நச்சினார்க்கினியர் தமது அகத்திணையியல் 53ஆவது நூற்பா உரையில். மற்றும் இக் கருத்து, "தெய்வமும் காமமும் பொருளாகவரும்" என்ற யாப்பருங்கல விருத்தியுடையார் உரையானும் வலியுறுத்தப்பட்டமை காண்க. செவ்வேட்குரிய எட்டுப்பாடல்களும் திருமாலுக்குரிய ஆறு பாடல்களும் கடவுள்வாழ்த்துப் பாடல்களாய் முறையே திருப்பரங்குன்றத்தையும், திருமாலிருஞ்சோலையையும் குறித்துப்பாடிய பாடல்களாம். மலைவிளையாட்டுக் கூறுங்கால் இவைகளில் காமப்பொருள் கலந்து வருதலும் உண்டு. வையைக்குரிய எட்டுப்பாடல்களும் ஆடவர் மகளிரின் புனல்விளையாட்டுக் கூறும்பகுதிகள் ஆதலின், அவைகளில் அகப்பொருள் ததும்பி நிற்றல் கண்கூடு.

இப் பரிபாடற்றொகை எழுபது என்பர். இவ்வுண்மை,

"திருமாற் கிருநான்கு செவ்வேட்கு முப்பத்
தொருபாட்டுக் காடுகாட் கொன்று—மருவினிய
வையையிரு பத்தாறு மாமதுரை நான்கென்ப
செய்யபரி பாடற் றிறம்."

என்ற வெண்பாவானும், "கடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்தோரால் பாடப்பட்டன நெடுந்தொகை நானூறும், குறுந்தொகை நானூறும், நற்றிணை நானூறும், ஐங்குறுநூறும், பதிற்றுப்பத்தும், நூற்றைம்பது கலியும், எழுபது பரிபாடலும், கூத்தும் வரியும் பேரிசையும் சிற்றிசையு மென்று இத் தொடக்கத்தன" என்ற இறையனாரகப்பொருள் நக்கீரர் முதல்நூற்பா உரையானும், "நூற்றைம்பது கலியும் எழுபது பரிபாடலு மெனச் சங்கத்தார் தொகுத்தவற்றுள்" என்ற "தாவின்றுகி"

என்ற 149ஆவது தொல்காப்பியநூற்பா இளம்பூரண ருரையானும் நாம் உணரற்பாலதாம். ஆனால் காலஞ்சென்ற டாக்டர் உ. வே. சாமிநாத ஐயரவர்களால் அச்சுவாகன மேற்றப்பெற்ற பரிபாடல் நூலுள் காணப்படுவனவாய் இருப்பவை செவ்வேட்கு எட்டும்; திருமாலுக்கு ஆறும் வையைக்கு எட்டும் ஆகவுள்ள இருபத்திரண்டு பாடல் கள்தாம். இவையன்றிப் பண்டை யுரையாசிரியர்களால் காட்டப்பட்ட மேற்கோள்களிலிருந்தும் புறத்திரட்டி லிருந்தும் எடுத்துப் பதிப்பிக்கப்பெற்ற திருமாலுக்குரிய முழுப்பாட லொன்றும், வையைக்குரிய முழுப்பாட லொன்றும் அதன் உறுப்பொன்றும், மதுரைக்குரிய உறுப்புக்கள் ஏழும் முன்கூறிய இருபத்திரண்டு பாடல் களோடு சேர்த்துக் கணக்கிடவேண்டியவை.

பரிபாடல் எண்வகை வனப்பினுள் இழைபெனும் வனப்பின் பாற்படுமென்பர் பேராசிரியர். இழைபின் தொல்காப்பிய இலக்கணத்திற்கு உரைவகுத்த பேராசிரியர் கலியையும், பரிபாடலையும் அதற்கு எடுத்துக்காட்டு களாகக் கூறினர். கூறிய அவர் மற்றொரு கருத்தையும் அதனுடன் சுட்டிப் போந்தார். அஃதாவது பரிபாடல் இசைப்பா வென்பதாம். "கலியும் பரிபாடலும் இசைப் பாட்டாகிய செந்துறை மார்க்கத்தன" என்பது அவரு டைய நல்லுரை. பரிபாடல், மூவர் திருவாய் மலர்ந்தருளிய தேவாரத் திருப்பாடல்கள் போல பண்டைக்காலத்தில் பண்முறையால் தொகுக்கப்பட்டுத் தக்க பண்களுடன் பாடப்பெற்று வந்தன என்று தெரியவருகிறது. அச் சேறிய பரிபாடல் செய்யுள்களுள் சிதைந்த பாடல்கள் நீங்கலாக மற்றைய பாடல்களுக்கெல்லாம் பண்களையும், பண்களை வகுத்தோர் பெயர்களையும் பாடல்களின் பின்னே குறிக்கப்பட்டிருப்பதை நாம் இன்றும் காண்கின்றோம்.

பரிபாடலின் பேரெல்லை 400 அடிகள்; சிற்றெல்லை 25 அடிகளாம். இந்நூலுள் 140 அடிகளே பேரெல்லையாக அமைந்துள்ளன.

இஞ்ஞான்று கிடைத்த பரிபாடலுள், எட்டுப் பாடல்கள் செவ்வேளைப் பற்றியன. அவ்வெட்டுப் பாடல் களையும் பாடிய செந்நாப்புலவர் எழுவர். குன்றம்பூதனார் 9, 18 ஆகிய இரு பாடல்களையும் பாடிப் புகழெனும் குன்றேறி நின்ற பேரறிஞராவர். பாடிய புலவர்களின் பெயர்கள், முறையே பாடிய பாடல்கள், பண்கள், இசை வகுத்தோர் முதலிய முழுக்குறிப்புக்களை, அடுத்த பக்கத்தி லுள்ள அட்டவணையுள் கண்டறிக:—

## உ. எழுவரும் பாடிய பிறநூல்கள்

செவ்வேளைப் பாடிய ஏழுபுலவர்களும் பாடிய வேறு பாடல்களைப்பற்றிய குறிப்புக்களை ஈண்டு ஒருவாறு தரு வாம். கேசவனார், நல்லழுசியார், நப்பண்ணனார். நல்லச் சுதனார் என்ற நால்வரும் பரிபாடலிலேதான் இடம் பெற் றுள்ளனர். வேறு பாடல்களை இவர்கள் பாடினார்களில்லை. கடுவன் இளவெயினனார் பரிபாடலில் திருமாலுக்கு இரு பாடல்களும் (3,4) முருகனுக்கு ஒருபாடலும் (5) பாடி யுள்ளார். நற்றிணையில் நெய்தல் 263 ஆகிய,

"பிறைவனப்பு இழந்த நுதலும்"

என்ற பாட்டை இளவெயினனார் என்ற புலவர் பாடியதாக அந்நூல் குறிப்பிடுகின்றது. பரிபாடலில் மேலே காட்டிய மூன்று பாடல்களைப் பாடிய கடுவன் இளவெயினனார் என்பவரும் நற்றிணையில் மேலே குறிப்பிட்ட நெய்தல் பாட்டைப் பாடிய இளவெயினனாரும் ஒருவர்தாமோ அல்லது வேறொருவரோ என்ற ஐயம் எழுதல் இயல்பு.

| வரிசை எண் | பாட்டின் முதற்றொடர் | பாடிய புலவர் | பண் | இசை வகுத்தோர் | பரிபாடல் எண் | அடி எண் |
|---|---|---|---|---|---|---|
| 1 | "பாயிரும் பனிக்கடல்" | கடுவன் இளவெயினனார் | பாலையாழ் | கண்ணகனாரிசை | 5 | 81 |
| 2 | "மண்மிசை யவிழ்துழாய்" | ஆசிரியன் நல்லந்துவனார் | ,, | மருத்துவன் நல்லச்சுதனாரிசை | 8 | 130 |
| 3 | "இருநிலந் துளங்காமை" | குன்றம்பூதனார் | ,, | ,, | 9 | 85 |
| 4 | "கார்மலி கதழ்பெயல்" | கேசவனார் | கோதிறம் | கேசவனார் | 14 | 32 |
| 5 | "தேம்படு மலர்குழை" | நல்லழுசியார் | ,, | நல்லச்சுதனாரிசை | 17 | 53 |
| 6 | "போரெதிர்ந் தேற்றார்" | குன்றம்பூதனார் | காந்தாரம் | ,, | 18 | 56 |
| 7 | "நிலவரை யழுவத்தான்" | நப்பண்ணனார் | ,, | மருத்துவன் நல்லச்சுதனாரிசை | 19 | 105 |
| 8 | "ஊர்ந்ததை" | நல்லச்சுதனார் | ,, | கண்ணகனாரிசை | 21 | 70 |
| | எட்டுப் பாடல்கள் | ஏழு புலவர்கள் | மூன்று பண்கள் | நான்கு இசை | எட்டுப்பாடல் 612வரிகள் | |

நற்றிணைப் பாடற் கருத்தையும் பரிபாட்டுப் பாடல் களின் கருத்துக்களையும் ஒப்பிட்டு நோக்குழி இரு வரும் ஒருவரல்லர், வேறுவர் என்பது புலனாகின்றது. அன்றியும் கடுவன் என்ற முதற்சொல் இன்மையால் நற்றிணையில் நெய்தல் செய்யுளைப் பாடிய அவர் வேறு என்பதற்கு எட்டுணையும் ஐயமில்லை.

குன்றம் பூதனார் திருப்பரங்குன்றில் எழுந்தருளி யுள்ள செவ்வேளைப்பற்றி இரு பாடல்கள் (9,18) யாத்துள் ளார். நற்றிணையில் 29-ஆவது "நின்ற வேனிலுலந்த காந்தள்" என்ற பாலைச்செய்யுளைப் பூதனார் என்ற புலவர் பாடியுள்ளார் என்று அந்நூல் கூறுகிறது. பரிபாடல் பாடிய குன்றம்பூதனார் யார்,நற்றிணையில் பாலைப்பாட்டைப் பாடிய பூதனார் யார் என்ற வினா எழுவதும் கற்றோர்க்கு இயற்கைதான். பாடல்களில் ஓரோவழி கருத்தொற்றுமை காணப்படின், இருவரும் ஒருவரே என ஒருவாறு துணிதல் அறிவிற்கு ஏற்புடைத்தாகும். குன்றம்பூதனார் பரிபாடல் இருபாடல்களுள்ளும் (9,18) களவொழுக்கத்தைப்பற்றி யும் ஊடலைப்பற்றியும் விரித்துரைத்துள்ளார். நற்றிணைப் பூதனாரும் அப்பாட்டில் (28) 'மகட்போக்கிய தாய் சொல்லி யது' என்ற துறையில் அகப்பொருளையே நவின்றிருக்கின் றார். எனவே, மேல்நோக்கில் இருபுலவரும் ஒருவரே எனக் கோடல் அறிவிற்குகந்ததாகத் தென்படுகின்றது. பூதனார் என்ற பெயர் இயற்பெயராதல் வேண்டுமென எண்ணுவதற்கும், பரிபாடல் பாடல்களைப்பாடிய பூதனார் பரங்குன்றை இருபாடல்களிலும் விதந்தோதிய திறத்தால் அவர்க்குக் 'குன்றம்; என்ற அடைமொழி முன்னடையாக இணைக்கப்பட்டது போலும் என்று எண்ணுதற்கும் இட னுண்டு.

ஆசிரியர் நல்லந்துவனர் வாய்மொழிப் பாடல்கள் பல அவைகளை இவ்வட்டவணையிற் காண்க:

| எண் | நூல்கள் | பாட்டின்முதற்றொடர் | பாட்டின் எண் |
|---|---|---|---|
| 1 | அகநானூறு | "கடல்முகந்து கொண்ட" | 43 |
| 2 | கலித்தொகை | "ஆறறி அந்தணர்க்கு" | கடவுள் வாழ்த்து |
| | | நெய்தல் கலி | 1–33 முடிய |
| 3 | நற்றிணை | "யாம்செய் தொல்வினைக்கு" | 88 குறிஞ்சி |
| 4 | பரிபாடல் | "நிறைகடல் முகந்துவாய்" | 6 வையை |
| | | "விரிகதிர் மதியமொடு" | 11 ,, |
| | | "கடல்குறை படுத்தநீர்" | 20 ,, |
| | | "மண்மிசை யவிழ்துழாய்" | 8 செவ்வேள் |
| 5 | திருவள்ளுவ மாலை | "சாற்றிய பல்கலையும்" | 18 |

தொகை நூல்கள் எட்டனுள் நான்கு நூல்களில் இடம் பெற்றவர் இப்புலவர் ஒருவர்தான். அகப் பொருளையே பாடிய தனிப்பெருமை இவருக்கு உண்டு; புறப்பொருளைப்பற்றி ஒரு பாட்டேனும் பாடிற்றிலர்.

இவர் பாடிய வையைப் பாடல்களிலும் அகப்பொரு ளையே சுட்டிச் செல்கின்ற நயம் ஓரற்பாற்று. இவருடைய செய்யுட்களில் 'கடல் முகந்து கொண்ட' 'நிறை கடல் முகந்துராய்,' 'கடல்குறை படுத்தநீர்' என்ற ஒரே கருத்து மீண்டும் மீண்டும் வலியுறுத்தப்பெற்றமை அவர்க்கு அக் கருத்திலுள்ள ஈடுபாட்டை நன்கு புலப்படுத்துவதாகும்.

## ௩. செவ்வேள் என்ற சொற்றொடர் ஆட்சி

செவ்வேள் என்ற தலைப்பில் பரிபாடலில் எட்டுப் பாடல்கள் காணப்படுகின்றன. இவ்வெட்டுப் பாடல்களும் முருகனைப்பற்றியனவும் திருப்பரங்குன்றைப் பற்றியன வுமாம். முருகனுக்குப் பல திருப்பெயர்கள் இருக்கவும் செவ்வேள் என்ற இத்தலைப்பைக் கொடுத்தவர் யாவர் என விளங்கவில்லை. சங்கநூல்களுள் இளைய பிள்ளையார்க் குரிய பெயர்களாகக் காணப்படுவனவற்றுள் சிறந்தவை செவ்வேள் என்ற பெயரும், முருகன் என்ற நன்னுமமுமே ஆகும். வேள் என்ற சொல்லிற்கு விருப்பத்தைச் செய் கின்றவன் அல்லது கொடுக்கின்றவன் என்பது பொருள். வேள்வி என்ற சொல்லும் இதனடியாகப் பிறந்த சொல் போலும். யாதானும் ஒன்றை விரும்பிச்செய்தல் வேள்வி எனப்படும். வேள்வி, மக்களை விரும்பியாதல் மழையை விரும்பியாதல் செய்வது தொல்நெறி. வேள் என்ற பெயருக்குத் தக்கார் மூவர். அவருள் இருவர் கடவுளர், ஒருவன் மக்கள் இனத்தைச் சார்ந்த அரசன். செவ்வே ளாகிய முருகனும் கருவேளாகிய காமனும் தேவர் குழாத் தைச் சார்ந்தவர்கள். நன்னன்சேய் நன்னனும் வேள் என்ற பெயருக்குரியவன். அவன் மலைபடுகடாத்தின் தலைவன். "கேளினி வேளைநீ முன்னிய திசையே" என்பது மலை படுகடாம். சங்க நூல்களுள் சில இடங்களில் முருகன்,

செய்யோன், நெடுவேள், விறல்வேள், வேல்வேள், செவ் வேள் என்று கூறப்பெற்றுள்ளான். கீழ் வரூஉம் அடிகள் அதற்குச் சான்றுகளாக வருதலைக் காண்க.

"மணிமயி லுயரிய மாறு வென்றிப்
பிணிமுக வூர்தி யொண் செய்யோனும்." (புறம்-ருசு)

"பரிசிலர்த் தாங்கு முருகெழு நெடுவேஎள்."
(திருமுருகு-உஎரு)

"வள்ளியங் கானக் கிழவோன்
ஆண்டகை விறல்வேள்"" (ஐங்குறுநூறு-உரு௦)

"சூருடை முழுமுதல் தடிந்த பேரிசைக்
கடுஞ்சின விறல்வேள் களிறூர்ந் தாங்கு."
(பதிற்றுப்பத்து-உ-ஆம் பத்து)

"வெண்சுடர் வேல்வேள்." (பரிபாடல்-கஅ)

"மூவிரு கயந்தலை முந்நான்கு முழவுத்தோள்
ஞாயிற்றேர் நிறத்தகை நளினத்துப் பிறவியை
காஅய் கடவுள் சேஎய் செவ்வேள்." (பரிபாடல்-ரு)

"ஈவாரைக் கொண்டாடி யேற்பாரைப் பார்த்துவக்குஞ்
சேயமாடக் கூடலும் செவ்வேள் பரங்குன்றும்."
(பரிபாடல்-மதுரை)

"அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்."
(சிலம்பு–புகார்–இந்திரவிழா–கஎ௦)

குறிஞ்சி நிலமும் கடவுளும் கிளக்கவந்த தொல்காப் பியர் "சேயோன் மேய மைவரை யுலகமும்" என்றார். சேயோன் என்பதற்குச் "செங்கேழ் முருகன் காதலித்த வான் தங்கிய மைவரை யுலகமும்" என்று உரை கூறினர் நச்சினார்க்கினியர். எனவே குறிஞ்சிக்கடவுளாகிய முரு கன் செந்நிறம் (செங்கேழ்) பொருந்தியவன் என்பது பெற்றாம். செய்யோன் என்பதே சேயோன் என நீண்டது.

"செவ்வேல் சேய்" என்புழி, "செய்ய வேலையுடைய சேய். எக்காலமும் போர் செய்தலின் செவ்வேலென்றார். செய்யவனென்பது சேயென விகாரத்தால் நீண்டதென்றுமாம்" என்ற நச்சினார்க்கினியருரையும் இக்கூற்றுக்கு அரணாதல் காண்க.

செம்மேனி எம்மானின் சேய், செய்யோனாயிருத்தலே இயற்கையுமாம். நக்கீரரும் முருகனுடைய நிறவழகை உவமவாயிலாய்க் கூறுங்கால்,

"உலக முவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்
கோவற விமைக்குஞ் சேண்விளங் கவிரொளி."

என்று திருமுருகாற்றுப்படையில் திருப்பரங்குன்றப்படை வீட்டின் ஆரம்பத்தில் தொழிலுவமமும் வண்ணவுவமமுந் தோன்றக் கூறிப்போந்தார். வேல்வேள், நெடுவேள் என்று கடைச்சங்கப் புலவர்கள் சிலர் முருகனைக் கூற, பரிபாடலைப் பாடிய புலவர்கள் சிலர் மாத்திரமே முருகனைச் செவ்வேளென்று தம் பாடல்களில் கூறினமை அவர்கள் அவனைச் செந்நிறத்தான் என்றே கொண்டார்கள் என்ற செம்பொருளை வலியுறுத்தும். எனவேதான் செவ்வேள் என்ற தலைப்பு, அவர்கள் பாடல்களுக்கு ஏற்பட்டது போலும்.

அடுத்துச் செவ்வேள், முருகன் என்ற பெயராலும் கடைச்சங்க காலத்துப் புலவர் பெருமக்களால் அழைக்கப் பட்டு வந்தான் என்பதற்குச் சான்றுகள் இல்லாமலில்லை. அடியிற்காணும் அடிகள் அதற்குத் தக்க சான்றுகளாம்.

"அரும்பெறல் மரபிற் பெரும்பெயர் முருக."

(திருமுருகு-சு)

"முருக னன்ன சீற்றத்து." (அகம்-கடுஅ

"பெரும் பெயர் முருக." (பரிபாடல்-ரு)

"கார்நறுங் கடம்பின் பாசிலைத் தெரியல்
சூர்நவை முருகன் சுற்றத் தன்னைநின்." (புறம்-உங)

"சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேல்
சினமிகு முருகன் தண்பரங் குன்றத்து." (அகம்-ருசு)

"முருகற் சீற்றத்து உருகெழு குருசில்."
(பொருநராற்றுப்படை)

"முருகன் ஆரணங் கென்றலின்." (அகம்-சஅ)

"முருகென மொழியும் வேலன்." (ஐங்குறுநூறு-உசுரு)

"முருகொத் தீயே முன்னியது முடித்தலின்."
(புறம்-ருசு)

## ௪. செவ்வேட்குரிய எட்டுப் பாடல்களின் சுருக்கவுரை

பரிபாடலுள் செவ்வேட்குரிய எட்டுப் பாடல்களில் முதல் பாடலாகிய ஐந்தாம் பாடலை யாத்துத் தந்தவர் கடுவன் இளவெயினனாராவர். இவர் முதற்கண் முருகனின் வீரச்செயல்களைக் குறிப்பிடுகிறார். முருகன் பிணிமுகம் எனும் யானைமீதேறி அமர் நடாத்திக் கிரௌஞ்சத்தையும் சூரனையும் அவுணர்களையும் அழித்த வேலைக் கையின் கண்ணே உடையவன் எனக் கூறுகிறார். பின் முருகன் பத்தித் திருமுகமாறுடன் தித்தித்திருக்கும் அமுதாய் மூந் நான்கு தோள்களையுடையவனாய் ஞாயிற்றின் எழுச்சிபோல் முகப்பொலிவு உடையவனாய், அழித்தற் கடவுளின் சேய், செவ்வேளாய், வெறியயர்களத்தில் வேலனாய், தாமரைப் பூவின்கண் தோன்றிய கடவுளாய், உலகிற்கெல்லாம் தலைவனாய்த் திகழ்கின்றான் என்கின்றார். அடுத்து அடங் காரின் மூவெயிலையும் ஓரழலம்பினால் எரித்த பைங்கட்

பார்ப்பான் உமையொடு புணர்ந்த காமவதுவையுள், அமையாப் புணர்ச்சி அமைந்த காரணத்தாற் பிறந்த ஆறிரு தடந்தோள் வள்ளலின் திருவவதாரச் சிறப்பைக் குறிப்பிடுகிறார். அதற்குமேல் இந்திரன் மூவிரு கயந்தலையுடையோனின் பீடறிந்து மயில்கொடுப்ப, தீக்கடவுள் அங்ஙனே கோழியை நல்க, எமன் ஆண்டே வெள்ளாடு ஈய, முருகன் அமரர் சேனாதிபதியாகிய தன்மையைப் பகர்கின்றார். கடுவன் இளவெயினனார், இறுதியில் முருகன்பால் தமது வேண்டுகோளை விடுப்பதற்குமுன் முருகன் வீடுபேறெய்த நோக்கமுடைய மாசற்ற நெஞ்சினரால் வணங்கப்படுபவனென்றும், தீய ஒழுக்கமுடையோராலும் மறுபிறப்பில்லையென்று சொல்லும் கோட்பாட்டை யுடையோராலும் அறியப்படாதவனென்றுங் கூறிப் பாடலை முடிக்கின்றார்.

செவ்வேளுடைய இரண்டாவது பாடல், பரிபாடலில் எட்டாவது பாடலாகும். இதனை ஆக்கித்தந்த புலவர் ஆசிரியர் நல்லந்துவனார். இவர் திருப்பரங்குன்ற முருகனைப் பாடிப் பெரும்புகழ் பெற்றவரென்பது,

"சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேல்
சினமிகு முருகன் தண்பரங் குன்றத்து
அந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை."

என்ற மதுரை மருதனிளநாகனாரின் அகநானூற்றுப் பாட்டால் வலியுறுத்தப் பெறுகின்றது. இப்பாடலுள் அரி, அரன், அயன் மூவரும் ஆதித்தர் முதலாக உருத்திரர் ஈறாக முப்பத்துமூவரும், அமரரும் அவுணரும், விழுத்தவ முனிவரும் முருகனது காட்சியில் வேணவாக்கொண்டு பரங்குன்றில் தங்குதலினால் 'பரங்குன்று இமயக்குன்று நிகர்க்கும்' என்கின்றார்; பரங்குன்றின் சுனையும் அறுமுகனைப் பயந்தெடுத்த தாமரையினது பின்போலும் இணையுதிரா வற்றா இமயப் பொய்கையை ஒக்கும் என்

கின்றார். பின்னர்க் குன்றில் கேட்கும் எதிரொலியைப் பற்றியும், கூடலிடைவழியில் நாறும் நறுநாற்றத்தைப் பற்றியும், ஆங்குத் தென்றலுலாவும் பெற்றியைப் பற்றியும் ஆசிரியர் குறிப்பிடுகிறார். அடுத்தாற்போல் அகத்துறையை இடமறிந்து இடையில் அமைக்கின்றார் நல்லந்துவனார். பிரிந்த தலைமகன் வருதலும், தலைவி ஊடலும், தலைவன் பார்ப்பாராணை, இரும்பொழிலாணை, குன்றத்துச் சாரலாணையெனப் பலவாணையிட்டுப் புலந்து பதிலுரைத்தலும், தோழி சூள் விலக்குதலும், தலைவன் சாந்திசெய்ய வேண்டுதலும், தோழி தலைவியின் கற்பொழுக்கத்தைப்பற்றிப் பேசுதலும் இப்பாட்டில் எடுத்தோதப்பட்ட அகப்பொருட் கருத்துக்களாம். அருவரைக்கட் சென்று சேயினது அடிமலரைத் தொழுவார் மணியும், கயிறும், அயிலும், குடாரியும், பிணிமுகம் உள்பட ஏந்திச்செல்வர் என்ற செய்தியையும், எம் வயிற்றில் கருவுறுகவெனப் பொருள்களை நேர்படுவோரும், எம் கணவர் செய்பொருள் வாய்க்கென வேண்டுவோரும், எம் கணவர் வியத்தகு அமரை யடுகவென அருச்சிப்போரும், பாடுவோரும், தாளம் கொட்டுவோரும் எழுப்புகின்ற குரல், குன்றில் எதிரொலிக்கும் என்ற செய்தியையும், கூறுகின்றார் ஆசிரியர் நல்லந்துவனார். ஆடவரும் மகளிரும் புனலாடுதலும் செவ்விதிற் பேசப்படுகிறது. இறுதியில் மழைவளம் கரந்ததாயினும் நின்குன்றில் அருவிநீர் மன்னுவதாகவென முடிக்கின்றார்.

செவ்வேளின் மூன்றாவது பாடலாகிய பரிபாடலின் ஒன்பதாவது பாடலைப் பாடிய செந்நாப்புலவர், குன்றம் பூதனார் எனப்படுவர். இவ்வாசிரியர் முருகனது திருவவதாரச் சிறப்பை மீண்டுங் கூறிப் பாடலை ஆரம்பிக்கின்றார். பின் நான்மறைப்பொருள் விரிக்கும் வாய்மொழிப் புலவர்க்கு இவர் ‘காதற் காமம் காமத்திற் சிறந்தது’

எனக் களவொழுக்க மாண்பை எடுத்துரைத்து வள்ளி முருகனைக் களவில் கூடினாளாதலின், அவள் மணம் தமிழர் மணமாய் தனிசிறந்ததென்றும், முருகன் தமிழை ஆய்ந் தமையால் அவன் சாலச்சிறந்தவனென்றும் மொழிகிறார். இதனால் இவரது தமிழ்ப்பற்று நன்கு புலனாகின்றது. அடுத்துவரும் சிலவடிகளில் வள்ளிக்கும் தெய்வானைக்கும் இடையே நிகழும் ஊடல் பேசப்படுகின்றது. குறவர் கோன் மடந்தையும் வானவர்கோன் மடந்தையும் இங்ஙனம் சொற்கலாம் விளைக்க அதன்பயனாய் இருவரின் பாங்கியர்குழாத்து மகளிரும் எங்ஙனம் ஊடல் வளர்க்கி றார்கள் என்பது மேல் வருணிக்கப்படுகின்றது. குமரனை வாழ்த்துதலோடு இப்பாட்டு முடிவெய்துகிறது.

அடுத்துச் செவ்வேள் வரிசையுள் வரும் பாடல் பரிபாடலின் பதினான்காவது பாடலாகும். இப் பாடலை யாத்தவர் கேசவனார் என்னும் புலவரே யாவர். இப் பாடலில் கார்காலம் வருணிக்கப் பெற்றிருக்கிறது. சுனை, நீர் நிறையப் பெற்றிருக்கிறதென்பதும், கடம்பின் கமழ்தா தூதும் வண்டின் குரல் இனிய பண்ணைப் போன்றிருக்கிற தென்பதும், வேய், ஆடும் மகளிரின் தோள்போன் றிருக்கிறதென்பதும், மயில்களின் குரல் 'ஊடினீரெல்லாம் கூடுமின்' என்று அவர்களை அழைக்கும் சொற்கள்போன் றிருக்கின்றன வென்பதும் படித்து இன்புறற்பாலன. இவை கேசவனாரது உவமைத்திறத்தை நன்கு புலப் படுத்துவதுமாகும். பாறையின்கண்ணே வேங்கைப்பூ வீழ்ந்து சிதறிக் கிடத்தல், சேய்மையில் அது வேங்கை போல் காட்சி தருவதாக நவிலப்பட்டிருக்கிறது. இஃது அழுகை மகளிர்க்குப் புலிபுலி என்று செப்புமாறு அமைந் துள்ளது என்பது குறுந்தொகைபோன்ற சங்கநூல் களில் கூறப்படும் கருத்தைத் தழுவிவந்தது என்பது

குறிக்கொளற்பாற்று. முருகனை அடுத்தடுத்து வழிபடுவதன்பயன், மேன்மேலும் அவனை வழிபடுவதாகல் வேண்டுமென்று பாடலின் இறுதியில் வேண்டுதல், அவன்பால் ஆசிரியர்க்குள்ள ஒப்பது மிக்கதுமில்லா அன்பை எடுத்துக்காட்டுவதாகும்.

முருகவேளுக்குரிய பதினேழாம் பாட்டை இயற்றியவர் நல்லழிசியா ரெனும் மேதக்காராவார். குன்றத்தடியுறைவார் தேவருலகத்து உறைதலையும் நச்சார். குன்றம் நனிசிறந்தது; பல்லிசையும் ஆண்டொலிக்கும். குன்றிற்கும் கூடற்கும் இடைநின்ற நிலம் அணித்தாயினும் மைந்தரும் மகளிரும் நெருங்கி விளையாடுதலின் சேய்மைத்தாகத் தோன்றும்; மகளிர் குஞ்சியினின்றும் வீழும் மாலையால் இயங்குநெறி தடைப்படும்; புகழால் திசையெங்கும் பரந்த குன்றின்கண் மேவி உலகவர் பல்லிடத்தும் செய்கின்ற பூசைக்கண் முருகன் ஆவியாகக்கொள்ளும் அகிற்புகை அவ்விடந்தொறும் மேல்நோக்கி எழுதலால் உம்பர் இமையாநின்று நீங்குவர்; ஆதித்த மண்டிலமும் கட்புலனாதலின்று. குன்றின் அலங்காரம் இத்துணைத்தென்று புகல இயலாது. குன்றருவி உழவரது வயலில் பாயும்; விளையாடும் மகளிர் பூணினின்றும் வீழும் மணி நீலம், உழுநிலத்தைச் சிதைக்கும். வினையின்கட்சென்ற ஆடவர் நல்வரவுகுறித்து விழாச்செய்தலும், வந்துழிச் சீதப்பூம்புனல் குடைந்தாடுதல் இல்லறநெறியாகின்று என்பனபோன்ற விழுமிய கருத்துக்கள் இப் பாடலில் இடம் பெற்றுள்ளன. இறுதியில் முருகனை எதிர்முக நோக்கி வாழ்த்துகின்றார். முருகன் மணிநிற மஞ்ஞையையுடையவன்; கோழிக்கொடியை உயர்த்தியவன்; பிணிமுகமெனும் யானையை இவர்ந்தவன்; மக்கள்மாட்டுப் பணிமொழி கூறாது நின்மாட்டு அணிமொழி கூறிச் சுற்றமும்

யாமும் நின்னைப் பாடுதும்; தொழுதும்; பிறவித் துன்பம் எமக்கில்லையாக எனப் பாடலை இனிமையாக முடிக்கின்றார்.

பரிபாடலின் பதினெட்டாவது பாடல், செவ்வேளைப் பற்றிக் குன்றம்பூதனார் பாடியருளிய இரண்டாவது பாடலாகும். சூரன் மாமரமாய் நின்றதும், முருகன் வேல் கொண்டு பிளந்ததுமாகிய வரலாறு முதற்கண் கூறப்பட்டுள்ளது. பின்னர்த் தலைவனின் பரத்தமையைத் தலைவி பாணனுக்கு அறிவுறுத்துவது சொல்லப்பட்டுள்ளது. குன்றின் மருங்கு எழுதிய அழகுடைய அம்பலம், காமவேளின் படைக்கலப் பயிற்சிச்சாலையை ஒத்திருக்கும் எனக் காமவேள் ஆயுதச்சாலை நினைவுபடுத்தப்பட்டுள்ளது. திருப்பரங்குன்றத்திலுள்ள சோலைகள், சுனைகள், காந்தட் குலை, காந்தள் முகை, குன்றின் சூழிடம், அருவி, மயில் முதலியவற்றைச் சொல்லோவியப்படுத்தி, அக் குன்றம் இமயத்தினையும் முருகக்கடவுளது ஊர்தியாகிய யானையையும் ஒக்கும் என்று இவர் கூறியிருப்பது, ஆழ நினைந்து இன்புறற்பாலது. குறிஞ்சித் திணைக்குரிய முதல், கரு, உரி யென்ற முப்பொருள்களையும் செவ்வனே நிரல்பட அமைத்துக் கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய் நய முறக் கூறியிருத்தலை நோக்குழி, இவர் அகத்திணையையும் இயற்கைப்பொருள்களையும் வருணிக்கும் ஆற்றலினும் வல்லவர் என்பது நன்கு புலனாகின்றது.

முருகவேளைப் பற்றிய பத்தொன்பதாவது பாடல் நப்பண்ணனார் என்ற நல்லிசைப் புலவரால் இயற்றப் பெற்றது. விண்ணாட்டவர் எய்தும் இன்ப நுகர்ச்சியை மண்ணாட்டவரும் எய்துக என்பார்போலக் குன்றில் வள்ளி திருமணமும் வானுலகில் தெய்வயானை வதுவைத் திருவிழாவும் நடைபெறுவதாக முதற்கண் குறிப்பிடு

கின்றார். அடுத்தாற்போல் கூடற்கும் குன்றிற்கும் இடை வழியில் ஆடவரும் பெண்டிரும் புரவியராய்த், தேரராய்த், தாரராய்ச் செல்லும் கண்கொள்ளாக்காட்சி விரித்துரைக்கப்படுகின்றது. பின்னர் புலமாண்வழுதி உரிமை மகளிரோடும் கடனறி காரியக் கண்ணவரோடும் மலை மீதேறித் திருக்கோயிலைச் சுற்றிவருதலும் விளக்கப்படுகின்றது. யானைகள் குன்றின்மிசை ஏறாவாகலின், அவை புரசைக் கயிற்றால் மரங்களில் கட்டப்படுகின்றன. தேரும் மேற்செல்லாவாகலான், மக்கள் போகா நெறியில் நிறுத்தப்படுகின்றன. யானைகளுக்குக் கரும்புத்துண்டங்கள் கொடுக்கப்படுகின்றன என்பன போன்ற கருத்துக்கள் இப்பாடலின் தரத்தை உயர்த்துகின்றது. குரங்குகளுக்கு அவை உண்ணப் பண்டங்களைக் கொடுப்போரும், தெய்வத் தன்மையையுடைய பிரமவீணையை மீட்டுவோரும், வலிவும் மெலிவும் தாக்காது சமனாகத் தாக்கி அதன் இன்பத்தை நுகர்வோரும், நாள்மீன்களையும் கோள்களது நிலைமைகளையும் அறிவோரும், ஆண்டுள்ள மண்டபத்து ஓவியங்களைக் கண்டின்புறுவோருமாக வழுதியோடு குன்றேறிய ஆடவரும் மகளிரும் காணப்படுவர். இச் செய்திகளையெல்லாம் உள்ங்கொளக் கூறும் ஆசிரியரது திறம், வியக்கற்பாலதாகும். பின்னர்ப் பண்டைத் தமிழர்களது சில மரபுகளையும் ஆசிரியர் எடுத்தியம்புகின்றார். தண்பரங்குன்றில் முருகக்கடவுள் கடம்பமரத்தினிடத்தே எழுந்தருளியுள்ளார் என்பதை இப்பாடலில் முதலாவதாகக் குறிப்பிடுகின்றார். இறுதியில் குறப்பிணாக் கொடியாகிய வள்ளியைக் காதல் மணம் வேட்டுச்செய்த முருகனைத் தம் வாழ்த்தினைச் சிறப்புணவாகக் கேட்டருள வேண்டுமென்கின்றார்.

பரிபாடலின் இருபத்தொன்றாம் பாடலே செவ்வேளின் எட்டாவது பாடலாக மிளிர்கின்றது. இதனை நாம்

படித்தின்புற அமைத்துக்கொடுத்தவர் நல்லச்சுதனுர் என்ற இசை நல்லாசிரியரேயாவார். இப்பாடலின் துவக்கத்தில் முருகன் ஊர்ந்தது, தொட்டது, கையது பூண்டது, அமர்ந்தது ஆகிய இவை குறிக்கப்பெற்றுள்ளன. மஞ்ஞை யாட, யாழிசை பிறக்க, நீரருவி ததும்ப ஒலிக்கும் தண் பரங்குன்று என்று, குன்றின் நிலையை வருணிக்கும் முறை, இவரது வருணனைத் திறனை எடுத்துக்காட்டா நிற்கும். புனலாட்டினைச் சொல்லுவான் வந்த இவர், விறலி ஒருத்தி புனலில் மூழ்கி, கரையில் நின்ற கேள்வனை வேயாகிய புணையைக் கேட்க, அவன் அது கொடாதிருக்கவே அவள் நீரில் மூழ்கித் துயருழப்பக் கண்டு அவன் அந்நீரில் சட்டெனக் குதித்து அவள் ஆகம்தோயும் செய்தியாகக் கூறும் அகப்பொருள் கற்றோர்க்கும் மற்றோர்க்கும் கழி பேருவகை அளிப்பதாகும். பல்வகை மணமேற்றுக்குன்றில் தவழும் காற்றின் இயல்பும் இப்பாடலுள் இடம் பெற்றுள்ளது. திருப்பரங்குன்றம் யானையாக உருவகஞ் செய்யப் பெற்றிருத்தல் மிகவுமழகிது. குன்றின் அடியுறை வாழ்வு இன்றுபோல் என்றும் இயைகவெனவும், மறு பிறப்பினு மாகுக எனவும் வேண்டுதலே தமது உள்ளக்கிடக்கையுமாம் என்பதோடு இக்கடைசிப்பாட்டு அமைவுபெறுகின்றது.

## ரு. புராணக் கதைகள்

### 1. திருமுருகன் திருவவதாரம்

திருமுருகனது பிறப்பின் வரலாற்றைச் சங்க நூல்கள் கூறும் வகை ஒன்று; பிற்கால நூல்கள் இயம்பும் முறை மற்றென்று. "பாயிரும் பனிக்கடல்" என்ற பரிபாடல் ஐந்தாவது பாடலில் 26—54 வரிகள் முடிய முருகனது திருவவதார வரலாறு, கடுவன் இளவெயினனாரால் விளக்க

மாகச் சொல்லப்படுகின்றது. இவ் வரலாற்றின் சுருக்கத்தைப் பின்வரும் நச்சினார்க்கினியர் உரையானும் வாய்மொழியானும் தெளிக :—"இறைவன் உமையை வதுவை செய்துகொண்ட நாளிலே இந்திரன் சென்று நீ புணர்ச்சி தவிர வேண்டுமென்று வேண்டிக்கொள்ள அவனும் அதற்கு உடம்பட்டு அது தப்பாகுகிப் புணர்ச்சி தவிர்ந்து கருப்பத்தை இந்திரன் கையிற் கொடுப்ப, அதனை இருடிகளுணர்ந்து அவன் பக்கனின்றும் வாங்கித் தமக்குத் தரித்தல் அரிதாகையினாலே இறைவன் கூறுகிய முத்தீக்கட் பெய்து அதனைத் தம் மனைவியர் கையிற் கொடுப்ப அருந்தி யொழிந்த அறுவரும் வாங்கிக்கொண்டு விழுங்கிச் சூன்முதிர்ந்து சரவணப்பொய்கையிற் பதுமப்பாயலிலே பயந்தாராக, ஆறுகூறுகி வளர்கின்ற காலத்து இந்திரன் தான் இருடிகளுக்குக் கொடுத்த நிலையை மறந்து ஆண்டு வந்து வச்சிரத்தான் எறிய அவ்வாறு வடிவும் ஒன்றாய் அவனுடனே பொருது அவனைக் கெடுத்துப் பின் சூரபன்மாவைக் கொல்லுதற்கு அவ்வடிவம் ஆறுகிய வேறுபட்ட கூற்றாலே மண்டிச் சென்றது." இவ்வரலாற்றினையே செவ்வேளைப் பரிபாடலுள் பாடிய கேசவனாரும் குன்றம்பூதனாரும் முறையே,

"பிறந்த ஞான்றே நின்னை யுட்கிச்
சிறந்தோ ரஞ்சிய சீருடை யோயே."

"சலதாரி, மணிமிடற் றண்ணற்கு
மதியாரற் பிறந்தோய் நீ."

என்று பின்பற்றி ஏற்றனர். திருமுருகாற்றுப்படையில் திருப்பரங்குன்றப் படைவீட்டில் நக்கீரர் கூறுகிய,

"இருபே ருருவி னொருபே ரியாக்கை
அறுவேறு வகையி னஞ்சுவர மண்டி."

என்ற இவ்வடிகளுக்கு உரை எழுதிய நச்சினார்க்கினியரும் மேற்காட்டிய உரை நடையைக் கூறி "இதனைப் 'பாயிரும் பனிக்கடல்' என்னும் பரிபாடற்பாட்டா னுணர்க" என்றும் கூறிப்போந்தார்.

ஆனால், பிற்காலப் புலவர்கள் முருகன் பிறப்பைச் சிறிது வேற்றுமை புலப்படக் கூறுவர். கந்தபுராணம் கூறும் வரலாற்றை அப்புராணம் உற்பத்தி காண்டம் திரு வவதாரப் படலத்தில் காண்க. திருச்செந்திலாண்டவன் இன்னருளால் ஊமை நீங்கப்பெற்று அவன் திருமுன் திருவாய் மலர்ந்தருளிய "கந்தர் கலிவெண்பா"வில் குமர குருபரர்,

"பூங்கயிலை வெற்பிற் புனைமலர்ப்பூங் கோதையிடப்
பாங்குறையு முக்கட் பரஞ்சோதி—யாங்கொருநாள்
வெந்தகுவர்க் காற்றாத விண்ணோர் முறைக்கிரங்கி
ஐந்து முகத்தோ டதோமுகமுந்—தந்து
திருமுகங்க ளாறாகிச் செந்தழற்கண் ஆறும்
ஒருமுக மாய்த் தீப் பொறியா றுய்ப்ப—விரிபுவனம்
எங்கும் பரக்க இமையோர்கண் டஞ்சுதலும்
பொங்கு தழற்பிழம்பைப் பொற்கரத்தால்—அங்கண்
எடுத்தமைத்து வாயுவைக்கொண் டேகுதியென் றெம்மான்
கொடுத்தளிப்ப மெல்லக் கொடுபோய்—அடுத்ததொரு
பூதத் தலைவகொடு போதியெனத் தீக்கடவுள்
சீதப் பகீரதிக்கே சென்றுய்ப்பப்—போதொருசற்று
அன்னவளுங் கொண்டமைதற் காற்றாள் சரவணத்திற்
சென்னியிற் கொண்டுய்ப்பத் திருவுருவாய்—முன்னர்
அறுமீன் முலையுண் டழுதுவிளை யாடி
நறுநீர் முடிக்கணிந்த நாதன்—குறுமுறுவற்
கன்னியொடுஞ் சென்று அவட்குக் காதலுருக் காட்டுதலும்
அன்னவள்கண் டவ்வுருவ மாறினையுந்—தன்னிரண்டு
கையா லெடுத்தணைத்துக் கந்தனெனப் பேர் புனைந்து."

என்று இங்ஙனம் கச்சியப்பர் கூற்றையே ஆதாரமாகக் கொண்டு கூறியதையும் நோக்குக. திருமலை முருகன் பிள்ளைத் தமிழில் செங்கோட்டைக் கவிராச பண்டாரத் தையா அவர்களும்,

"நாரி யொருத்திக் கிடப்பாக
நல்கும் பெருமா னுதல்விழியி
னண்ணும் பொறியைப் பவனனங்கி
நடுங்கிச் சுமந்து கங்கையெனும்
வேரிப் புனலிற் புகுத்தவவள்
வெம்பிப் பயந்து சரவணத்தின்
மீதி லிடமூ விருகுழவி
விரைந்து பிறந்தங் கழுதுவிம்மி
மூரி நெருப்பி னுடன் மடவார்
முலையுண் டுறங்கி யெழுந்திருந்து
முளரிப் பூவிற் றவழ்ந்திடஐ
முகத்தோ னுடன்வந் துமைகரத்தால்
வாரி யணைக்கத் திரண்டதிரு
வடிவத் தொருவன் வருகவே
வரதச் சரதத் திருமலையின்
மழலைக் குழவி வருகவே."

என்று கச்சியப்பரும் குமரகுருபரரும் உரைத்தவாறு உரைத்ததையும் நன்கு அறிக.

இனி முன்னையோர் வரலாற்றிலும் பின்னையோர் வரலாற்றிலுமுள்ள வேற்றுமைகளைச் சிறிது காண்பாம். பரிபாடலுள் இந்திரன் பைங்கட பார்ப்பானைப் புணர்ச்சி தவிர வேண்டுமென்று இரந்து கேட்ப, அவன் கருப்பத்தை இந்திரன் கையில் கொடுப்ப இந்திரன் அதனை இருடிகளுக்குக் கொடுத்தான் என்பது. பிற்கால நூல்களில் அவுணர்க் கஞ்சிய தேவர்களின் வேண்டுகோளின்பொருட்டுத் தன்னையே நிகர்க்கும் மகவொன்றை அவர்கட்கு நல்குவான் ஐந்து முகத்தோடு அறிஞராயோர் சிந்திக்கும்

அதோ முகமுந் தந்து தனது தொல்லைத் திருமுக மாறுங் கொண்டு அவைகள் வாயிலாய் ஆறு பொறிகளை வெளிப் படுத்தினுன் என்பது. இஃது இருவரலாறுகளிலும் காணப் படும் முதல் வேறுபாடு. அறுமுக வள்ளலைச் சரவணப் பொய்கையில் அறுவர் பயந்தாராக ஆறு கூருகி வளர்கின்ற காலத்து இந்திரனே தன் வாக்கை மறந்து வச்சிரத்தா னெறிய, ஆறும் ஒன்ருகி அவனேடு பொருது அவனுடைய வலியைக் கெடுக்க, அவன் சூரனை அட அவ்வலி சாலவும் பொருந்துமென வியந்து அமரர் போர்த் தலைவனுக்கிக் கொண்டான் என்பது, இடைக்கால் வரலாற்றில் இஃது பிறிதொரு வகையாகக் கூறப்பட்டுள்ளது. கார்த்திகைப் பெண்கள் அறுவர் திருமுலைப்பாலூட்ட விளையாடும் அறு முகத்தையும் சிவன் உமைக்குக்காட்ட அவள் ஆறு திரு உருவத்தையும் தன்னிரு கரங்களால் ஒன்ருய்ச் சேர்க்க அவன் கந்தனுனன் என்பது. இவ்வேற்றுமைகளோடு ஒற் றுமைகளையும் கல்வி கேள்விகளால் பெரியாராயினுர் ஆராய்ந்துண்மையைக் கண்டு கொள்க.

## 2. அகலிகை, இந்திரன் சாபமேற்ற வரலாறு

இந்திரன் அகலியைக் கூடுவான் கருத்தில் எண்ணிக் கோதமன் கங்கையில் நீராடச் சென்றுழி, அம்முனியுரு வில் அவள் மனை புகுந்தான். கோதமன் கங்கையும் துயிலு வதைக் கண்டு மீண்டுவர இந்திரன் 'பூசையாய்ப் போக லுற்ருன்'. கோதமன் ஆற்றவும் நோற்றவனுதலால் தன் தவ வலியால் நிகழ்ந்ததை உணர்ந்து சுடுசரமனைய சொல் லால் இந்திரனுக்கு 'ஆயிர மாதர்க்குள்ள வறிகுறியுண் டாக' என்ருன். கோதமர் நிறைமொழி மாந்தராதலின், அங்ஙனே இந்திரன் பெற்ருன். பின் பிரமன் உள்ளிட்ட தேவர்கள் வேண்டக் கோதமன் சிந்தையில் முனிவு நீங்கி

இந்திரனுக்குச் சிறந்த ஆயிரம் கண்ணுகக் கடவதென்று மாற்றினன். இப்பழைய வரலாறு ஒன்பதாம் பரிபாடலுள் "ஐயிருநூற்று மெய்ந்நய னத்தவன்" என்று குறிக்கப் பட்டுள்ளது. நெஞ்சினல் பிழைப்பில்லாதவளாகிய அக லிகையைக் கோதமன் 'கல்லாகுதி' எனச் சபித்தான். அவளும் கல்லாய்க் கிடந்தாள். அவ்வரலாற்றின் இப்பகுதி யும் நப்பண்ணனரால் பத்தொன்பதாம் பரிபாடலில்,

"இந்திரன் பூசை யிவளக லிகையிவன்
சென்ற கவுதமன் சினனுறக் கல்லுரு
வொன்றிய படியிதென் றுரைசெய் வோரும்." (பரி-கக)

என்று கொண்டோற் பிழைத்த தண்டம் எடுத்துக் காட் டப்பட்டுள்ளது. கம்பராமாயணம் பாலகாண்டம் அகலி கைப் படலத்தில் அகலிகை தசரதராமன் கழற்றுகள் கது விய ஞான்று, அவள் கல்லுரு நீத்துப் பண்டைப் பெண் ணுருப் பெற்றது "கைவண்ண மங்குக் கண்டேன் கால் வண்ண மிங்குக்கண்டேன்" எனக் கோசிகன் வாய்மொழி வாயிலாய் அறிவுறுத்தப்பட்டமை காண்க. இப்பழங்கதை யின் உள்ளுறை நீதியை வள்ளுவரும்,

"ஐந்தவித்தா னாற்ற லகல்விசும்பு ளார்கோமா
னிந்திரனே சாலுங் கரி." (திருக்குறள்)

என ஐந்துமவித்த கோதமனின் ஆற்றலையும் ஐந்துமவியாத இந்திரனின் புன்மையையும் உலகத்தவர்க்கு எடுத்துக் காட்டினர்.

## 3. திரிபுரத்தை எரித்த வரலாறு

திருமுறைகளில் சிவனது அட்டவீரட்டானங்கள் பேசப்படுகின்றன. திருவதிகை, திருக்கோயிலூர், திருக் கடவூர், திருக்கண்டியூர், திருக்குறுக்கை, திருப்பறியலூர்

திருவிற்குடி, திருவழுவூர் என்பன அட்டவீரட்டத் தலங்கள். இவற்றுள் அப்பரும் திலகவதியாரும் உழவாரத் திருத்தொண்டாற்றிய திருவதிகை, பொன், வெள்ளி, இரும்பு ஆகிய ஆகாயக் கோட்டைகளை முறையே கட்டித் துன்புறுத்திவந்த வித்யுன்மாலி, தாரகாக்ஷன், கமலாக்ஷன் என்ற மூவரக்கர்களைச் சிவன் சூரிய சந்திரர்கள் தேருருளையாக, பூமிதேராக, வேதங்கள் பரிகளாக, வாசுகி நாணாக, இமயம் வில்லாக, நான்முகன் தேர்ப்பாகனாகக் கொண்டு தீயெழச் சுட்டெரித்த சிவனது வீரத்தைக் குறிக்குமிடமதாகப் பிற்கால நூல்களாகிய திருமுறைகள் சாற்றுகின்றன.

"எண்ணா ரெயிலெய்தா னிறைவ னனலேந்தி
..........................பரம னதிகையுள்
விண்ணோர் பரவநின் றுடும்வீரட் டானத்தே." (சம்பந்தர்)

"முற்றா வெண்மதி சூடும் முதல்வனார்
செற்றார் வாழும் திரிபுரந் தீயெழ
விற்றான் கொண்டெயி லெய்தவர் வீரட்டம்
கற்றாலல்ல தென்கண் துயில் கொள்ளுமே." (அப்பர்)

என்பவை சான்றுகளாம். சிவனார் திரிபுரமெரித்த இவ்வரலாறு சங்கத் தொகை நூல்களுள் ஒன்றாகிய பரிபாடல் ஐந்தாவது பாடலுள்,

"ஆதி யந்தண னறிந்து பரிகொளுவ
வேத மாபூண் வையத்தே ரூர்ந்து
நாக நாண மலைவில் லாக
மூவகை, ஆரெயி லோரழ லம்பின் முளிய
மாதிர மழலவெய் தமரர் வேள்விப்
பாக முண்ட பைங்கட் பார்ப்பான்." (பரி-ரு)

என இங்ஙனே இயம்பப்பட்டிருத்தல் இவ்வரலாற்றின் உண்மையினை வலியுறுத்துவதாகும்.

### 4. கங்கை கொண்டதும் நீலமிடருயதும்

பகீரதனுக்காகக் கங்கையின் வேகத்தைக் கெடுத்துப் பூமியிலதனைவிடக் கங்கையை வேணியில் சிவன் கொண் டான் என்ற புராண வரலாறும், திருப்பாற்கடல் கடைந்த ஞான்று கடலில் எழுந்த ஆலகால விடத்தைச் சிவன் உண்டு மணிமிடற்ருருவன் ஆயினுன் என்ற பண்டைய வரலாறும்,

"சலதாரி
மணிமிடற் றண்ணற்கு மதியாரற் பிறந்தோய்நீ." (பரி—௬)

என்ற பரிபாடலடிகளால் உறுதிப்படுத்தப்பட்டமை காண்க.

### ௬. புலவர்களின் வேண்டுதலும் வாழ்த்துதலும்

பரிபாடலில் செவ்வேளைப் பாடிய ஏழு புலவர்களும் யாதானும் ஒரு நெறியைப் பின்பற்றியே பாடல்களை முடிக்கின்றனர்; சிலர் வாழ்த்துதலோடு இறுதிப்படுத்து கின்றனர்; கடுவன் இளவெயினனுர் பேரறிவு நிலையில் நின்று முருகனை வேண்டுகின்ருர். அவர் உலகத்து நுகர் பொருள்களை வேண்டிற்றிலர்; அந் நுகர்பொருள்களைப் பெற்றுத் தரும் பொருளையும் வேண்டிற்றிலர்; அப்பொரு ளால் வருஉம் இன்பத்தையும் வேண்டிற்றிலர்; ஆனுல், முருகன்பால் முதற்கண் இரந்து வேண்டியது வீடுபயத்தற் கேதுவாய அவனருளை; இரண்டாவது வேண்டியது அவ் வருளைப் பெறுவதற்கேதுவாய்த் தன்மாட்டு உளதாக வேண்டிய அன்பை; மூன்ருவது வேண்டியது அவ்வன் பால் செய்யத்தூண்டும் அறத்தையேயாம். அவர் வேண்டு கோளில் காணப்படும் பகுதிகள் இரண்டு. முற்பகுதி வேண்டாப்பகுதி; பிற்பகுதி வேண்டும் பகுதி. பொன்னும்

பொருளும் போகமும் வேண்டாம் என்பது. இம்மூன்றும் ஒன்றிற்கொன்று தொடர்புடையதாய் உடையானை நெறியல்லா நெறிதன்னை நெறியென்று பொய்ம்மயக்கால் உணரச்செய்து உலக போகங்களில் அழுத்தி மீளாநரகில் புகுத்திவிடும். எனவே, இவை வேண்டற்பாலன அன்று என்றார். அருளு மன்பும் அறனும் வேண்டுமென்பது, இம்மூன்றும் சங்கிலித் தொடர்போல் பிணைக்கப்பெற்று வீடு பேறெய்தத் துணைநிற்பன. இப்புலவர் அழியுமாலைத்தாய சிற்றின்பத்தை விழைந்தாரில்லை; யாண்டும் அழியாப் பெற்றித்தாய பேரின்பத்தையே விரும்பினர். இக்கருத்துக் களைத் தன்னகத்தே அடக்கி மிளிரும்,

"யாஅ மிரப்பவை
பொருளும் பொன்னும் போகமுமல்ல நின்பால்
அருளு மன்பு மறனு மூன்றும்
உருளிணர்க் கடம்பி னொலிதா ரோயே." (பரி-ரு)

என்ற பரிபாட்டடிகளை நன்கு ஓர்மின்.

மற்றொரு புலவர் முருகனிடத்து இரந்து கேட்டது. பிறந்தோருறுவது பெருகிய துன்பம், பிறவாருறுவது பெரும் பேரின்பமாதலின், பிறவாநிலையைப் பெற யாமும் சுற்றமும் மக்கள்மாட்டுப் பணிமொழி பயிற்றாது நின்குன்றமே சார்பெனச் சார்ந்து பாடுதும், தொழுதும், பரவுதுமென்றார்.

"பிணிமுக மூர்ந்த வெல்போ ரிறைவ
பணியொரீஇ நின்புக ழேத்தி
யணிநெடுங் குன்றம் பாடுதுந் தொழுதும்
அவை, யாமுமெஞ் சுற்றமும் பரவுதும்." (பரி-கஎ)

என்ற இவ்வடிகளில் "பணியொரீஇ நின்புக ழேத்தி" என்ற அடியின் கருத்துக்களை (மக்கள் மாட்டுப் பணி மொழியை யொழிந்து நின்புகழை யேத்தி—பரிமேலழகர்)

"தம்மையேபுகழ்ந் திச்சைபேசினும்
சார்வினுந்தொண்டர் தருகிலாப்
பொய்ம்மையாளரைப் பாடாதேஎந்தை
புகலூர்பாடுமின் புலவீர்காள்"

என்ற சுந்தரரது அருள்மொழிகளோடு ஒப்பிட்டு இன்புறுக. மற்றொரு புலவர் இருவிடங்களில்,

"குன்றத் தடியுறை யியைகெனப் பரவுதும்." (பரி-கரு)
"நன்றம ராயமோ டொருங்குநின் னடியுறை
யின்றுபோ லியைகெனப் பரவுதும்." (பரி-உக)

என இரக்கின்றார். அஃதாவது மறுபிறப்புளதெனின், நின்குன்றின் அடியிலுறைதல் உண்டாவதாக; எம் சுற்றத்தொடு நின்னடிக்கண் உறைதல் இன்றுபோல் என்றும் இயைக என்பதாம்.

இங்ஙனம் முருகனிடம் வேண்டுகோள் விடுத்த புலவர்கள் ஒருசாரார். மற்றிங்ஙனம் விண்ணப்பித்துக் கொள்ளாது நின் குன்றம் வாழ்க; மாரிவறங் கூரினும் நின் மலை வீழருவி இடையறாது நீரைப் பெறுக; நாங்கள் அடுத்தடுத்து வழிபடுவதின் பயனாய் நின் புகழினும் அவ் வழிபாடு நாடோறும் நாடோறும் சிறந்திடுகவென இங்ஙனம் வாழ்த்தினோர் பிறிதொரு சாரார். இவைகளை யெல்லாம் பரிபாடலில் படித்தறிக.

## எ. புலவர் நட்பு

சங்ககாலத் தமிழ்ப்புலவர்களிடத்து வேற்றுமை மனப்பான்மை ஒருசிறிதும் உளவாகா. அவர்கள் தம்முட் குழீஇ வாழும் இயல்பினர்; இகலிலர்; இணைபிரியா நண்பினர்; பொறுமை அவர்கட்கணிகலம், பொறாமை காண்டலரிது; கருத்தொருமை அவர்கள் பாக்களில் யாங்கணும்

உண்டு. முன்னோர் கருத்தையேனும் சொற்றொடரை யேனும் பின்னோர் பொன்னேபோல் தம் நூற்களில் எடுத்தாண்டு தம் நூற்களை அணிபெறச் செய்வர். இதற்குத் திருக்குறளே அமையுஞ் சான்று. திருக்குறளின் திருந்திய மணம் சங்கநூல்களிலும் காணப்படும். திருக்குறளடிகளோ சொற்றொடர்களோ கருத்துக்களோ இல்லாத நூல்கள் தமிழகத்தில் இல்லை எனலாம். அஃதேபோல் சங்கநூல் கருத்துக்களையோ சொற்றொடர்களையோ பரிபாடலிலும் பலவிடங்களில் காணலாம். முருகனுடைய பிறப்பைப்பற்றியும் சூரனது மாய்வைப்பற்றியும் திருமுருகாற்றுப்படை, அகநானூறு கூறுபவைகளையே பரிபாடலும் பலவிடங்களில் கூறும். மற்றைய கருத்துக்களும் சொற்களும் பருந்தும் நிழலும்போல் ஒன்றிவருவதைக் காண்மின்.

## 1. முருகன் பிறப்பு

''நெடும்பெருஞ் சிமையத்து நீலப் பைஞ்சுனை
யைவரு ளொருவ னங்கை யேற்ப
வறுவர் பயந்த வாறமர் செல்வ.
(திருமுருகு-உருடு)

''நிவந்தோங் கிமயத்து நீலப்பைஞ் சுனைப்
பயந்தோ ரென்ப பதுமத்துப் பாயல்.'' (பரி-ரு)

## 2. சூர்மா தடிந்தது

"பார்முதிர் பனிக்கடல் கலங்க உள்புக்குச்
சூர்முத றடிந்த சுடரிலை நெடுவேல்.''
(திருமுருகு-சுஉ)

"பாயிரும் பனிக்கடல் பார்துகள் படப்புக்குச்
சேயுயர் பிணிமுக மூர்ந்தம ருழக்கித்
தீயழ றுவைப்பத் திரியவிட் டெறிந்து
நோயுடை நுடங்குசூர் மாமுத றடிந்து.'' (பரி-கூ)

"சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேல்
சினமிகு முருகன்."　　　(அகம் -ருக)

"போர் மலிந்து
சூர்மருங் கறுத்த சுடர்ப்படையோயே."　　　(பரி-கச)

### 3. முருகன் தார்

"பராரை மராஅத்
துருள்பூந் தண்டார் புரளு மார்பினன்."
(முருகு-க0)

"உருளிணர்க் கடம்பின் னென்றுபடு கமழ்தார்."
(பரி-உக)

### 4. முருகனது நிறவழகு

"உலக முவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்
கோவற விமைக்குஞ் சேண்விளங் கவிரொளி."
(முருகு-க-ரு)

"ஞாயிற்றேர் நிறத்தகை,"　　　(பரி-ரு)
வெண்சுடர் வேல்வேள் விரைமயில்மேல் ஞாயிறு."
(பரி-கஅ)

### 5. பிற கருத்தொருமை

"கருங்கால் வேங்கை வீயுகு துறுகல்
இரும்புலிக் குருளையிற் றோன்றும்."　　　(குறுந்-சள)

"மெல்லிணர் வேங்கை வியலறைத் தாயின
வழுகை மகளிர்க் குழுவை செப்ப."　　　(பரி-கச)

"தாமரை புரையுங் காமர் சேவடிப்
பவழத் தன்ன மேனித் திகழொளிக்
குன்றியேய்க்கு முடுக்கைக் குன்றின்
நெஞ்சுபக வெறிந்த வஞ்சுடர் நெடுவேல்
சேவலங் கொடியோன் காப்ப
ஏம வைக லெய்தின்று லுலகே."　　　(குறுந்தொகை)

என்ற இக் குறுந்தொகைக் கடவுள்வாழ்த்துச் செய்யுளில் முருகனது திருவடி, நிறம், ஒளி, ஆடை, ஆண்மை, வேல், சேவற்கொடி முதலியன கூறப்பெற்றுள்ளன. முருகனது திருவடி தாமரைபோன்று மென்மையுடைத்து; செம்மை யுடைத்து; நிறம் பவழத்தையொத்த செந்நிறம்; ஒளி உடையது; ஆடை குன்றிமணியை ஒத்த செந்நிறம்; அவன் செய்யன்; செந்நிற ஆடையன்; கிரவுஞ்ச மலையைப் பிளந்த ஒளிபொருந்திய வேலையுடையவன். முருகனது இளமைச் செவ்வி, நிறவழகு, வீரம் முதலியன இச் செய்யுளில் புலப்படுத்தப்பட்டன. முருகனைக் குறித்த சொல்லோவியமாகிய இப்பாட்டின் நுண்கருத்துக்கள், பரிபாடலின் பத்தொன்பதாவது பாடலின் இறுதியில் எடுத்தாளப்பட்ட தன்மையை ஆய்ந்துணர்க. முருகனது உடைசெய்யது; கடப்பமாலையும் செவ்வித்து; அவனது வேலும் மாற்றுரைத் தாக்கிக் குருதிக்கறை படிந் திருத்தலால் பவழக்கொடிபோன்று செந்நிறம் பொருந்தி யது. முருகன் நிறத்தால் நெருப்பை ஒப்பான்; அவனது முகம் ஞாயிறனையது; அவன் வேல் கிரவுஞ்சத்தைப் பிளந்தது; சூரபன்மனைத் தடிந்தது. இப் பரிபாடலை அடியிற் காண்க.

"உடையு மொலியலுஞ் செய்யைமற் றுங்கே
படையும் பவழக் கொடிநிறங் கொள்ளு
முருவு முருவத்தீ யொத்தி முகனும்
விரிகதிர் முற்று விரிசுட ரொத்தி
யெவ்வத் தொவ்வா மாமுத றடிந்து
தெவ்வுக் குன்றத்துத் திருந்துவே லழுத்தி
யவ்வரை யுடைத்தோய்நீ." (பரி-௧௯)

சூரனைக் கொன்ற இளைய பிள்ளையாருக்கு இந்திரன் தெய்வயானையை மணஞ்செய்து கொடுப்ப, முருகன்

தனக்கு வெற்றிவேலே தந்ததெனக் கூறி மகிழ, மருங் கிருந்த படைப்புக்கடவுள் அவ் வேலுக்கு ஆற்றல் ஈந்தோன் தானென ஆணவத்தோடு பகர, முருகன் எம் வேல் நின்னால் சக்தி பெறுதலுண்டோவென முனிந்து நான்முகனை மண்ணிடை பிறந்துழல்வாய் எனச் சபிக்க, பிரமன் மீண்டும் படைப்புத்தொழிலைச் செய்ய முருகனை இரக்கச் செற்றம் நீங்கிய மனத்தினரும், கற்றோரறியா வறிவினரும், உள்ளிட்டுப் புட்கொடியோனும், இமையா முக்கட் செல்வனும், ஐராவதமேறிய திருக்கிளர் செல்வ னும், முப்பத்து முக்கோடி தேவரும் திருவாவினன் குடிக்கு ஓர் விண்ணப்பக் குழுவாகச் சென்ற வரலாற்றை நக்கீரர் சொல்நயத்தோடும் பொருள்நயத்தோடும் கூறு கின்றார். அவ்வடிகளே,

"கடுவொ டொடுங்கிய தூம்புடை வாலெயிற்
றழலென வுயிர்க்கு மஞ்சுவரு கடுந்திறற்
பாம்புபடப் புடைக்கும் பல்வரிக் கொடுஞ்சிறைப்
புள்ளணி நீள்கொடிச் செல்வனும் வெள்ளேறு
வலவயி னுயரிய பலர்புகழ் திணிதோ
ளுமையமர்ந்து விளங்கு மிமையா முக்கண்
மூவெயின் முருக்கிய முரண்மிகு செல்வனு
நூற்றுப்பத் தடுக்கிய நாட்டத்து நூறுபல்
வேள்வி முற்றிய வென்றடு கொற்றத்
தீரிரண் டேந்திய மருப்பி னெழினடைத்
தாழ்பெருந் தடக்கை யுயர்த்த யானை
யெருத்த மேறிய திருக்கிளர் செல்வனு
நாற்பெருந் தெய்வத்து நன்னகர் நிலைஇய
வுலகங் காக்கு மொன்றுபுரி கொள்கைப்
பலர்புகழ் மூவருந் தலைவ ராக
வேமுறு ஞாலந் தன்னிற் றோன்றித்
தாமரை பயந்த தாவி லூழி
நான்முக வொருவற் சுட்டிக் காண்வரப்

பகலிற் றேன்று மிகலில் காட்சி
நால்வே றியற்கைப் பதினொரு மூவரோ
டொன்பதிற் றிரட்டி யுயர்நிலை பெறீஇயர்.'' (திருமுருகு)

இவை பரிபாடலில் செவ்வேட் குரிய எட்டாம்பாடல் ஆரம்பத்திலும் மூவரும் முப்பத்து முக்கோடி தேவரும் விழுத்தவ முதல்வரும் அடங்கிய கடவுட் குழுவொன்று திருப்பரங்குன்றில் முருகனைக் காண்டல் வேட்கையோடு சென்றதாக நவிலப் பெற்றுள்ளது. இரு பாடல்களிலும் வருஉம் சொற்றொடர் நயங்களையும் ஒற்றுமைகளையும் கடவுளர்களின் வைப்புமுறைகளையும் ஆய்ந்துணர்தல் கற்றோரது கடனாகும். -

''மண்மிசை யவிழ்துழாய் மலர்தரு செல்வத்துப்
புண்மிசைக் கொடியோனும் புங்கவ மூர்வோனு
மலர்மிசை முதல்வனு மற்றவ னிடைத் தோன்றி
யுலகிரு ளகற்றிய பதின்மரு மிருவரு
மருந்துரை யிருவருந் திருந்துநூ லெண்மரும்
ஆதிரை முதல்வனிற் கிளந்த
நாதர்பன் னொருவரு நன்றிசை காப்போரும்
யாவரும் பிறரு மமரரு மவுணரு
மேவரு முதுமொழி விழுத்தவ முதல்வரும்
பற்று கின்றுநின் காரண மாகப்
பரங்குன் றிமயக் குன்ற நிகர்க்கும்.'' (பரி-அ)

## அ. பண்டைத் தமிழரின் பழக்க வழக்கங்களும் மரபுகளும்

கடைச்சங்க நூல்கள் இலக்கியச் செல்வங்கள். அந் நூல்கள் பண்டைத் தமிழர்களின் பண்பாடு, அரசியல்நிலை, சமூகநிலை, புறவாழ்வு, அகவாழ்வு முதலியவைகளைப் புலப்படுத்துவதோடு அவர்கள் காலப் பழக்க வழக்கங்களை யும் மரபுகளையும் எடுத்து ஓதுவன. முன்னாள் தமிழர்

களின் பழக்க வழக்கங்களில் வஞ்சினங் கூறுதல், அல்லது சூளுரைத்தல் என்ற பழக்கமும் வழக்கில் இருந்ததாகத் தெரியவருகிறது. அங்ஙனம் சூளுரைக்குங்கால் இறைவன் திருமுன்னின்று நீர்குடித்து அதனை உறுதிப்படுத்துவது தமிழர் இயல்பு என்பதைக் குறிஞ்சிப் பாட்டு என்னும் நூல் வாயிலாய் அறியலாம். விருந்தோம்பித் தலைவியொடு இல்லற நெறியை நடாத்த அவாவுகின்ற தலைவன், மலைமிமிசை எழுந்தருளியுள்ள முருகன் திருமுன், அருவிநீர் குடித்துச் சூளுற்றான் என்று குறிக்கப்பட்டிருப் பது இதற்குத் தக்க சான்றாகும்.

"விருந்துண் டெஞ்சிய மிச்சில் பெருந்தகை
நின்னோ டுண்டலும் புரைவ தென்றாங்
கறம்புணை யாகத் தேற்றிப் பிறங்குமலை
மீமிசைக் கடவுள் வாழ்த்திக் கைதொழு
தேமுறு வஞ்சினம் வாய்மையிற் றேற்றி
யந்தீந் தெண்ணீர் குடித்தலி னெஞ்சமர்ந்து." (குறிஞ்சி)

என்பதுமது. பரிபாடலில், இவ்வழக்கம் சுட்டப்பெற் றிருத்தல் ஈண்டுச் சிந்திக்கற்பாற்று. தலைவன் மாட்டு அயல் மகளிர் நாற்றம் தோன்றுவதாகத் தலைவி ஊடுகின்றாள். அஞ்ஞான்று தலைவன் அந்நாற்றம், பரங்குன்றின்கணுள்ள மலர்களின் நாற்றத்தை ஏற்று வீசும் காற்றின் நறுநாற்ற மன்றிப் பிறமகளிரைத்தோய்தலா லுண்டாய நாற்றமன்று என்று தலைவியை ஆற்றவும் தேற்றுகின்றவன், மணலை யுடைய வையைக்கண் இரும்பொழிலானை, குன்றத்துச் சாரலானை, பார்ப்பாரானை, துனியல் என்று சூளுறு கின்றான்:

"இனிமணல் வையை யிரும்பொழிலுங் குன்றப்
பனிபொழி சாரலும் பார்ப்பாரும்
துனியன் மலருண்கண் சொல்வேறு நாற்றங்
கனியின் மலரின் மலிர்கால்சீப் பின்னது." (பரி-அ)

என்ற அடிகளே மேலேக் கருத்துக்களைத் தாங்கி நிற்கும் பரிபாட லடிகளாம்.

அடுத்தாற்போல் பண்டைத் தமிழரின் பிறிதொரு வழக்கத்தையும் பரிபாடலில் செவ்வேள் ஆசிரியர் நம் நினைவிற்குக் கொண்டு வருகிறார். குறிஞ்சி நிலமக்கள் முருகனை இடையறாது வழுத்துவர்; முருகனுக்கு வழிபாடு செய்வர்; கோழி, மயில், மணிகள், கடம்ப மலர், அணையாத் திரு விளக்கு முதலியன பராய்க் கடனாக முருகனுக்குச் செலுத்துவர்; பெருந் திருவிழா எடுப்பர்; பிள்ளைப்பேறும் வேண்டி நிற்பர். இம்மரபை நன்கு விரித்துரைக்கின்றார். திருப்பரங்குன்றம் ஏறுவார்,

"சீறடியவர் சாறுகொள வெழுந்து
வேறுபடு சாந்தமும் வீறுபடு புகையு
மாறுசெல் வளியி னவியா விளக்கமும்
நாறுகமழ் வீயுங் கூறுமிசை முழவமும்
மணியுங் கயிறு மயிலுங் குடாரியும்
பிணிமுக முளப்படப் பிறவு மேந்தி," (பரி-அ)

செல்வார் என்பதோடு அமையாது.

"கருவயி றுறுகெனக் கடம்படு வோரும்
செய்பொருள் வாய்க்கெனச் செவிசார்த்து வோரும்
ஐயம ரடுகென வருச்சிப் போரும்." (பரி-அ)

ஆக வரங்கிடப்பார் என்பதையுங் கூறுகின்றார். இப் பண்டைய வழக்கம் பிற்காலத்திலும் குறிஞ்சி வாழ்க்கையுடையார்பால் காணக்கிடந்தது என்பதை,

"வாரணச் சேவலோடு வரிமயிற் குலங்கள் விட்டுத்
தோரண மணிக டுக்கிச் சுரும்பணி கதம்ப நாற்றிப்
போரணி நெடுவே லாற்குப் புகழ்புரி குரவை தூங்கப்
பேரணங் காடல் செய்து பெருவிழா வெடுத்த பின்றை."
"..........................................
கானவர் குலம்வி ளங்கத் தத்தைபாற் கருப்ப நீட."

என்ற பெரிய புராணக் கண்ணப்பர் கதை வாயிலாய்அறியலாம்.

நிற்க, நப்பண்ணனார் யாண்டும் படித்தறியாத, கேட்டிராத மற்றொரு தமிழரின் வழக்கத்தையும் கோட்பாட்டையும் தமது பத்தொன்பதாவது பரிபாட்டுச் செய்யுளில் குறிப்பிடுகின்றார். முருகனது கொடியைத் தாங்கும் யானையை நீரூட்டிக், கும்பத்தைக் குங்குமத்தால் அணிபெறச் செய்து, பூங்காம்பிற் குடையேற்றிப், பூசை செய்து அவ்வியானை உண்ட மிச்சிலை விருப்பத்தோடு உண்ணு மகளிர் காதலரின் தண்ணளியை எய்தார்; உண்ணாத மணப் பருவமடைந்த கன்னிகையர் குறைவற்றமைந்த மைந்தர் தோளைக் கூடார் என்பதாம். இதனை,

"நினையானைச் சென்னி நிறங்குங்கு மத்தாற்
புனையாப்பூ நீரூட்டிப் புனைகவரி சார்த்தாப்
பொற்பவழப் பூங்காம்பிற் பொற்குடை யேற்றி
மலிவுடை யுள்ளத்தான் வந்துசெய் வேள்வியுட்
பன்மண மன்னு பின்னிருங் கூந்தலர்
கன்னிமை கனிந்த காலத் தார்நின்
கொடியேற்று வாரணங் கொள்கவழ மிச்சில்
மறுவற்ற மைந்தர்தோ ளெய்தார் மணந்தார்
முறுவற் றலையளி யெய்தார்நின் குன்றம்
குறுகிச் சிறப்புணாக் கால்." (பரி-கக)

என்ற பாட்டுடைச் செய்யுளால் உணர்த்தப் பெற்றோம். செவ்வேளாசிரியர் எழுவரின் உவமைத்திறம், குன்றின் வருணனை, அகப்பொருள் நுணுக்கம் முதலியவற்றை முன் கூறப்பட்டுள்ள சுருக்கவுரையில் படித்து இன்புறுக.

---

## ரு. வையை

[வித்துவான், திரு. அ. க. நவநீதகிருட்டிணன் அவர்கள்]

தமிழகத்தை வளம்பெறச் செய்யும் தண்புனல் ஆறுகள் பல. அவற்றுள் காவிரியும் வையையும் பொருநையும் பெருமை வாய்ந்தனவாகும். வான் பொய்ப்பினும் தான் பொய்யா மலைத்தலைய கடற்காவிரி, சோழநாட்டை வளநாடாக்கும் சொல்லரிய சிறப்புடையதாகும். காவிரியின் நீர்வளத்தால் கவின்பெறும் அந்நாடு, காவிரிநாடென்றே கற்றோரால் ஏத்தப்படும். பாண்டிநாட்டின் வடபகுதியை வளப்படுத்தும் வையை. தமிழ் வையையெனவும், தென்னவன் வையையெனவும், பாராட்டும் சீருடையது. பண்டை நாளில் பொய்யாத வளங்கொண்ட வையையின் சிறப்பால் பாண்டியன், வையை நாடன் என்றே கொண்டாடும் பெருமை கொண்டான். தென்பாண்டி நாட்டைப் பொன் கொழிக்கும் திருநாடாக்குவது பொருநைத் திருநதியாகும். 'பொன்திணிந்த புனல்பெருகும் பொருநையெனும் திருநதி'யெனக் கவியரசர் கம்பரும் அவ் ஆற்றைப் போற்றினர். இப்பொருநைத் திருநதி பாயும் தென்பாண்டி நாடு, பொருநைநாடு என்றே புகழப்பெறும். சேரநாட்டைப் பேரியாறு செழிக்கச் செய்யும்.

இவ் வாறுகளேயன்றித் தேனாறும் பாலாறும் நெய்யாறும் தென்பெண்ணை வடபெண்ணையாறுகளும் தமிழகத்தை வளமுறுத்துவனவாகும். தமிழ்நாட்டிற்கு வளமூட்டும் ஆறுகளைக் கூறவந்த பாரதியார்,

"காவிரி தென்பெண்ணை பாலாறு தமிழ்
கண்டதோர் வையை பொருநைநதி—என
மேவிய யாறு பலவோடத் திரு
மேனி செழித்த தமிழ்நாடு."

என்று, பாடிய வாய் தேனூறும் வண்ணம் பண்ணமைப் பாடினர். இப்பாடலில் பல ஆறுகளைக் கூறிய பாரதியார் வையை பொருநை நதிகளைத் 'தமிழ் கண்ட' என்னும் அடைமொழிகளால் சிறப்பித்த பெருமை, நம் சிந்தையை அள்ளுவதாகும்.

பரிபாடல் போன்ற பழந்தமிழ் இலக்கியங்களும் தமிழ் வையையென, அவ்வையையைப் பாராட்டிய பண்பைக் கண்டே பாரதியாரும் பாராட்டினராதல் வேண்டும். தண்பொருநை யாற்றைத் தமிழ்கண்ட பொருநையென்று போற்றிய பெருமை, பாரதியாரையே சாரும். முத்தமிழ் முனிவனாகிய அகத்தியன் தங்குறும் பொதியமலையி லிருந்து பொங்கியிழிந்துவரும் பொருநை, தமிழ்கண்ட பொருநையாதல் இயல்பேயன்றோ! புலவர் பாடிய புகழ் பொய்த்தலில்லாத வையை, தமிழின் சுவையைப் பலகாற் கண்ட பெருமையுடையது. நாலடி நூலின் நானூறு பாக்களைச் சுவை கண்டு தேர்ந்தளித்தது இத்தீந்தமிழ் வையை திருஞானசம்பந்தர் பரசமய கோளரியாய்ச் சமணருடன் புனல்வாதம் நடாத்தியபோது, ஞானப்பாடல் வரைந்த நற்றமிழ் ஏட்டைச் சுவையுணர்ந்து கரையேற்றிய ஏற்ற முடையது இவ்வையை.

இத்தகைய தமிழ்கண்ட வையையாற்றை, நெஞ்சை யள்ளும் சிலப்பதிகாரம் செஞ்சொற்களால் வியந்து போற்றும். புண்ணிய நறுமலர் ஆடைபோர்த்துப் புனல் யாறன்றிது பூம்புனல் யாறெனப் பெருகிவரும் இத்திரு நதியை, இளங்கோவடிகள்,

"உலகுபுரந் தூட்டும் உயர்பே ரொழுக்கத்துப்
புலவர் நாவிற் பொருந்திய பூங்கொடி
வையை யென்ற பொய்யாக் குலக்கொடி"

என்று உளங்குளிரப் போற்றியருளினர்.

'இன்னியல் மாண் தேர்ச்சி இசை பரிபாடல்' பெற்ற நறுநீர் வையையென மதுரையாசிரியர் நல்லந்துவனாரால் நயந்தேத்தும் பெருமை பெற்ற வையைப் பேராற்றைப் பரிபாடல் என்னும் பழந்தமிழ் நூல் இருபத்தாறு பாடல்களால் பாராட்டியது. இதனை,

"திருமாற் கிருநான்கு செவ்வேட்கு முப்பத்
தொருபாட்டுக் காடுகாட் கொன்று—மருவினிய
வையையிரு பத்தாறு மாமதுரை நான்கென்ப
செய்யபரி பாடல் திறம்"

என்னும் பழைய வெண்பாவால் அறியலாம். எழுபது பாடல்கள் கொண்ட இந்நூற்கண் வையையின் வளத்தை விளக்க இருபத்தாறு பாடல்கள் இடம்பெற்றமை ஒரு சிறப்பே. இந்நூலில் மாலோன் மாண்பினை எட்டுப் பாடல்களே இயம்பின. முருகவேள் பெருமையை முப்பத்தொரு பாட்டுக்கள் மொழிந்தன. கொற்றவையின் கொற்றத்தை ஒரு பாடலே கூறிற்று. மாமதுரைச் சிறப்பை நான்கு பாடல்கள் நவின்றன.

இங்ஙனம் பரிபாடல் நூலில் வையையாற்றைப் பாராட்டிய பாக்கள் இருபத்தாறனுள் இன்று நாம் கண்டு மகிழும் பாடல்கள் எட்டே. மற்றவை நம் கண்ணுக்கும் கருத்துக்கும் எட்டாதனவாய் மறைந்தன. அங்ஙனமாயது நம்மனோர் நற்றவக் குறையேயாகும். இன்று காணக்கிடைக்கும் எட்டுப்பாடல்களுள், மதுரையாசிரியர் நல்லந்துவனாரால் பாடப்பெற்றவை மூன்று.

மையோடக் கோவனார், கரும்பிள்ளைப் பூதனார், நல்வழுதியார், நல்லழுசியார் ஆகிய நல்லிசைப் புலவர்கள் நால்வரும் தனித்தனியே பாடிய பாடல்கள் நான்கு. மற்றொரு பாடலைப் பாடினார் யாரென அறிதற்கில்லை. மேலும், பாடல்களின் பகுதிகளாகப் பெரும்பகுதியொன்றும் நான்கு சிறு பகுதிகளும் உள்ளன. இவைகளையும் பாடினார் யாவரென அறியக்கூடவில்லை. இவற்றையெல்லாம் பெரிதும் முயன்று அரிதின் தொகுத்துத் தமிழகத்திற்கு உதவிய தமிழ்ப் பேரறிஞர் சாமிநாத ஐயர் அவர்கட்குத் தமிழினம் கடமைப்பட்டுள்ளது.

## க. மலையில் பெய்த மழை

முகிற்கூட்டம் நிறைகடல் நீரை முகந்து வானத்தில் பரந்தன. தம்பால் ததும்பும் நீர்ப்பாரம் தீர்த்து இளைப்பாறப் பெருமழையைப் பொழிந்தன. அந்நீர்ப் பாரத்தைத் தாங்க ஆற்றாது, அப்பாரம் கழலுமாறு கரை உடைந்த குளத்துநீர் பெருகுமாறு போலப் பெருமழையைப் பொழிந்தன. காற்றால் தாக்குண்ட அம்முகில்கள் மின்னையும் இருளையும் பின்னும் பின்னும் பரப்பியவண்ணம் சைய மலையைச் சூழ்ந்து மழையைப் பெய்யலாயின. கடல் நீரை வற்றவுண்டு கடுஞ்சூல் கொண்ட மேகங்கள் மலையைச் சூழ்ந்து சூழ்ந்து, கற்கள் தூள் தூளாக நொறுங்குமாறு பெருங்குரலுடன் இடி முழக்கின. அங்ஙனம் பெய்த பெருமழை நீரால், எதிர்த்துப் பொருத புலியைத் தனது கூரிய கொம்புகளால் போழ்ந்து கொன்ற புகர்முகக் களிற்றின் குருதிக் கறைபடிந்த கோடுகளைத் தெளிவுறக் கழுவின. அம்முகிற் கூட்டங்கள் காலைப்பொழுதில் கடலை முகந்து, மாலைப்பொழுதில் கதிரவன் மறையும் மேற்றிசைத் தொடர்மலை யடைந்தன. இரவுப்பொழுதில் அம்

மேற்றொடர் மலைக்கண் ஆற்றலுடன் மழையைப் பொழிந்தன.

பெயரறியாப் பெரும்புலவர் ஒருவர், மலையில் மழை பொழிந்த மாண்பைப் பாண்டிய மன்னன் படைச்செயலுடன் ஒப்பிட்டுச் சித்திரித்துள்ள வித்தகத்திறன் ஒப்பிலா வியப்பிற்கு உரியது. வாட்போர் வல்ல வேந்தன் போர்க்களத்தே வெட்டி வீழ்த்திய களிற்றினத்தின் பிணங்களைப் போல முகிற்கூட்டங்கள் வானத்தில் வந்து நிறைந்து நெருங்கின. எதிர்த்த மன்னனை அழித்துப் போரை வென்ற சீரிய வேந்தனின் வெற்றி முரசங்களின் முழக்கத்தைப்போல முட்டும் இடிகள் அதிர்ந்தன. அவ்வெற்றி வேந்தனின் கொற்றப்படைகள் வில்லை வளைத்து விசையொடு சொரியும் அம்புகளைப்போல நீர்த்துளிகளைச் சிதறின. கண்கள்கூசப் பேரொளி செய்யும் அவனது வேலைப்போல மின்னலை வீசின. அவனது வள்ளன்மையைப்போல மழை வெள்ளத்தைப் பொழிந்தன. மழையால் எழுந்த பெருவெள்ளம், மன்னன் படைகள் நிலத்தில் மலிந்து நிறைந்தமை போல எங்கும் பரந்தது. இந்த மழை ஓவியத்தை வரைந்து காட்டும் புலவர்தம் வாக்கை நோக்கி மகிழ வேண்டும்.

"ஒளிறுவாள் பொருப்பன் உடல்சமத்(து) இறுத்த
களிறுநிரைத் தவைபோல் கொண்மூ நெரிதர
அரசுபடக் கடந்த ஆனுச் சீற்றத்தவன்
முரசதிர் பவைபோல் முழங்கிடி பயிற்றி
ஒடுங்கார் உடன்றவன் தானை வில்விசை
விடுங்கணை யொப்பில் கதழுறை சிதறூஉக்
கண்ணொளிர் எஃகில் கடிய மின்னியவன்
வண்மைபோல் வானம் பொழிந்தநீர் மண்மிசை
ஆனுது வந்து தொகுபீண்டி மற்றவன்
தானையின் ஊழி." (பரிபாடல்-உஉ)

## உ. தமிழ்வையைத் தண்ணம்புனல்

சைய மலையில் பெய்த பெருமழை வெள்ளம் வையை ஆற்றில் பெருகிய சிறப்பை நோக்குவம். மலையில் பெய்த மழை, நிலத்தை மறைக்கும் ஊழிக்கால நெடுவெள்ளம் போல எங்கும் பொங்கிப் பரவியது. மலையில் உலவித் திரியும் மானினமெல்லாம் கலங்கியோடின. மயில்கள் மகிழ்வு மிகுதியால் அகவித் தோகை விரித்தாடின. மலைக்கண் உள்ள மாசுகள் கழுவுண்ண விரைந்து பெருகும் அருவியாய் வீழ்கின்ற மிக்கநீர், அம்மலைச் சாரலில் பலவழிகளால் வந்து பெருகியது. புலவர்கள் புகழ்ந்து பாடிய பொன்மொழிகள் பொய்யாதவண்ணம் பொங்கி வந்த பெருவெள்ளம், உழவு முதலான தொழில்கள் வளம்பெற நிலமெங்கும் பரவியது.

''மாசில் பனுவல் புலவர் புகழ்பல
நாவில் புனைந்த நன்கவிதை மாறுமை
மேவிப் பரந்து விரைந்து வினைநந்தத்
தாயிற்றே தண்ணம் புனல்.'' (பரிபாடல்-சு)

மலைச் சிகரந்தோறும் பெய்த மழைநீர் அருவியாக விழுந்து பொலிந்து, பிறவிடங்களில் சேரும் நீருடன்கூடிப் பெருகுதலால், அவ் வையை வெள்ளம் உயிர்கள் நலங்கொள்ளவும், மென்புலங்கள் அழகுபெறவும், வன்புலங்கள் விளைவுறவும் வந்துற்றது.

''வலனிரங்கு முரசில் தென்னவர் உள்ளிய
நிலனுற நிமிர்தானை நெடுநிரை நிவப்பன்ன'' (பரி-எ)

அவ்வெள்ளம் வந்தது. வெற்றிமுரசு கொட்டும் கொற்ற மன்னவன்பாண்டியன் கொள்ளக்கருதிய பகைவர்நாட்டை நோக்கி நடக்கும் ஊக்கமிக்க படையின் நெடுநிரை நிமிர்ச்சியைப்போலச் செல்லுமிடம் அரிதென்பது இல்லாமல் அல்லும் பகலும் வெள்ளம் பெருகிவந்தது. மலைச்சாரலில்

அடர்ந்த நரந்தம்புல்லின்மேல் பரந்து, வேங்கையின் உதிர்ந்த பூக்களைத் தாங்கிச், சிகரங்களில் நின்ற உருவத்தால் நீண்ட உயர்மரங்களை வேரோடு பிடுங்கி, உழவர் களிதூங்க, முழவும் பணையும் முரலப் புதுவெள்ளம் பொங்கிவந்தது. ஆடல் இயல்பை அறியாத அரிவை, தான் வேண்டிய இடங்களில் கால் பெயர்த்து நடமாடுதல் போல, வெள்ளம் தான் விரும்பிய இடங்களில் பொருந்திப் பரந்தது. ஊடலின் இயற்கை அறியாத இளம்பெண், கணவனைக் கடந்து கடிந்து நீங்குவதுபோலத் தடுத்த அணைகளை உடைத்து, வெள்ளம் விரைந்து சென்றது.

"ஆடல் அறியா அரிவை போலவும்
ஊடல் அறியா உவகையள் போலவும்" (பரி—எ)

சென்றது அவ்வெள்ளம் என்றார் புலவர். 

மேலும் அவ்வெள்ளம், ஊடல்கொண்ட ஒள்ளிழை மாதரைக் கணவர் அவ் வூடல் தணிக்க நாடி முயன்றும் உணராதாரைக் கூட்டுவித்தற்கு முயலும் அவரது ஆசை வெள்ளம்போல விரைந்து வந்தது. தன்பால் நீராடும் தையலரின் காதுகளில் தளிரைச் செருகியது; மைந்தர் அணிந்த மாலையைப் பறித்தது; மகளிர் தலைக்கோலம், உடுத்த துகில், அகத்தணி மேகலை, புறத்தணி காஞ்சி இவற்றைக் கவர்ந்து சென்றது; மைந்தர் ஆழி மோதிரத்தையும் வாகுவலயத்தையும் பிடுங்கிச்சென்றது; இங்ஙனம் எல்லாவற்றையும் கவர்ந்து செல்லும் இயல்பால், வையை வெள்ளம் பகைவர்நாட்டில் புகுந்த பாண்டியனைப் போன்றது.

"ஒன்னார் உடைபுலம் புக்கற்றால் மாறட்ட
தானையான் வையை வனப்பு" (பரி—எ)

என்பது புலவர் மொழி.

வையைப் புதுப்புனல்வெள்ளம், எல்லை சென்று காணவொல்லாத கடலை யடைதற்கு விரைந்து சென்றது. நிலவுலகில் பசி முதலிய துன்பங்கள் நீங்க, எங்கும் நீரைப் பெருக்கிப் பேராரவாரத்துடன் சென்றது: பலவகைப் பூக்கள் போர்வைபோலப் பொலிவுறப் பருமணலை மூடிப் பாய்ந்து சென்றது; கரையைக் காக்கும் காவலரை அழைக்க முழக்கும் பறையை அறையுமாறு கரைபுரண்டு சென்றது அவ்வெள்ளம்.

கார்காலத்தில் செய்த பெருமழையின் நீர் வரவால் நிறைந்தோடும் வையைப் புனல், வரையிடத்தோங்கிய புன்னாகம், கரையிடத்து உயர்ந்த சுரபுன்னை, வண்டறையும் நறுஞ்சண்பகம், உயர்சாரல் வளர்வேங்கை, கூவிளை, செவ் வலரி, காந்தள், தோன்றி, சுனைக்கண் மலர்ந்த நீலம் முத லாயவற்றின் மலர்களைச் சாரல் சோலையில் கொண்டுவந்து சொரியும். நாள்தோறும் கலைவளரும் வளர்மதியைப் போல வெள்ளம் நாளுக்குநாள் பெருகிவந்தது. வளர்மதி யின் தண்ணிலவு வையமெங்கும் பரந்தாற்போல மலைச் சாரல் தொடங்கிக் கடல்சாரும் இடம் வரையுள்ள நிலத் தின்கண் நீரைப் பரப்பி, இப்பேருலகிற்குப் பயன்படும். வானவர்க்கு உணவாகிய வளர்மதியின் நிறைவு சுருங்கினாற் போல நீர் வரவு சுருங்கும்போழ்து, எட்டாம் பக்கத்து மதியளவாதலன்றி இருள் நிறைந்த அமாவாசையைப் போல, நீர் அறவே வற்றியொழியும் நாளைக் கண்டதில்லை.

கரைகளில் நின்ற மரங்களை வேருடன் சாய்த்து, அவற்றைத் தாங்கிப் பாங்குடன் விரைந்து நடந்துவரும் வையையின் காற்றுப்போன்ற வரவு, கடல் உயர்ந்துவரு வதுபோலத் திகழ்ந்தது.

மலைக்கண் உள்ள மிளகுக்கொடி, சந்தனம், வெண் ணெய் கடையும் தயிர்போன்ற வெண்ணுரை முதலான

பலவற்றுடன் கரையின் இருபாலும் நிறைநீர் வெள்ளம் மேலும்மேலும் வந்து பெருகியது. அச்செயல் வள்ளன் மையிற் சிறந்த பாண்டியனது ஈகைபோலும் என்று கண்டவர் கொண்டாடுமாறு வெள்ளம் பெருகியது. துறையில் நீராடுவாரின் முத்துவடமும் தலைக்கோல முத்தும் பொன்னணியும் புனல்கொணர்ந்த மணிகளும் புதல்வர் தம் இளந்தலைப் புனைந்த முஞ்சமென்னும் அணியும் பறித்துக்கொண்டு உருத்துவரும் பெருவெள்ளம், தத்தம் கணவரொடு நீராடும் காரிகையார் பக்கமெல்லாம் பாய்ந்து சென்றது. தான் ஏந்திவந்த மலர்களுடன் பக்கமுள்ள வயல்களில் பாய்ந்து, வெள்ளம் நிறைந்திருக்கும் காட்சி, இன்னியமும் பண்ணிசையும் பயின்ற பாவையர் ஆடும் அரங்கம் அணிசெய்த அழகை யொக்கும். கரைக்கண் உள்ள பொழில்களுக்கு விருந்தூட்டுவதுபோலப் பெருகி வரும் தீம்புனலுக்கு, எதிர்விருந்து அயர்வது போல நரந்தம் போன்ற நறுமலர்களை அப் பொழில்கள் அளித்து அணிசெய்யும். இவ்வனம் காவினும் கயத்தினும் ஆற்றிடைக் குறையினும் வண்டுகள் தேனுண்டு பாட வருகின்ற வையை வரவால் திசையெல்லாம் பூக்களாலாகிய அழகு பொலிவுற்றது.

இவ்வெள்ளம், மரங்கள்தரும் மலர்நாற்றத்தையும், கடுவெயிலும் கொடுங் காற்றுமுடைய காடுகள் தரும் கார்ப்பருவ நாற்றத்தையும், மரக்கோடுகள் உதிர்த்த கனிகளது நாற்றத்தையும் ஒருங்கு ஏற்று வந்து மக்கட்கு உதவியது. கரைகளில் உள்ள பொழில்களின் நாற்றத்திற்கு மேலாக ஆற்றில்வரும் பூம்புனல் புதுவெள்ளத்தின் நாற்றம் எங்கும் கமழ்ந்தது. அந் நறுமணத்தை நுகர்ந்து ஊரார் புனலாடுமாறு பறைகள் ஒலித்தன. மதுரை

மாநகரத்தின் மதிலைச்சார்ந்த மதகுகளில் நீரோடுகின்ற பேரொலியால் மக்களெல்லாம் துயில் உணர்ந்து எழுந்தனர். புனல்வெள்ளத்தின் வரவுகண்ட மக்கள் வெள்ளம் எண்ணற்ற ஆரவாரத்தை எழுப்பியது.

புது வெள்ளம் பாயப் புகுந்த நீரால் ஓடைகளில் பூத்த மலர்கள் மேலே மிதந்தன என்று ஒருபால் ஆரவாரம் எழுந்தது. இளமகளிர் தாம் விளையாடுதற்கு மணலில் இழைத்த பாவைகள் சிதைந்து மறைந்தனவே என்று ஒருபால் நின்று கதறியழுதனர். வயலிடத்துத் தோன்றிய இளநெற் பயிர்க்கண்ணும், அரிந்தடுக்கிய நெற்சூட்டினும் வெள்ளம் சூழ்ந்து பரந்தது என்று ஒருபால் பறைகள் முழங்கின. ஊரைக் கடல் சுற்றியது என்று ஒரு பக்கம் ஆரவாரம் மிக்கது. வானில் மழை பொழியும் தூம்பு வற்றியடைத்தது என்று ஒருபால் ஆரவாரம் எழுந்தது. பண்ணிசைக்கும் பாணர் சேரியை வெள்ளம் அள்ளிச் சென்றதென்றும், கூத்தினர் சேரியை வெள்ளம் கொள்ளை கொண்டதென்றும் மற்றொருபால் பேராரவாரம் பெருகியது. வெள்ளக்கால்கள் கழனிகளை நீரால் வரம்பு சிதைத்து ஒன்று சேர்த்தன என்றும், தெங்கு கமுகுகளின் கழுத்தளவும் நீர் பெருகிச் செல்லுதலால் வாளைமீன்கள் அவற்றின் பாளைகளை உண்டனவென்றும், நாற்றங்கால்கள் வண்டல்மண்ணை யேற்று வளர்ந்த மேடாயின என்றும் பல்வேறு பக்கநின்றும் சொல்வார்தம் ஆரவாரம் மிக்கது.

புதுப்புனல் ஆடப் புகுந்த மகளிரும் மைந்தருமாகிய இருவர் அணிகளும் தம்முள் மயங்க, அவர் தம் உள்ளத்துள் இருந்த நிறையை இவ்வையை உடைத்தது. அதைப் போன்று மலையை ஒத்த மாபெரும் அணைகளையும் உடைத்து ஓடியது. அதன் அலைகள் கரையை உடைத்தன

உடைந்த கரைகளை அடைக்கும்பொருட்டு ஆளேறுதற்குப் பறையறைகவென்று கரை காவலர் உரைத்தனர். உடனே எங்கும் பறையொலி எழுந்தது. அவற்றைக் கேட்டு ஊரில் உள்ளாரும் உளங் கிளர்ந்து எழுந்தனர்.

மதுரையின் குடபால் அமைந்த குமரவேள் திருப் பரங்குன்றத்தில் அருவி தாலாட்டவும் காற்றுப் பாராட் டவும் கட்டிளங் காளையர் காதல் மாதராருடன் இன்புற் றுத் துயில்கின்றனர் என்ற செய்தியை மதுரையில் வாழ் வார்க்கு வந்து சொல்வதே போன்று தமிழ் வையைத் தண் ணம் புனல் மண்ணகத்தே பரந்தது.

கரைகளில் நின்ற மரங்கள் சிந்திய மலர்களும், மகளிர் கூந்தலினின்று வீழ்ந்த மலர்களும், மைந்தர் மார்பணிந்த மாலைகளினின்று உதிர்ந்த இதழ்களும் வெள்ளத்தின்மேல் பரந்து விளங்க, வையையாறு விண்மீன்களாகிய முத்து விளங்கும் வான கங்கையென வயங்கியது.

பைந்தமிழ் வளர்த்த பாண்டியனின் அணிவகுத்த குதிரைப்படைகளின் பெருந்திரளைப்போலப் பாய்ந்து பரந்து வந்தது வையை வெள்ளம் என்றார் மற்றொரு புலவர்.

> "தெரிமாண் தமிழ்மும்மைத் தென்னம் பொருப்பின்
> பரிமா நிரையிற் பரந்தன்று வையை"

என்பது அப் புலவர் வாக்கு.

## ரு. புதுப்புனல் விழா

கார் காலத்தில் ஆற்றின்கண் புதுப்புனல் வெள்ளம் பொங்கிவரும் மாண்பினைக் கண்ட மக்கள் மகிழ்ச்சிமிக்கு, அந்நீருக்குக் கையுறையாகப் பொன்மீன், புதுமலர், நறுஞ் சுண்ணம் போன்ற மங்கலப் பொருள்களை ஏந்திச்செல்வர்.

அப்பொருள்களைப் புதுவெள்ளத்தில் விட்டுப் புனலை வாழ்த்தி நீராடி வருவர். இத்தகைய புதுப்புனல் விழாப் பண்டைநாளில் நம் தண்டமிழ் நாட்டில் மிகச் சிறப்புற நிகழ்ந்ததென்பதைப் பரிபாடல் பறைசாற்றுகின்றது. மன்னனும் மக்களும் திரண்டு சென்று கரைபுரண்டு வரும் பெருவெள்ளத்தில் நீராடி மகிழும் சிறப்பு, மக்கட்கு மிக்க விருப்பூட்டும் நிகழ்ச்சியாக இருந்தது. பண்டு திருமா வளவனாகிய கரிகாலன் காலத்தில் காவிரியில் ஆடித்திங்கள் பதினெட்டாம் நாளில் இவ்விழாச் சிறப்புற நிகழ்ந்தத. இன்றும் பதினெட்டாம் பெருக்கென அவ்விழா நிகழ்ந்து வருகின்றது.

பாண்டிய நாட்டில் இப் புதுப்புனல் விழா ஆவணித் திங்கள் முழுநிலாக் கூடிய அவிட்டநாளில்—ஆவணியவிட்டத்தில் நடைபெற்றதெனப் பரிபாடல் பகர்கின்றது. பரிபாடல் நூலுள் வையையைப்பற்றிக் காணக் கிடைக்கும் எட்டுப் பாக்களுள் மூன்று பாக்களைப் பாடியருளிய நல்லந்துவனார் என்னும் நல்லிசைப் புலவர், வையைப் புதுப் புனல்விழா நாளைத் திறம்பெறக் குறிப்பிடுகின்றார்.

கதிரும் மதியும் முதலாய கோள்கள் இயங்கும் நெறிகள் மூன்றும். அவற்றை மேடம் இடபம் மிதுனம் என்னும் மூவகை இராசிகள் என்பர். ஓர் இராசியாவது இரண்டேகால் நாளாகலின், நந்நான்கு இராசியாகிய இவை ஒரொன்று ஒன்பது நாளாயின. மேட வீதி, இடபம் மிதுனம் கற்கடகம் சிங்கம் என்பன. இடப வீதி, கன்னி துலாம் மீனம் மேடம் என்பன. மிதுன வீதி, தேள் வில்லு மகரம் கும்பம் என்பன. இவை பன்னிரண்டும் கோள்களுக்கு இடனுதலான் இருக்கை எனப்பட்டன. வெள்ளி இடபத்தைச் சேரச், செவ்வாய் மேடத்தைச்

சேரப், புதன் மிதுனத்தைச் சேரக், கார்த்திகை உச்சமாக விடிதல் உண்டாகும். வியாழன், சனியின் இரு வீடுக ளாகிய மகர கும்பங்கட்கு அப்பாலுள்ள மீனத்தைச் சேரும். சனி, வில்லுக்குப் பின்னுகிய மகரத்தைச் சேரும். அக்காலத்து இராகு மதியை மறைக்கும். இங்ஙனம் கோள்கள் நிலைபெறும் நாள், ஆவணித்திங்கள் மதிநிறை நாளாகிய அவிட்ட நன்னுள் ஆகும்.

கார்காலத் தொடக்கமாகிய ஆவணித் தலைநாள் துவங்கி மலையில் பெய்யும் மழைநீர் வையையில் மதி நிறைந்த அவிட்டநாளில் மல்கும் பெருவெள்ளமாக வந்தது. அந்த நன்னுளில் மன்னனும் மக்களும் மகிழ்ந் தாடும் புதுப்புனல்விழாச் சிறப்புடன் நடைபெற்றது.

## ௪. புதுவெள்ளப் புனலாடுவார்

தமிழ் வையையில் தண்புனல் வெள்ளம் பொங்கிவந்த அம்மங்கல நன்னுளில், அணிசெய்யப்பெற்ற பிடிகள் அணி யணியாக வையைநோக்கிச் சென்றன; அவை போரணி புனைந்த களிற்றினங்கள் போர்க்களம் நோக்கி அணி வகுத்துச் சென்றமை யொத்தன; புனலாடுதற்குரிய ஆடையணிகளைப் புனைந்த மைந்தரும் மகளிரும் யானையின் மேலும் மென்னடைக் குதிரையின்மேலும் ஏறிப் புனலாடு தற்குப் புறப்பட்டனர்; நீர் விளையாட்டாகிய போரை விரும்பி வையையாற்றைப் போர்க்களமாகக் கருதி ஒரு வரின் ஒருவர் முற்பட்டுத் துறையை அடைய விரைந்து சென்றனர். புனலாடலாகிய போருக்குரிய கருவிகளைக் கைக்கொண்டனர். புழுகு நெய்யை உள்ளிட்ட துருத்தி, பனிநீரை ஊற்றிவைத்த கொம்பு, வெள்ளை நெட்டியால் அமைத்த மிதவை, நிறமூட்டிய நெட்டியால் புனைந்த தேர்

ஆகியவற்றைக் கொண்டு திரள்திரளாக நெருங்கிச் சென்றனர்.

புதுப்புனல் வெள்ளத்தில் பொன்னனைய இளமகளிர் ஆடப் புகுந்தனர். ஒருவரையொருவர் துரத்திப் புனலை முகந்து எறிந்து விளையாடினர். அவர்தம் கண்கள் அப்புனலை ஏற்று அமைந்தன. அம்மகளிருள் ஒருத்தி அச்செயலுக்குத் தோற்றுக் கண்களைக் கையால் மறைத்தாள். உடனே அவள்மேல் நீரைவீசி வெற்றியால் இறுமாந்த மகள் தன் கழுத்தில் அணிந்த பொன்னணியினால் அவளது அணிசெய்த மென்றோளைக் கட்டிச் சிறையாகப் பிடித்தாள். அங்ஙனம் சிறைப்பட்டாளுக்குப் பரிந்து, ஒருத்தி அவளுடைய கட்டை நீக்குதற்குப் பாய்ந்தாள். அவளுடைய கண்ணொளியால் செந்நிறத்தையுடைய வெள்ளநீர் தன் நிறமிழந்து கருமையாயிற்று.

தலைவியொருத்தி புனலாட்டுத் தீர்ந்து, தன் உடம்பு சார்ந்த தட்பம் நீங்கி வெப்பம் விளைதற் பொருட்டுக் குடிக்கக்கருதிக் காரமான மதுவைக் கையில் ஏந்தினள். அப்பொழுது அவள் விழிகள் நெய்தற் பூவைப்போலக் கறுத்திருந்தன. அவள் அம்மதுவை உண்டபின்னர்க் கண்டார்க்குக் களிப்பூட்டும் பெரிய நறவமலரைப்போல் சிவந்தன. தலைவன் அவ் விழிகளின் எழிலைப் பருகிப் பாணரைப்போலப் பலவகையாகப் பாராட்டிப் பாடினன். அவனது குறிப்பை அறியாத மற்றொருத்தி அத்தலைவனோடு கூடுதற்கு நாடி வருத்தமுற்றாள். அவளது நிலையினைத் தலைவி அறிந்தாள். அதனை உணர்ந்த தலைவன், இனி என்ன விளையுமோவென அஞ்சி நடுங்கித் தலைவியை நெருங்கினன். அப்போது தலைவி பலரும் காண அவன் மேல் பகைமிகுந்து தன் மாலையைப் பிய்த்தெறிந்து வெகுண்டாள். அதனால் மதுவுண்டு சிவந்த அவளின்

விழிகள் மேலும் மிக்க சிவப்பேறின. ஆருடிய தலைவியின் மேனியழகைஉளங்கொண்டு பாராட்டிய தலைவன்,சந்தனச் சேருடிய தனது மேனி நிலத்திற் படும்படி விழுந்து வணங்கினன். அவள், அத்தலைவன் சிரத்தைக் காலால் உதைத்துப் பின்னும் சினம் அடங்காமல் ஊடினள்.

இங்ஙனம் வையைப் புதுப்புனல் ஆடுவார் செயல்களை மையோடக்கோவனர் சித்திரித்துக் காட்டினர்.

இனி, கரும்பிள்ளைப் பூதனர் என்னும் பெரும்புலவர் வையைப் புனல்விழாக் காட்சியைச் சித்திரிக்கும் வகையினை நோக்குவோம்.

புதுப்புனல் ஆட விரும்பிய கூடல் மாநகரத்து மக்கள் கூட்டம் கூட்டமாகப் புறப்பட்டனர். மகளிர் இடையணி காலணிகளை இறுகுமாறு தாளிட்டு அணிந்தனர். புனல் விளையாட்டிற்கு உரிய துருத்திபோன்ற கருவிகளைக் கைக்கொண்டனர். பனிநீர் கலந்த சந்தனப் பூம்பெட்டியை எடுத்துக்கொண்டனர்.

சிலர் குதிரைமீதேறிச் சென்றனர். சிலர் பிடிமீதேறிப் பெயர்ந்தனர். கோவேறு கழுதையின்மேல் குந்திச் சென்றனர் சிலர். எருதுகள் பூட்டிய வண்டியேறிச் சென்றனர் சிலர். குதிரைகள் பூட்டிய வண்டியேறிச் சென்றனர் சிலர். சிவிகைமேல் இவர்ந்து சென்றனர் சிலர்.

அங்ஙனம் சென்றவருள்ளே அரும்பனைய இளம்பருவமுடையார் இருந்தனர். அன்றலர்ந்த நறுமலர் அனையார் உளர். கருமயிருக்கிடையே நரை விரவிய நடுப்பருவத்தினர் உளர். முழுநரை பழுத்த முதியவர் உளர். கற்புடை மகளிரும் காதற் பரத்தையரும் அத் திரளிடையே சென்

றனர். அவர்தம் பாங்கியரும் பணிமகளிரும் அணியணியாக அவருடன் சென்றனர். ஆடவர் மகளிர் என்னும் இருதிறத்தாரும் பெருந்திரளாகப் பெயர்தற் கிடனின்றி நிறைந்து சென்றதனால் அடிமேல் அடிவைத்து மெல்லெனச் சென்றனர். அங்ஙனம் சென்ற மக்களின் மென்னடை, இசைவல்லார் முழக்கும் தாளத்துடன் பொருந்திய இன்னியங்களின் விளம்பித நடையாகிய மென்னடை போன்று விளங்கிற்று.

> "அதிர்குரல் வித்தகர் ஆக்கிய தாள
> விதிகூட் டியவிய மென்னடை போலப்
> பதியெதிர் சென்று பருஉக்கரை நண்ணி" (பரி-௧0)

என்றார் புலவர்.

வையைக் கரையடைந்த மகளிருள்ளே பூத்த மலர் போன்ற பருவமாதர் சிலர் கரையில் நின்று நீரின் அழகைக் கண்டனர் சிலர் நீரணி மாடங்களில் ஏறி வெள்ளத்துள் விரைந்து சென்றனர். சிலர் குதிரையில் ஏறிச் சென்றனர். பிடிமீது ஏறி நீருள் நடந்தனர் சிலர். சிலர் ஆற்றின் இடையேயுள்ள திட்டுக்களை அடைந்து, ஆங்கே தாம் விரும்பிய கணவரைத் தழுவி மகிழ்ந்தனர். சிலர் ஊடலுவகையால் சிந்தை உருகினர். சிலர் காமமென்னும் கடும்படை ஊடலையுடைக்க, அவ்வூடலைத் துறந்து கணவருடன் கூடலை விழைந்தனர். இவரையன்றி அரும்பனைய இளம்பருவ மகளிர், பூவை நாடிவரும் பொறிவண்டைப் போலத் தம்முடைய காதற்கணவர், தம்மைக் கண்டுகளிக்குமாறு நீராடச் சென்றனர். அவ் விளமகளிர் தமக்குக் காவலாய் உடன்வந்த நரைமூதாட்டியராகிய பாட்டியர் தடுக்கவும் அவர்களைக் கடந்து தப்பிச் சென்றனர். அங்ஙனம் அம் மகளிர் சென்ற செயல், கப்பல் வணிகர் தாம் ஏற்றி

விட்ட பண்டங்களைக் கொடுத்து, ஆண்டுள்ளன கொண்டு மீண்டுவரும் கப்பலை எதிர்கொள்வாரைப் போன்று விளங்கியது. அவ் விளமகளிர் உளவார்வத்தை, வணிகர் தம் மனத்தார்வத்துடன் ஒப்பிடும் புலவர் புலமைத்திறம் போற்றற்கு உரியதாகும்.

"தாம்வேண்டு காதற் கணவர் எதிர்ப்படப்
பூமேம்பாடு உற்ற புனைசுரும்பிற் சேம
மடநடைப் பாட்டியர்த் தப்பித் தடையிறந்து
தாம்வேண்டும் பட்டினம் எய்திக் கரைசேரும்
ஏமுறு நாவாய் வரவெதிர் கொள்வார்போல்." (பரி-௧௦)

என்பன அப்புலவர் தம் நலங்கனிந்த மொழிகள்.

புதுப்புனல் ஆடப்புகுந்த மைந்தர் சிலர் மழகளிற்றின் மேலேறிச் சென்றனர். மகளிர் மடப்பிடிகளின்மேல் அமர்ந்து சென்றனர். அங்ஙனம் சென்ற களிறொன்று தனக்குப் பக்கமாகச் சென்ற பிடியைக்கண்டு காமத்தால் மயங்கிற்று. மேலிருந்த மைந்தர் செலுத்தவும் செல்லாது, தெருவின் ஒரு பக்கமாக அமைந்த அணிநிலை மாடத்தை யணைந்த இடத்திலே நெருங்கிநின்றது. அதைக் கண்ட மடப்பிடியும் அக்களிற்றின்மேல் சென்ற பெரு விருப்பால் பேதுற்று, தன்மீது அமர்ந்த தையலருடன் நடவாது மாடத்தயலே சென்றது. அந்த அணிமாடத்தில் அழகிய வேங்கைப் புலியின் உருவம் பாங்குற அமைந்திருந்தது. அப் புலிமுக மாடத்துப் பொய் வேங்கையைக் கண்ட அளவிலே அதனை மெய் வேங்கையென எண்ணியது. தனது காதற்களிற்றை மோதிப் பாயுமெனக் கருதி வெருவியது. அதனால் தன்மீது அமர்ந்த மகளிர் நடுங்கப் பாகரது குத்துக்கோலுக்கும் அடங்காது சிதைந்தது. காதற்பிடியின் கலக்கம் கண்டு களிறும் பிளிறிக் காளையர் தோட்டியைக் கடந்தது. அவ்வளவில் மைந்தர், களிற்றின்

முழக்கினை யடக்கிப் புலி முகத்தினின்றும் விலக்கினர். கலங்கிய பிடியுடன் களிற்றை அணைவித்து மகளிர் நடுக் கத்தை மாய்த்தனர். அங்ஙனம் மைந்தர் ஆற்றிய செயல், பாயும் கயிறும் மரமும் சிதைய வந்த மரக்கலத்தை மாலுமி திருத்திச் செலுத்தி, அகத்தவரின் நடுக்கத்தை அகற்றியதுபோலும்.

விழவின் பொருட்டு முழங்கும் யாழிசை, குரலிசை, கூத்திசை யெல்லாம் ஊடல்கொண்டார் உள்ளத் திண் மையை ஒழித்துக் காமத்தை விளைத்தன. அதனால் மக ளிரும் மைந்தரும் தம்முள் கூடி மகிழ விரும்பினராயினும் தாம் தாம் ஊடல் நீங்கி முற்படுதற்கு நாணினர். அந் நாணத்தால் முந்திச்சென்று கூடாது நலிந்தனர். அச் செயல், மாறுபட்ட மன்னர் இருவருடைய படைகள் பொருது நொந்து உடம்படுதற்கு உள்ளம் இயைந்தும், 'இப்படை முன்னுக உடம்பாட்டிற்கு உற்றது' என்னும் வார்த்தைக்கு அஞ்சிப் பின்னும் வருந்தி நின்ற செயலை யொக்கும்.

உள்ளத்தில் பெருகிய காமவெள்ளத்தால் கண்களில் களிப்புப் புலப்படவும் ஊரினர்க்கு அஞ்சி அதனை இரு பாலரும் ஒளிப்பர். அவரது நிலைமை, மறைந்து கள்ளை உண்ட மக்கள், தம் நடுக்கம் கண்டு பிறர் நகைத்துப் பழிப்பர் என்னும் அச்சத்தால் மறைக்கும் செயலை யொக்கும்.

புதுப்புனல் ஆடி இளைத்த இளமகளிரெல்லாம் தாம் பற்றிய புணைகளை விட்டுக் கரையேறினர். நெருப்பால் எழுப்பிய அகிற்புகை பொழிலெங்கும் பரவ, அதனால் தம் உடம்பின் ஈரம் புலர்த்தினர். அந் நறுமணப்புகை, திசையெங்கும் பரவிக் கமழ்ந்தது. மார்பிலே கலவை நறுஞ்சாந்தைப் பூசினர். அம் மகளிர் தம் குளிர்போக்கப்

பையினின்று எடுத்த பாத்திரத்தில் வெம்மையான கள்ளை யூற்றிக் கையில் தாங்கி உண்டனர்.

பையுள்ளிருந்து எடுத்த வெள்ளைப் பாத்திரம் முகிற் கூட்டத்தால் மறைக்கப்பெற்று வெளிப்போந்த முழு வெண்மதியை ஒத்தது. இப் பாத்திரத்தைப் பாவையர் கரத்தேந்தியிருப்பது இராகு என்னும் பாம்புபற்றிய பனி மதியைப் போன்றது. அதனைக் கையிலேந்திக் கள்ளைப் பருகும் பாவையர் மதியின் கலையமுதைப் பருகும் தேவ மாதரெனத் திகழ்ந்தனர். இங்ஙனம் கள்ளைப் பருகும் காரிகையர் காட்சியை மூன்று உவமைகளால் விளக்கும் புலவர் திறம் வியத்தற்கு உரியதாகும்.

"..............முகிலகடு கழிமதியின்
உறைகழி வள்ளத்து உறுநறவு வாக்குநர்
அரவுசெறி உவவுமதியென அங்கையில் தாங்கி
எறிமகர வலய மணிதிகழ் நுதலியர்
மதியுண்அர மகளென ஆம்பல்வாய் மடுப்ப." (பரி-௧0)

என்பது புலவர்தம் உவமைநலங் கனிந்த மொழி.

நீர்விளையாடிச் சோர்ந்து சோலையுள்ளிருந்த மகளிர் சிலர் குளிர்தாங்காது வெண்ணிற ஆடையால் போர்த்துக் கொண்டனர். சிலர்கூந்தல் ஈரத்தைப் போக்கப் பூந்துகிலைச் சுற்றி அதனை முறுக்கினர். சிலர் நறுமணக் கலவைச் சாந்தை அம்மியில் வைத்து நெருப்பின் நிறம்பெற அரைப்பர். சிலர் தாம் புதுவெள்ளத்திற்குக் கையுறை யாகக் கொண்டுவந்த பொன்னாற் செய்த சங்கும் நண்டும் மீனுமாயவற்றை நீரில் சிதறி நிலங்கள் விளைக! புலங்கள் பொலிக! என்று உளங் களிகூர வாழ்த்தி நின்றனர்.

சிலர், இரப்பார் குறிப்பறிந்து இலமென்னும் இழி சொல்லை இயம்புதற்கு முன்னர் நல்லறம் விரும்பி, நாடினோர்க்குப் பொருளை நயந்தளித்தனர்.

"இல்லது நோக்கி இளிவரவு கூறுமுன்
நல்லது வெஃகி வினைசெய்வார்." (பரி-௧0)

என்று அவ் வறம்புரியும் நல்லோரைக் குறித்தார் நல்லிசைப் புலவர்.

சில மகளிர் நீலமணிபோல நெறித்த தமது கூந்தலில் பத்துவகைத் துவரூட்டிச் சித்தம் களிக்க நீராடுவார். சிலர் தம் கூந்தலில் தோய்த்த எண்ணெய் கழல இழை பொடியை இட்டுப் பிசைவர். மாலையும் சாந்தும் மான் மதமும் மணங்கமழ நீருக்கு ஊட்டுவர் சிலர். இங்ஙனம் புனலாடிய மகளிர்க்கு அப் புனலாட்டால் முகமும் மார் பகமும் மிகச்சிவந்தன. காதலருடன் கூடி அன்னவகையில் நீராடிய பின்னும் அந்நீரின்மேல் பேரார்வத்துடன் செல்லும் அவரது நீள்விழிகள் காமனது கூரிய கடிமலர்ப் பாணத்தைப் போன்றன.

நீர்விளையாட்டில் சோர்வடையாத மைந்தர் சிலர் வாழைத்தண்டைப் பற்றி நீர்மேல் தாவிச் சென்றனர். தாழைமடலின் தாதினைத் திரையினும் நுரையினும் தூவி யாடினர் சிலர். விரைந்து செல்லும் ஓடத்தில் ஏறிப் புனல் வழியே செலுத்தினர் சிலர். புனலாடிய களைப்பால் சிறுமியர் இழைத்த சிற்றிலில் அட்ட சிறுசோற்றை உண்டற்குச் சிலர் சென்றனர். முன்னர் இடுதற்கு விரும்பிப் பின்னர் மறுத்த பேதையரின் பந்தும் கழங்கும் பறித்தோடினர் சிலர். அவற்றை வாங்குதற்குப் பின்னே ஓடிவந்த பேதைமகளிர்க்கு எட்டாமல் வெள்ளத்தில் துள்ளிப் பாய்ந்தனர். பின் அம் மைந்தர் தம்முள் மாறு பட்டு வேலும் வாளும் கோலும் தாங்கிப் பொய்ப்போர் புரிந்தனர். அதனல் வையைப் புனல், களிறுகள் பொருது உழக்கிய போர்க்களம் போலத் தெளிவில்லாது போயிற்று.

"அந்தண் கரைநின்று பாய்வாராய் மைந்தர்
ஒளிறிலங்கு எஃகொடு வான்மாறு உழக்கிக்
களிறுபோ ருற்ற களம்போல நாளும்
தெளிவின்று தீநீர்ப் புனல்." (பரி-௧௦)

என்று பாடினார் புலவர்.

மாலை வேளையில் சூழிருள் போக்க நிறைமதியோன் வானத்தில் எழுந்தான். புனலாடச் சென்றோர் வீடு நோக்கிப் புறப்பட்டனர். மகளிர் புனலாடப் புனைந்த அணிகளை மாற்றினர். மலர்ந்த பூக்களைக் கூந்தலிற் சூடினர். தோளணியும் தோடும் நீள்முத்து மாலையும் அணிந்தனர். பண்ணமைந்த பாடலால் பல்லாண்டு பாடினர். "வறுமையால் வாடிய புலவரது ஏற்றகை நிறையப் பொன்னை வாரிச் சொரியும் வழுதிமன்னனைப்போலத் தமிழ் வையை, நிலத்தின்கண் பொன்னைப் பரப்பும் சிறப்பான இயல்பு என்றும் குன்றாது நின்றொளிர்வதாக" என்று வாயார வாழ்த்தித் தென்றிசை நோக்கி நடந்தனர்.

"இலம்படு புலவர் ஏற்றகை ஞெமரப்
பொலஞ்சொரி வழுதியிற் புனலிறை பரப்பிச்
செய்யிற் பொலம்பரப்பும் செய்வினை யோயற்க." (பரி-௧௦)

என்று வாழ்த்தினார் புலவர்.

நல்வழுதியார் என்னும் நல்லிசைப் புலவர், வையையைப் பற்றித் தாம் பாடிய பரிபாட்டில் புதுப்புனலாடப் புகுந்த மகளிர் ஒளி பொருந்திய அணிகளைப் புனைந்தனர். சிலர் பொன்னாற் செய்த பூவை அணிந்தனர். சிலர் தாம் பூசிய சந்தனச் சாந்தைப் போக்கி அகிற் சாந்தை அணிந்தனர். சிலர் தம் வளர்ந்த கூந்தலை வாரி முடித்தனர். அக் கூந்தலில் வெட்டிவேருடன் கட்டிய பன்மலர்க் கதம்ப மாலையைச் சூடினர். சிலர் புனலாடுதற்குரிய புடைவை

களை இடையில் அணிபெற உடுத்தினர். சிலர் கொக்கு வாய்(கொக்கி) அணிசெய்த முத்துவடங்களைக் கழுத்தில் பூண்டனர். சிலர் வாசநெய் பூசி, வெண்ணிறக் கண்ணுடிகளில் தம்முடைய அழகைக் கண்டு மகிழ்ந்தனர். சிலர் தக்கோலம், குங்குமப்பூ, இலவங்கம், கர்ப்பூரம், சாதிக்காய் ஆகிய பஞ்ச வாசங்கலந்த தாம்பூலத்தை வாய்க்கொண்டு மென்றனர். சிலர் தோளில் தொடிகளையும் கையில் வளைகளையும் அணிந்தனர். சிலர் கட்டுவடத்தையும் கால் மோதிரத்தையும் (மெட்டி) தரித்தனர். சிலர் யோசனை தூரம் கமழும் வாசனைப் பொருள்களை மேனியிற் பூசினர்.

இங்ஙனம் தம்மை அணிசெய்துகொண்ட மகளிர் குதிரைகள் மீதும் பிடிகள்மீதும் அமர்ந்து, அன்னப் பேடைகளென்னப் புறப்பட்டனர். ஆடவர் சிலர் கடு நடைப் புரவிகளை ஏறிக் கடாவினர். சிலர் களிறுகளின் மேல் இவர்ந்து கடிது செலுத்தினர். சிலர் மணிநெடுந் தேர்களில் ஏறிப், பூட்டிய புரவிகளைத் தாற்றுக்கோலால் குத்திக் காற்றெனச் செலுத்தினர். இவ்விதம் மைந்தரும் மகளிரும் விரைந்து வந்து வையைக் கரையில் நிறைந்தனர். கரையிற் கூடிய கூடல் நகராரெல்லாம் புகழ்ந்து கூற, வையை நீர் பெருகி வந்தது. அதனைக் காண்பார் கூட்டம் அதன் கரையை ஒப்ப நிறைந்தது.

> "உரைதர வந்தன்று வையைநீர் வையைக்
> கரைதர வந்தன்று காண்பவர் ஈட்டம்." (பரி-கஉ)

என்றார் புலவர்.

வையை நீர் வெள்ளம் தடங்கரைக்கு மேலே தாவி ஏறிற்று. அது தன்னைக் காண்பார்தம் காதல் வெள்ளத்தையெல்லாம் அள்ளிப் பருகியதுபோலப் பெருகி வந்தது.

நல்லந்துவனர் பாடிய வையை பற்றிய மற்ருெரு நற்றமிழ்ப் பரிபாடலில் புனலாடப் புறப்படும் மதுரை மக்களின் விருப்பையும் விரைவையும் சிறப்புறக் குறிப்பிடுகின்ருர்.

மதுரை மதிலின் மதகுகளில் புது வெள்ளம் மோதிப் பாயும் ஓதையால் ஊரிலுள்ளார் துயில் உணர்ந்து எழுந்தனர். புனலாடும் விருப்பால் புறப்பட விரைந்தனர். தூக்க மயக்கத்தால் தேரேறிச் செல்லுவார் வண்டிகளில் பூட்டும் எருதுகளைத் தேரில் பூட்டிச் செலுத்தினர். வண்டிகளில் செல்லுவார், தேரில் பூட்டும் குதிரைகளை வண்டிகளில் பூட்டி யோட்டினர். குதிரைகளுக்கிடும் சேணம் முதலாயவற்றை யானைகளுக்கிட்டு அணி செய்தனர். சிலர் மறதியால் யானைகளை அணிசெய்யாமலே நடத்திச் சென்றனர். தாந்தாம் முன்னர்ச் செல்லும் நல்விருப்பால் மகளிர்க்குரிய அணிகளை மைந்தரும், மைந்தர்க்குரிய அணிகளை மகளிரும் மாறி மாறி யணிந்து வையை நோக்கி விரைந்தனர். அங்ஙனம் அணிந்து கொள்ளாத மக்கள் வீதியில் வந்து நின்று வேதனையுற்றனர்.

"நீரூர் அரவத்தால் துயிலுணர் பெழீஇத்
திண்டேர்ப் புரவி வங்கம் பூட்டவும்
வங்கப் பாண்டியில் திண்டேர் ஊரவும்
வயமாப் பண்ணுந மதமாப் பண்ணவும்
கயமாப் பேணிக் கலவா தூரவும்
மகளிர் கோதை மைந்தர் புனையவும்
மைந்தர் தண்டார் மகளிர் பெய்யவும்
முந்துறல் விருப்பொடு முறைமறந் தணிந்தவர்." (பரி—உ0)

என்று, புதுப்புனல் ஆடும் விருப்புடையாரின் உள்ளக் குறிப்பைத் தெள்ளத் தெளியச் சொல்லும் நல்லந்துவனாரின் நாவன்மையும் பாவன்மையும் பாராட்டற்குரியதாகும்.

புதுப்புனலாட விரைந்து நடந்த மைந்தரும் மகளிரும், 'இவர்கள் பெருந்தவம் புரிந்தார்!' என்று கண்டவர் வியந்து கூறுமாறு வையைக் கரையில் வந்து நிறைந்தனர். கரையில் வந்து நிறைந்த மகளிரால் வையை அழகுற்றதோ, வையைப் புது வெள்ளத்தால் அவ்வணிதையர் அணியுற்றனரோ என்பதை அறிதல் அரிது.

> "ஏரணி இலங்கெயிற் றின்னகையவர்
> சீரணி வையைக் கணிகொல்லோ வையைதன்
> நீரணி நீத்தம் இவர்க்கணி கொல்லெனத்
> தேருநர் தேருங்கால் தேர்தற் கரிதுகாண்." (பரி-உஉ)

என்பது புலவர் மொழியாகும்.

புனலாடி மகிழ்ந்த மக்கள் போர்வையால் தம்மை மூடுவார்; தம்முள் ஊடுவார்; ஊடலொழிப்பார்; ஊடல் உணர்வார்; ஆடுவார்; பாடுவார்; ஆரவாரிப்பார்; சிரிப்பார்; சிரித்தோடுவார்; ஓடித்தளர்வார்; உறவினரைத் தேடுவார்; தேடித்திரிவார்; இங்ஙனம் கற்றாரும் கல்லாரும் கயவரும் கற்புடையாளைப் பெற்றாரும் கணவனைப் பிழையாத பெண்டிரும் பிறரும் திண்டேர்ப் பாண்டிய மன்னனும் வையைத் துறையில் வந்து நிறைந்தனர்.

இவர்கள் அணிந்த மாலைகளும் பூசிய வாசனைப் பொருள்களும் அவ் வெள்ளத்தில் நிறைந்தன. அதனால் ஈக்கள் மொய்க்கும் கள்ளை இவ்வையை கொண்டதென்றும், மைந்தரும் மகளிரும் பூசிய வாசனைப் பொருள்களின் மணத்தை வீசியதென்றும், அந்தணர்கள் அந்த வெள்ளத்தில் நீராடாது நீங்கினர். வையைநீர் தேன் கலந்து வழுவழுப்புற்றதென்று வாயைக்கூடக் கழுவாமல் ஒழிந்தனர்.

மதுரைவாழ் மக்களுடன் பாண்டிய மன்னன் வையையில் நீராடிய சிறப்பை ஒரு புலவர் நயம்படச் சித்திரிக்

கின்றார். ஆயிரம் கண்களையுடையவனாகிய இந்திரன் ஆகாய கங்கையாற்றில் தேவர் குழாத்துடன் நீராடியது போலப் பாண்டியன் கூடல்மா நகரத்து மக்களுடன் கூடி வையையில் நீராடி மகிழ்ந்தான்.

"வெருவரு கொல்யானை வீங்குதோள் மாறன்
உருகெழு கூட லவரோடு வையை
வருபுன லாடிய தன்மை பொருவுங்கால்
..............................
அந்தர வானியாற்று ஆயிரங் கண்ணினன்
இந்திர னாடுந் தகைத்து." (பரி. தி-உ)

என்றார் அப் புலவர்.

## ரு. திருமருத முன்றுறைப் பெருமை

வையையில் மக்கள் சென்று நீராடுதற்குரிய துறைகள் பல உளவேனும் பரிபாடலால் சிறப்பாகக் குறிக்கப் பெறுவது திருமருத முன்றுறையாகும். அஃது, அடர்ந்த மருத மரங்கள் நிறைந்த கரையைச் சார்ந்த துறையாகும். நீராட வருவார் தங்குதற்குரிய தண்பொழில் அமைந்த அழகிய துறையாகும். கூடலாரெல்லாம் வந்து கூடினும் கூடற்கோமான் படையுடன் வந்து நாடினும் தங்குதற்கு வாய்ப்புடைய வளமான பொழில்கள் சூழ்ந்த எழில் துறையாகும். நீர் வற்றிய வேனில் நாளிலும் கரையைச் சார்ந்து நீர் செல்லும் முன்னடித் துறையாகும். ஆதலின் திருமருத முன்றுறை என்று புலவர் பாடும் புகழ்பெற்றது.

புதுப்புனல் விழா நிகழும் நன்னாளில் இத் திருமருத முன்றுறைக்கண் குழலும் யாழும் முழவும் ஆகிய பல் வகை இன்னியங்கள் முழங்கும். அரசனால் தலைக்கோல் அரிவையென விருதுபெற்ற ஆடல்மகளிரும் பாடல்

பாணரும் அத்துறையைச் சார்ந்த பொழிலிடத்தே ஆடலைத் தொடங்கினர். நாடகமகளிரின் ஆடல் ஒலியும் இன்னியங்களின் பெரு முழக்கமும் கரையை வந்து மோதும் வெள்ளத்தின் பேரொலியுடன் கூடி உருமிடி சேர்ந்த மழைமுழக்கத்தை யொக்கும். இங்ஙனம் மையோடக் கோவனார் மருதத்துறைச் சிறப்பைக் கூறிப்போந்தார்.

ஆசிரியர் நல்லந்துவனார் இத்திருமருதந் துறையின் அழகில் அகத்தைப் பறிகொடுத்து எங்ஙனம் பாராட்டுவதெனத் தெரியாது திக்குமுக்காடுகிறார்.

மலைச்சாரலில் அடர்ந்து வளர்ந்த சோலைமலர்களை அருவி கொண்டு வந்து சொரிந்தது. அவற்றை அலைகள் தள்ளிக்கொண்டு வந்து திருமருதத் துறைக்கண்ணே நிறைத்தது. அதனால் பூவை ஆராய்ந்து கொய்யும் கோலினையுடைய பண்டாரங்கள் பறித்த பூக்களைக் கொண்டு வந்து குவிக்கும் பூ மண்டபத்தைப் போன்று விளங்கியது அத்துறை.

மலர்ப்போர்வையும் மலைமுத்துக்கள் அணிந்த மார்பும் திரையும் நுரையும் குமிழியும் நறுமணச் சாந்தும் கொண்ட வையையாகிய நங்கையின் இடைக்கணிந்த எழிற் பூந்துகிலென இலங்கியது அத்துறை. கள்ளை வாய்க் கொண்டு பருகும் நிலமகள் மிடறென மிளிர்ந்தது அத் துறை. இங்ஙனம் பலபடப் பாராட்டும் சீருடன் விளங் கிய துறையை இவற்றுள் யாதென்று ஓதுவேன் என்று வியந்து மொழிந்தார் அருந்தமிழ்ப் புலவர்.

"வேய்பயில் சோலை அருவி தூர்த்தரப்
பாய்திரை யுந்தித் தருதலான் ஆய்கோல்
வயவர் அரிமலர்த் துறையென்கோ
அரிமலர் மீப்போர்வை ஆரந்தாழ் மார்பில்
திரைநுரை மென்பொகுட்டுத் தேமணச் சாந்தின்

அரிவை யதுதானை யென்கோ கள்ளுண்ணூஉப்
பருகு படிமிடறு என்கோ பெரிய
திருமருத நீர்ப்பூந் துறை." (பரி-கக)

என்று வியந்து பாடினார் நல்லந்துவனார்.

திருமருத முன்றுறைக்கண் முழவுகள் முழங்கின. அவ்வொலிக்கு எதிராக இடி முழங்கியது. யாழ்வல்லார் பலர் அங்கு யாழிசைத்தனர். அவ் விசையினுக்கு எதிராக மலர்க்கொம்புகளில் வண்டினங்கள் நின்றொலி செய்தன. ஒருபால் குழலோசையெழ, அதற்கு மாறாகத் தாதை ஊதும் தும்பிகள் துதைந்து ஒலித்தன. காற்றாகிய நட்டுவன் கடிமலர்க்கொடியாகிய விறலியை ஆடச் செய்தான். இங்ஙனமாக ஒன்றற்கொன்று மாறுகொள்ளும் நிகழ்ச்சிகள் தீம்புனல் வையைத் திருமருத முன்றுறையில் நிகழ்ந்தன. இங்ஙனம் மற்றொரு புலவர் இம்மருதத்துறையை மகிழ்ந்து போற்றினார்.

இத்துறைக்கண் பாணர்கள் சென்று யாழிசைத்து மருதப்பண்ணை அருமையாகப் பாடுவர். அவர்கள் பாடப் பாட மைந்தரும் மகளிரும் நீரில் பாய்ந்து ஆடுவர்; தம்முள் ஊடுவர்; ஊடலுணர்ந்து கூடுவர்; கூடி மகிழ்வர்; ஓடிப் பிரிவர்; தேடித் திரிவர்; மலரைச் சூடித் தொழுவர். இங்ஙனம் இருவரும் துறைக்கண் ஆடியமையால் வையை நீர் எச்சிலாயிற்று என்று கூறினார் இன்னொரு புலவர்.

## ௬. மார்கழி நீராடல்

நம் தண்டமிழ்நாட்டில் பண்டைநாள் தொட்டுக் கன்னிப்பெண்கள் மழைவளங் குறித்தும் மாண்புடைய கணவரை அடைதற் பொருட்டும் மார்கழித்திங்கள் வைகறையில் நீராடிப் பராசத்தியை வழிபட்டுப் பாவை நோன்பு நோற்றனரெனப் பரிபாடல் பறைசாற்று

கின்றது. இதனைப் பிற்காலத்தில் எழுந்த, மணிவாசகர் அருளிய திருவெம்பாவையும், ஆண்டாள் அருளிய திருப்பாவையும் நன்கு வலியுறுத்தும். சைவ வைணவக் கன்னிப் பெண்களே இந்நோன்பை மேற்கொண்டொழுகினர் என்பதைத் திருவெம்பாவையும், திருப்பாவையும் விளக்குகின்றன.

மார்கழி நீராடும் மகளிர் ஐந்து வயது முதல் பன்னிரண்டு வயது வரையுள்ள கன்னிப்பெண்களே. இவர்கள் மார்கழித்திங்கள் திருவாதிரை நாளுக்குப் பத்துநாட்கள் முன் தொடங்கித் திருவாதிரை நாளில் நோன்பை முடிப்பர். இப்பத்து நாட்களிலும் பேதையரும் பெதும்பையரும் மங்கையருமாய இளம்பெண்கள் கதிரவன் உதயமாதற்கு முன்னர் வைகறையில் துயிலெழுந்து தம் தோழியர் சூழ ஆற்றையடைவர். ஆற்றில் நீராடித் தூய நுண்மணலால் சத்தியாகிய பார்வதியின் படிவத்தைச் சமைத்து வழிபட்டு வரம் வேண்டுவர்.

"முன்னி யவள்நமக்கு முன்சுரக்கும் இன்னருளே
என்னப் பொழியாய் மழையேலோ ரெம்பாவாய்."

என்று, பெண்கள் வரம் வேண்டிய முறைமையைத் திருவெம்பாவை விளக்கிற்று. இக்கருத்தையே பரிபாடல்,

"வெம்பா தாக வியனில வரைப்பென." (பரி-கக)

மகளிர் வரம் வேண்டியதாகக் குறித்தது. இம் மார்கழி நீராடலை 'அம்பா ஆடல்' என்றும் குறித்தது. மார்கழித் திருவாதிரைக்குப் பின் தைத்திங்கள் பூசநாள் வரை ஆடும் நீராடல், தைந்நீராடல் எனப்படும். பூச நீராடல் என்பதும் இது பற்றியே யாகும். தைந்நீராடும் கன்னியர் தத்தம் தாயருடன் சென்று நீராடி வழிபடுவர். ஆதலின் அஃது 'அம்பா ஆடல்' எனப்பட்டது.

## எ. தைந்நீராடல்

ஆசிரியர் நல்லந்துவனர் தாம் பாடிய பாடலில் தைந்நீராடலைப் பற்றிக் கூறுகின்ருர். முன்பனிப் பருவம் வந்தது. கதிரவன் வெம்மையைச் செய்யாத கடைமாரியுடையது மார்கழித்திங்கள். அம்மாதத்துத் திங்கள் நிறைந்த திருவாதிரை நாளில் ஆகமங்களை உணர்ந்த அந்தணர் ஆதிரைக்குத் தெய்வமாகிய சிவனுக்கு விழா எடுப்பர். ஆதிரைத் திருவிழா, சைவர்க்குப் பெருவிழா: 'ஆதிரை நாள் காணுதே போதியோ பூம்பாவாய்!' என்று உளங்கனிந்து பாடினர் உயர் ஞானசம்பந்தர்.

ஆதிரை நன்னுளில் அந்தணர் பொன்னைத் தானமாகப் பெறுவர். முதுமகளிர் நோன்பு நோற்கும் முறைமையை முன்னின்று வழிகாட்டக் கன்னியர் வையை நீர் படிந்து பாவை நோன்பாற்றினர். அன்று நோன்பை முடித்த மொய்குழற் கன்னியர், கரைக்கண் உறையும் அந்தணர் வேதநெறியால் வளர்க்கும் செந்தழல் அருகே சென்று குளிர் காய்வர். அதன்கண் தம் ஈர ஆடையைப் புலர்த்துவர்.

இங்ஙனம் மார்கழித்திங்கள் மதிநிறைந்த ஆதிரை நன்னுளில் கன்னியர் தொடங்கிய நோன்பைத் தைத் திங்கள் பூச நாள் வரையில் நோற்பர் போலும். ஆதலின் இதனைத் தைந்நீராடல் என்று குறிக்கிருர் புலவர். இதைப் பற்றிக் கலித்தொகை, ஐங்குறுநூறு, நற்றிணை முதலிய நூல்களிலும் விளக்கமாகக் காணலாம்.

"ஞாயிறு காயா நளிமாரிப் பிற்குளத்து
மாயிருந் திங்கள் மறுநிறை யாதிரை
விரிநூல் அந்தணர் விழவு தொடங்கப்
புரிநூல் அந்தணர் பொலங்கலம் ஏற்ப

வெம்பா தாக வியனில வரைப்பென
அம்பா ஆடலின் ஆய்தொடிக் கன்னியர்
முனித்துறை முதல்வியர் முறைமை காட்டத்." (பரி-கக)

தைந்நீராடி நோன்பு நோற்றனர் என்று தமிழ்ப் பெரும் புலவர் நல்லந்துவனர் சொல்லியருளினர். இங்ஙனம் தைந்நீராடும் மகளிர், தாயர் பக்கம் நிற்க இந்நோன்பைக் கொண்டு வழிபாடியற்றுதற்கு முன்னாள் நெருப்பில் நின்று நெடுந்தவம் புரிந்தனரோ என்று வியந்தார் புலவர்.

"தீயெரிப் பாலும் செறிதவமுன் பற்றியோ
தாயருகா நின்று தவத்தைந்நீ ராடுதல்
நீயுரைத்தி வையை நதி." (பரி-கக)

என்பது புலவர் மொழி.

தைந்நீராடுகின்ற தையலர் வையைநீரை வாழ்த்தினர். சிறுமியராதலின் தாம் ஆடுதற்கேற்பக் குறைவாகத் தெளிந்து செல்லும் அத்தீம்புனலை,

"நீ தக்காய்! தைந்நீர் நிறந்தெளிந்தாய்." (பரி-கக)

என்று போற்றினர். யாம் சிறந்த காதலரைச் சேரும் வீறுபெறுக என வேண்டிநின்றனர் சிலர். பூவில் தேனுண்ட வண்டு, அப்பூவை நீங்குதல்போல, எம்மால் விரும்பப்படும் கணவர் எம்மைவிட்டு நீங்காமல் விரும்பிக் காப்பாராக என வேண்டினர் சிலர். எம் கணவரும் யாமும் கிழவர் கிழவியர் என்று சொல்லப்படாமல் நிலைத்த இளமையைப் பெற்றுச் செல்வத்தோடும் சுற்றக்கிளையொடும் நிலைபெறுக! என வேண்டினர் சிலர். இங்ஙனம் மணற்பாவையை வழிபட்ட மகளிர் வரம் வேண்டிநின்ற செயலைக்,

"கழுத்தமை கைவாங்காக் காதலர் புல்ல
விழுத்தகை பெறுகென வேண்டுதும் என்மாரும்
பூவீழ் அரியிற் புலம்பப் போகாது

யாழ்வீழ்வார் ஏம மெய்துக என்மாரும்
கிழவர் கிழவியர் என்றுடேழ் காறும்
மழவீன்று மல்லற்கேள் மன்னுக என்மாரும்," (பரி-கக)

என்னும் அடிகளால் புலவர் புலப்படுத்தினர்.

பாவை நோன்பு நோற்கும் பாவையரும் தமக்குச் சிறந்த கணவர் வாய்க்கவேண்டுமென வரம் வேண்டி வழிபட்ட செயலைத் திருவெம்பாவை இனிது விளக்கும்.

"உன்னடியார் தாள்பணிவோம் ஆங்கவர்க்கே பாங்காவோம்
அன்னவரே எங்கணவ ராவார்."

எனவும்,

"எங்கொங்கை நின்னன்பர் அல்லார்தோள் சேரற்க."

எனவும் வரும் திருவெம்பாவை அடிகள் அக்கருத்தை நன்கு விளக்கும்.

## அ. திருப்பரங்குன்றம்

மதுரையின் குடபால் அமைந்த மலை, திருப்பரங்குன்றம் ஆகும். தமிழ்ப்பெருங் கடவுளாகிய தண்ணருள் முருகன் எழுந்தருளிய ஆறு படைவீடுகளுள் அதுவும் ஒன்றாகும். குறிஞ்சித் தெய்வமாகிய குமரவேள் திகழும் இக்குன்றினை இன்றமிழ்ப் புலவராகிய நக்கீரர் ஆற்றுப்படை நூலால் போற்றியருளினர். மதுரை ஆசிரியராகிய நல்லந்துவனர் முருகப்பெருமானிடத்தும் அவன் எழுந்தருளிய பரங்குன்றத்திடத்தும் நிரம்பிய பற்றுக்கொண்டவர். ஆதலின் பரிபாடல் நூலுள் செவ்வேளைப்பற்றிப் பாடிய, தமது பாடல் ஒன்றில் பரங்குன்றின் பெருமையை விளங்க உரைக்கின்றார். அக்குன்றில் கடம்ப மரத்தடியில் கோயில் கொண்டருளும் கந்தவேள் கருணைச் சிறப்பை விருப்புடன் பாராட்டுகின்றார், பரங்குன்றின் வாழ்வையே தம் வாழ்

வாகக் கருதி உள்ளுருகிப் பாடுகின்றார். இவருக்கிருந்த பரங்குன்றின் பற்றைக்கண்ட பழந்தமிழ்ப் புலவராகிய மதுரை மருதனிளநாகனார்.

"சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேல்
சீர்மிகு முருகன் தண்பரங் குன்றத்து
அந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை."

என்று பாராட்டிப் பாடினார்.

கந்தவேளிடத்துக் கனிந்த பக்திபூண்ட அந்துவனாராய அருந்தமிழ்ப் புலவர் பாடியனவாகக் காணக்கிடைக்கும் வையையைப்பற்றிய மூன்று பாடல்களுள் ஒரு பாட்டிலே திருப்பரங்குன்றத்தை மூன்றிடங்களில் குறிப்பிடுகின்றார். திருப்பரங்குன்றத்தில் பெய்த மழை மதுரைத் தெருக்களின் வழியாகப் பரந்துவந்து வையையில் பாய்ந்தது. அச்செயல், குன்றிடத்தே இரவுக்குறிக்கண் கூடிய தலைவர் அருவி தாலாட்டவும் காற்றுப் பாராட்டவும் மகளிர் மார்பிடத்தே கிடந்து துயில்கொண்டனர் என்ற செய்தியை மதுரையிலுள்ளார்க்குச் சென்று சொல்வதேபோல இருந்தது.

"வரையழி வாலருவி வாதா லாட்டக்
கரையழி வாலருவிக் கால்பா ராட்ட
இரவில் புணர்ந்தோர் இடைமுலை யல்கல்
புரைவது பூந்தாரான் குன்றெனக் கூடார்க்கு
உரையோ டிழிந்துரா யூரிடை யோடிச்
சலப்படை யான்இரவில் தாக்கிய தெல்லாம்
புலப்படப் புன்னம் புலரியின் நிலப்படத்
தான்மலர்ந் தன்றே
தமிழ்வையைத் தண்ணம் புனல்." (பரி-சு)

இவ்விடத்துப் பரங்குன்றினைப் பூந்தாரான் குன்றெனப் புலவர் குறிப்பிடுகின்றார்.

தலைவன் ஒருவன் இற்பரத்தையுடன் புதுப்புனலாடி மகிழ்ந்தான். அதனை அறிந்த காதற்பரத்தை அத்தலைவனுடன் ஊடினாள். அவளது ஊடலைத் தணிக்கத் தலைமகன் தளிரைக் கையுறையாகத் தாங்கிச் சென்று, புதுப் புனல் விழவை விருப்பொடு புகன்றான். அவனது மொழியைக் கேட்டு மேலும் புலந்தாள். அவன் கொண்டுவந்த கொய்தளிரை, "நீ எனக்கெனக் கொய்தாயில்லை; நான் பழையேனாதலின் நீ புதியராக விரும்பும் மகளிர்க்குக் கொய்தாய்," என்று கூறிப் புலந்தாள். தலைவன் இத் தளிர்கள் அத்தன்மையவல்ல என்று சொல்லி மறுத்தான். அவன் மறுத்துக்கூறிய மொழிகளைக் கருத்தில் கொள்ளாதவளாய், உன்பால் உண்மையன்பு இல்லை; முன்னெல்லாம் கொய்த தளிரைக் கொடுக்க என்பால் மிக்க அன்பால் விரைந்து வருவாய்; அப்போது தளிரில் வாட்டமிராது. இப்பொழுதோ மிகவும் வாடியுள்ளது; மற்றவளுக்காக இதைக் கொய்துசென்று கொடுத்தாய்; அவள் அன்பின்றி வெறுத்து மறுத்தாள்; அதன் பின்னர் என்னைத் தேடி வந்தாய்; அதனால்தான் இத்தளிர் இங்ஙனம் வாடியது. நினது மார்பில் தரித்த மாலை வாடுமாறு வருந்திக் கொய்த நின் பெருந்தகைமையை நினைந்து நெஞ்சம் கனிந்தாளில்லையே!" என்று பலவாறு பேசி நகையாடி ஊடினாள்.

காதற் பரத்தையின் கடுஞ்சொற்களைப் பொறாத தலைவன், "வையையில் பெருவெள்ளம் வந்தமையால் தெப்பம் ஏறிக் கடந்து வருவதற்குக் காலந்தாழ்த்தது; திருப்பரங் குன்றத்தின்மீது ஆணையாகச் சொல்கிறேன்; இஃது உண்மையாகும்," என்று உரைத்தான்.

"புனைபுணை ஏறத் தாழ்த்ததை தளிரிவை
நீரில் துவண்ட சேஎய்குன்றம் காமர்
பெருக்கன்றோ வையை வரவு." (பரி-கூ)

என்பது புலவர் மொழி.

இங்ஙனம் தலைவன் பரங்குன்றின்மீது ஆணையிட்டுப் பகர்ந்தும் அவனது மொழிகளைக் கொள்ளாது மேலும் ஊடல் கொண்டு பல உரைத்தாள். அது கண்ட தலைவன், "நான் குளித்த நற்றடத்தில் மற்றொருத்தி ஆடினாள்; அவள் பேதைப் பருவத்தினள்; அவள் அலைக்குள் அழுந்திப் பின் எழுந்து மயங்கி என்மேல் விழுந்தாள்; அவளை யான் சென்று எடுப்பதற்குமுன் தானே எழுந்து தடங்கரை அடைந்தாள்; அவள் காம நுகர்ச்சி காணும் பருவமுடையவள் அல்லள்; அவளையன்றி என்னை அணைந்தவள் ஏவளுமில்லையே; அவளோடு நான் ஆற்றில் புனலாடவுமில்லையே," என்று சொல்லித் துயரொடு நின்றான்.

அப்பொழுதும் அக்காதற் பரத்தை, "நீயே தெளிவாகத் தெரிந்துகொள்; நீ அவளுடன் ஆடிய ஆறு இந்த வையையேதான்," என்று இயம்பினாள். அப்போதும் தலைவன், "பரங்குன்றின் தலையைத்தொட்டு ஆணையிடுகிறேன்; யான் அங்ஙனம் செய்யவில்லை," என்று உறுதி மொழி உரைத்தான்.

"இவ்வையை யாறென்ற மாறென்னை கையால்
தலைதொட்டேன் தண்பரங் குன்று." (பரி-கூ)

இங்ஙனம் தலைவன், பரங்குன்றின்மீது இருமுறை ஆணையிட்டுக் கூறுவதாகக் குறிக்கும் ஆசிரியர் நல்லந்துவனார், அதன் வாயிலாகத் திருப்பரங்குன்றத்திடத்துத் தாம் கொண்டுள்ள தனிப்பெரு விருப்பினை நன்கு புலப்படுத்துகின்றார்.

## கூ. காதற் காட்சிகள்

மக்களுடைய வாழ்வுக்கு இலக்கணம் வகுத்துக் கூறும் சிறப்பு, நந்தம் செந்தமிழ் நன்மொழி ஒன்றற்கே யுண்டு. எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐவகை இலக்கணங்களுள் பொருள் இலக்கணமே மக்கள் வாழ்வு முறையை வகுத்துக் காட்டுகின்றது. இப் பொருள் இலக்கணந்தானும் அகமென்றும் புறமென்றும் இருவகைப்படும். வாழ்விடை நிகழும் தனித்தனி நிகழ்ச்சிகளைத் துறைகள் என்பர். அகப்பொருள் துறைகளும் புறப்பொருள் துறைகளும் பலவாம்.

இங்ஙனம் அகத்துறை புறத்துறை மருவிய அருந் தமிழை, "நறைபழுத்த துறைத் தீந்தமிழ்," என்று பாராட்டினர் குமரகுருபரர்.

"சிறைவான் புனல்தில்லைச் சிற்றம்
பலத்தும்என் சிந்தையுள்ளும்
உறைவான் உயர்மதில் கூடலின்
ஆய்ந்தவொண் தீந்தமிழின் துறை"

என்று மகிழ்ந்து போற்றினர் மாணிக்கவாசகர்.

கருத்தொருமித்த காதலர் தம்முள் கூடிப்பெறும் இன்பமே அகமெனப் படுவதாயிற்று. அவ் இன்பம் அகத் துணர்வால் காதலர் தாமே அனுபவித்தறிவதன்றிப் பிறர்க்கு இத்தகைத்தென அறிவிக்க வொண்ணாதது. ஆதலின் அகம் என்னும் பெயர்பெற்றது. ஏனை அறமும் பொருளும் பற்றிய திறமெல்லாம் தாம் உணர்வதோடு மற்றவர்க்கும் உரைக்கும் பெற்றியன வாதலின் புறமெனப் பட்டன.

தமிழில் அகத்துறை இலக்கியங்கள் அளவிலாதன உள. அவற்றுள் பரிபாடல் நூலும் ஒன்று ஆகும். அந் நூலில் வையையைப்பற்றிக் காணலுறும் எட்டுப் பாடல்

களுள் முதற் பாடல் "தலைமகள் வாயில் மறுத்தல்" என்னும் அகத்துறையில் அமைந்ததாகும்.

தலைவன் ஒருவன் இற்பரத்தையுடன் வையைப் புதுப் புனல் விழாவிற் கலந்து நீராடி மகிழ்ந்தான் என்ற செய்தியைக் காதற் பரத்தை கேள்வியுற்றாள். அத்தலைவன் தன்பால் வந்தபோது அன்பின்றி வெறுத்து ஊடினாள். அவளது ஊடலைப் பெரிதும் முயன்று தணித்துப் புணர்ந்து மகிழ்ந்தான். இச்செய்தியைத் தலைவனுக்குரிய தலைவி அறிந்தாள். தலைவனிடத்தினின்றும் தூதுபோந்த விறலிக்குத் தான் கேள்வியுற்ற செய்திகளைக் கூறித் தலைவி வாயில் மறுத்தாள்.

இற்பரத்தையுடன் விழவணி கண்ட தலைவன் காதற் பரத்தையை நாடிக் கையில் தளிர்கொண்டு சென்றான். அவள் தளிரின் வாட்டத்தைக் கண்டு, நினது நாட்டமெல்லாம் புதிய மகளிர்பால் புகுந்துவிட்டன என்று கூறிப் புலந்தாள். நீ விரும்பிய புதுமகள் நின்னை வெறுத்துத் தளிரை மறுத்தமையால் பழையளாகிய என்பால் கொணர்ந்தாய்; அங்ஙனம் காலந்தாழ்த்த காரணத்தாலேயே இப்பசுந்தளிர் உலர்ந்தது என்று சொல்லிப் பெரிதும் ஊடினாள். தலைமகன், முருகவேள் பரங்குன்றின் மீது இருமுறை ஆணையிட்டு அங்ஙனமன்றெனை உறுதி உரைத்தான். தலைவனது மொழியையும் நிலையையும் கண்ட, அக்காதற் பரத்தையின் இல்லிருந்த முதுமகளிர், அவளைக் கடிந்து கூறிச் சினந்தணிக்க வற்புறுத்தினர். மேலும் ஊடல் தணியாத காதற்பரத்தையை இரந்தும் வருந்தியும் உணர்த்தினர். அதன் பின்னர் அவள் ஊடல் நீங்கினாள். பின்னர்த் தலைவனும் அவளும் கூடி மதுவுண்டு, தனிமகிழ்வு கொண்டனர்.

ஊடல் கொண்ட காதற்பரத்தையும் கொய்தளிர் கொண்டுவந்து நின்ற தலைவனும் தம்முள் உரையாடிய பகுதிகள், கற்பவர்க்கு நகையூட்டும் சொற்சித்திரங்களாகும்.

ஆசிரியர் நல்லந்துவனாரின் மற்றொரு பாடல் 'வரைவு கடாதல்' என்ற அகத்துறையில் அமைந்ததாகும். தலைவியை முறைப்படி வந்து மணஞ்செய்து கொள்க என்பதைத் தலைவனுக்கு வலியுறுத்தத் தலைப்பட்ட தோழி, அத் தலைவன் கேட்குமாறு, யாங்கள் கன்னிப் பருவத்துத் தைந்நீராடத் தவம் தலைப்பட்டேம் என்று வையையை நோக்கி வகுத்துக் கூறுகிறாள்.

இப்பாடலில் காணப்பெறும் மகளிரது ஆடல் காட்சியொன்றை நோக்குவோம். தைந்நீராடும் கன்னியருள் ஒருத்தி தன் காதுகளில் நீலமலரை அணிந்துகொண்டு மற்றொருத்தியை நோக்கினாள்; அவள் தன் காதுகளில் அசோகின் தளிரை அணிந்துகொண்டிருந்தாள். முன்னவள் அணிந்த நீலமலர், பின்னவள் அணிந்த தளிரின் ஒளியால் இளவெயிலைப் போன்று மிளிர்ந்தது. அப்போது பின்னவள், முன்னவளைச் சுட்டி, "இவள் நான்கு விழி படைத்தாள்!" எனக் கூறிக் கொற்றவையின் கோலத்திற்கு ஒப்பாகும் வண்ணம் நெற்றிக் கனலவிழியைப் போலத் திலகமொன்றை அணிந்து மகிழ்ந்தாள்.

வையையைப் பற்றி நல்லந்துவனார் சொல்லியருளிய இன்னொரு பாடல் 'தலைவற்குப் பருவ வரவுணர்த்தல்' என்ற அகத்துறையில் அமைந்துள்ளது. கார்ப்பருவம் வரக் கண்ட தலைமகள், பிரிந்து சென்ற தலைவன் வந்துறாமையினால் பெரிதும் ஆற்றாது வருந்தினள். அவளது ஆற்றாமை கண்டு தூதுவிடச் சென்ற பாணன், தலைமகனைக்

கண்டு கார்ப்பருவ வரவையும் வையைப் புதுப்புனல் விழாச் சிறப்பையும் எடுத்தோதுகின்றான்.

இப்பாடலில் காணப்படும் சில காதற்காட்சிகளைக் காண்போம். புதுவெள்ளம் குடைந்தாட வந்த மைந்தரும் மகளிரும் திரள் திரளாக வையைக் கரையில் கூடினர். மகளிர் சிலர், மற்ற மாதர் அணிந்த அணிகலங்களைக் கண்டு மகிழ்ந்து கொண்டேயிருந்தனர். அப்போது ஒரு தலைவியின் தோழியர், தம் தலைவன் பரத்தை யொருத்தியுடன் இருத்தலைக் கண்டனர். அப்பரத்தையின் கரத்திலே தம் தலைவனால் கொடுக்கப்பட்ட தலைவியின் வளைகளை அணிந்திருப்பதையும் கண்டனர். 'இவள் நம் தலைவிக்கு மாற்றாள்' என்று எண்ணி அவளைக் கூர்ந்து நோக்கினர். அதனை அறிந்த தலைவன் நாணித் தலை கவிழ்ந்தான்.

அப்போது தோழியர், "நம் தலைவியின் வளையையும் முத்து வடத்தையும் இவளுக்கு வழங்கிய இக் கள்வனுடைய நாணால் கவிழ்ந்த முகத்தைக் காணுங்கள்!" என்றனர். அதனைக் கேட்ட பரத்தை, தன்னைச் சேர்ந்த மகளிர் கூட்டத்திடையே ஓட்டம் பிடித்தாள். அவளைப் பின் தொடர்ந்து விரட்டிச் சென்றனர் தலைவியின் தோழியர். அது கண்ட பரத்தை அவர்களை எதிர்த்து, "நீங்கள் என்னைத் தொடர்வதற்குக் காரணம் என்னை?" என்று கேட்டு நின்றாள். அப்போது அவ் ஆயமகளிர், பரத்தையைப் பழித்துப் பலவாறு உரைத்தனர்.

"மாயப்பொய் கூட்டி மயக்கும் விலைக்கணிகை
பெண்மை பொதுமைப் பிணையிலி ஐம்புலத்தைத்
துற்றுவ துற்றுந் துணையிதழ் வாய்த்தொட்டி
முற்று நறுநறு மொய்புன லட்டிக்
காரிகைநீ ரேர்வயல் காமக் களிநாஞ்சில்

மூரி தவிர முடுக்கு முதுசாடி
மடமதர் உண்கண் கயிறாக வைத்துத்
தடமென்றோள் தொட்டுத் தகைத்து மடவிரலால்
இட்டார்க் கியாழார்த்தும் பாணியில் எம்மிழையைத்
தொட்டார்த்தும் இன்பத் துறைப்பொதுவி '' (பரி-உ0)

என்று அவளைப் பழித்து இழித்துப் பேசினர்.

காமத்தை வஞ்சனைப் பொய்யொடுங் கூட்டி ஊட்டிக் கொள்வாரை மயக்கும் விலைத்தொழிலையுடைய கணிகையே! பெண்மைத் தன்மையின் பொதுமையால் ஒருவரால் பேணப்படாதவளே! ஐம்புல இன்பங்களை அளவின்றி நுகரும் காமுகப் பன்றிகள் துய்க்கும் துணியிதழ் வாயையுடைய தொட்டியே! பெண்ணீர்மையையுடைய வனப்பாகிய வயலிலே மதுவாகிய நீரைப் பாய்ச்சிக் காமமாகிய களி நாஞ்சிலால்—கலப்பையால் காளை மீறிப் போகாது உழும் பழஞ் சாலே! பொருளிடாரைப் போகாமல் தடுத்துக் காமம் ததும்பும் கண்ணைக் கயிறாகக்கொண்டு தோளாகிய தறியொடு பிணித்துக் கட்டிக் காமத்தைப் பெருக்க யாழிசையை ஊட்டி எம் அணிகளைக் கவர்ந்து, இன்பம் தருவதில் பலர்க்கும் பொதுவாயுள்ளவளே! என்று அம்மகளிர், பரத்தையைப் பழித்தனர்.

பரத்தையைப் புணர்ந்த தலைவனை இடித்துரைத்துத் தலைவியுடன் சேர்க்க விழைந்த அம்மகளிர், தம் கருத்தைப் புலப்படுத்திய திறத்தை நயம்பட உரைக்கும் நல்லந்துவனாரின் சொல்வன்மை வியந்து போற்றற்குரியதாகும்.

உழவுக்கு ஏமாற்றி ஊரில் திரியும் எருதினைத் தேடிப் பிடித்து ஏரில் பூட்டி உழாமல் விடுவது வேளாளர்க்கு முறைமையன்று. ஆதலால் முன்னே கெட்டுப் போன எருதை இவ்வையைத் தொழுவத்திலே தேடிக்கண்டோம். அதனை மாலையைக் கோலாகக் கொண்டு புடைத்த வழக்

குரைக்கும் அவையத்திலே எம் எருதாதலை எல்லோரும் அறிய வழக்குத் தொடர்ந்தோம் என்றனர் அம்மகளிர்.

மேலும், அம்மகளிர் பரத்தையை நோக்கித், "தனக்குரிய தலைவன் மார்பை நினக்குத் தண்டமாகத் தரும் எங்கள் தலைவியின் மார்பும் அதனைக் களவுகொண்ட நின் மார்பும் ஒத்தனவோ?" என்று இகழ்ந்துரைத்தனர். அவ்வளவிலே பரத்தை அத்தலைவியைப் பழித்துச் சில கடுமொழி பகர்ந்தாள். அப் பரத்தையின் மொழிகளைக் கேட்ட முதுமகளிர், தலைவியின் கற்புடைமையை வியந்து போற்றி 'அவளைப் பணிந்திடுக!' எனப் பகர்ந்தனர்.

"சிந்திக்கத் தீரும் பிணியாட் செறேற்க
மைந்துற்றாய் வெஞ்சொல் மடமயிற் சாயலை
வந்திக்க வாரென." (பரி-௨௦)

'இத்தலைவி கற்பிற் சிறந்தாள். இவளை நெஞ்சத்தில் நினைந்தவளவிலே புரிந்த பாவங்கள் ஒழிந்துபோகும். அத்தகையாளைச் சினந்து பேசற்க; வணங்கி வாழ்த்துக!" என்று அம்முதுமகளிர் பரத்தைக்கு அறிவுறுத்தினர்.

அதுகேட்ட பரத்தை, அம்முதுமகளிருள் ஒருத்தியை நோக்கி, "அன்னையே! பகைவரைப் பகைவர் பணிதல் பழிப்பன்றோ! அதனை நீ அறியவில்லையே! அவ்வாறே மாற்றானை மாற்றாள் போற்றிப் பணிதல் ஏற்றமன்று," என இயம்பினாள். இம்மொழியைக் கேட்ட தலைவி, அப்பரத்தையை நோக்கி, "உனது பெருமையை உரைக்கவேண்டா; என் தந்தை எனக்கிட்ட வளையும் முத்துவடமும் நின்பால் வந்த மாயத்தைக் கூறிப் பின்னைப் பெருமை பேசுவாய்!" என்றாள்.

தலைவியின் மொழி கேட்ட பரத்தை, "கண்ணி பணிந்த பெண்ணே! நீ அன்பு பூண்ட அத்தலைவன்

என்பால் பேரன்பினனாதலின், இவ்வளையும் ஆரமும் புணர் தற்கு விலையாகத் தந்தான்; அவன் இவையன்றி நாளை நின் காற்சிலம்புகளையும கழற்றி வந்து தருவான்; அதனால் யான் கள்ளியல்லேன்; அவனே கள்வன்; அவனைப் பற்றுக," என்று கூறினாள். அது கேட்ட முதுமகளிர்; 'மனங்கவரும் மானனையாய்! மறுத்தலை ஒழிப்பாய், நம்மை விரும்பிய காமுகர் நமக்குத் தரும் பொருள்கள் நாடறிய நம்மைச் சேர்ந்தனவே," என்று கூறிப் பரத்தை யின் சினத்தைத் தணித்தனர்.

பின்னர்த் தலைவியை நோக்கிப், "பரத்தையர்பால் காமக்கருத்தோடு செல்வானை, மனையாளால் செல்லாமல் காத்தலும் சென்றானென்று நீக்கியொழுகலும் கூடுமோ? கூடா; சால்புமிக்க கற்புடை மங்கையர் தம்மைக் கணவர் இகழினும் தாம் அவரைப் புகழ்ந்து மகிழ்வர்; பரத்தை யரை விரும்பிச் சேர்ந்த மைந்தரது மார்பகத்தை இனிச் சேரோம் என்றிருத்தல் மங்கையர் எவர்க்கும் ஏலாது; ஆதலின் வெகுளற்க! வெகுளற்க!" எனக் கூறி அவளது கோபந் தணித்தனர்.

நல்வழுதியார் என்னும் நல்லிசைப் புலவர் பாடி யருளிய வையைப் பாடல் 'தோழி இயற்பழித்தல்' என் னும் அகத்துறையில் அமைந்ததாகும். கார்ப்பருவத்தில் வையையில் பெருகிவரும் புதுவெள்ளப் புனல் விழாவில் காணும் பல்வகை இன்பங்களைச் சொல்லி, இவ்வகைப் பட்ட இன்பத்தையுடைய நின்னையும் நினைத்திலரென வையையை நோக்கித் தலைவன் கேட்குமாறு, தோழி அவ னது இயல்பினைப் பழித்துப் பேசுகிறாள்.

இப் பாடலில் காணும் காதற்காட்சிகள் சில கருத் தைக் கவர்வனவாகும். அணங்கொத்த அழகினாள்

ஒருத்தி அமிழ்தன்ன இனிய நோக்கால் தலைவன் ஒருவனை நோக்கினாள். அதுகண்டு மனம் பொறாத அத்தலைவனுக்குரிய தலைவி அவனை மாலையைக் கோலாகக்கொண்டு நையப் புடைத்தாள்; தனது மார்பணிந்த முத்துவடத்தைக் கழற்றி முன் கையை இறுக இறுகக் கட்டி நீ பிழை செய்தாய் என்று கூறி ஊடினாள். அவன் பிழையொன்றும் அறியானாய்த் தலைவியைத் தொழுது, "நான் செய்த பிழை யாது?" என்று வினவி நின்றான்.

தலைவி ஒருத்தி, தன் தலைவனை மற்றொருத்தி காமக் குறிப்புடன் பார்த்ததைக் கண்ணுற்றாள். உடனே தலைவனிடத்து ஊடல் கொண்டாள். அவன் சூளுரைத்தும் வெகுண்டும் அவளது ஊடலைத் தீர்க்கவும் தீராதவளாய் மேலும் ஊடல் மிக்கு, அரக்குநீர் நிறைந்த வட்டை அவன் மார்பில் எறிந்தாள். அந்நீர் அவளது விழியென்னும் வேல் ஏறுண்ட புண்ணில் பொழிகின்ற இரத்தம் போலச் சொரிந்தது. தலைவன் மாறுபாடு நீங்கி மனஞ்சோர, ஆற்றானாய் அவளை வணங்கினான். அதுகண்ட தலைவி, தான் மார்பில் எறிந்த வட்டால் தலைவன் சோர்வுற்று வீழ்ந்தான் என்று அஞ்சி மயங்கினாள். ஆதலின் ஊடல் தணிந்து, தன் காதலன் மார்பினைச் சேர்ந்து மகிழ்ந்தாள்.

நல்லழிசியார் என்னும் நல்லிசைப்புலவர் பாடியருளிய வையையைப் பற்றிய பாடல் 'தோழி வாயின் மறுத்தல்' என்ற துறையில் அமைந்ததாகும். காதற் பரத்தையுடன் கூடிப் புனலாடி மகிழ்ந்தான் தலைமகன். பின்னர்த் தலைவியை நாடித் தோழியை வாயில் வேண்டினான். அவள், தலைவன் புதுப்புனலாடிய விதத்தைப் புகன்று வாயில் செல்ல மறுத்தாள்.

அங்ஙனம் தோழி கூற்றாக அமைந்த இப்பாடலிலும் சில நகைச்சுவை மலிந்த காதற் காட்சிகளைக் கண்டு மகிழலாம். காதற் பரத்தை யொருத்தியைத் தோழியர் சூழநின்று மூங்கிற் குழாயினால் அவள்மீது அரக்குநீரை எறிந்தனர். அந்நீர் அவளது மார்பில் பட்டது. அவள் அதனைத் தன் துகிலின் முன்தானை கொண்டு ஒற்றினாள். அப்பொழுது அவளருகே தலைவன் வந்தான். அவனைக் கண்ட தோழியர், "இவள் பூப்படைந்தாள்; இவளைக் கூடாதே நீங்குக" என்று பொய்ம்மொழி புகன்றனர். பூப்பின் தோற்றத்தையொத்துப் பொலிந்த செஞ்சாந்தின் நாற்றத்தால் பூப்பின்மையைத் தலைவன் அறிந்தான். ஆயினும் மக்கள் கூட்டத்தின் நடுவே நின்றானாதலின் ஒன்றும் உரையாது சிறிதே நகைத்து அவ்விடம் விட்டுச் சென்றான். கடலை நோக்கி மலையினின்றும் பரந்து விரைந்துவரும் ஆற்றையொக்க, வீட்டை விரைந்தடைந்தான். களைப்புநீக்கிக் களிப்பை விளைக்கும் மதுவையும் பருகாது காதல் மாதராளை எதிர்நோக்கி நின்றான். அவளைக் கண்டதும் அவளது மார்பில் பட்ட குருதி போன்ற பூநீரைத் துடைத்து மருவி மகிழ்ந்தான். உடன் வந்த தோழியரோ, அவள் இல்லத்தார்க்கு, "நங்கை பூத்தாள், மங்கலம் பொலிக!" என்று சொல்லிப் போயினர். இத்தகைய காதல் காட்சிகள் பல, கற்பாரது சித்தத்துள் தித்திக்கும் தேனமுதாகத் திகழ்கின்றன.

"சுருங்கையின் ஆயத்தார் சுற்றும் எறிந்து
குரும்பை முலைப்பட்ட பூநீர் துடையாள்
பெருந்தகை மீளி வருவானைக் கண்டே
இருந்துகில் தானையின் ஒற்றிப் பொருந்தலை
பூத்தனள் நீங்கெனப் பொய்யாற்றால் தோழியர்
தோற்றமோர் ஒத்த மலர்கமழ் தண்சாந்தின்
நாற்றத்திற் போற்றி நகையொடும் போத்தந்து

இருங்கடற் கூங்கிவரும் யாறெனத் தங்கான்
மகிழக் களிப்பட்ட தேன்தேறல் மாற்றிக்
குருதி துடையாக் குறுகி மருவினியர்
பூத்தனள் நங்கை பொலிகென நாணுதல்
வாய்த்தன்ருல் வையை வரவு;
மலையின் இழியருவி மல்கினார் சார்ச்சார்க்
கரைமரஞ் சேர்ந்து கவினி மடவார்
நனைசேர் கதுப்பினுள் தண்போது மைந்தர்
மலர்மார்பிற் சோர்ந்த மலரிதழ் தாஅய்
மீறுரம் பூத்த வியன்கங்கை நந்திய
வானம் பெயர்ந்த மருங்கொத்தல் எஞ்ஞான்றும்
தேனிமிர் வையைக் கியல்பு;
கள்ளே புனலே புலவியிம் மூன்றினும்
ஒள்ளொளி சேய்தா ஒளிகிளருண் கட்கெண்டை
பல்வரி வண்டினம் வாய்சூழ் கவினெடும்
சென்னீர் வீவயின் தேன்சோரப் பன்னீர்
அடுத்தடுத் தாடுவார்ப் புல்லக் குழைந்து
வடுப்படு மான்மதச் சாந்தார் அகலத்தான்
எடுத்தவே எக்கி நூக்குயர்பு தாக்கத்
தொடுத்ததேன் சோரும் வரைபோலும் தோற்றம்
கொடித்தேரான் வையைக் கியல்பு."

(பரி–கசு–உ0–சஎ)

இத்தகைய வையையாற்றின் வளனும் சிறப்பும், பொய்யாநீரின் புதுமைவிருந்தும் தமிழகம் எஞ்ஞான்றும் போற்றிப்புகழும் பொற்புமிக்கதாக மிளிர்வது இன்புறற் குரியது.

———

## ௪. மதுரை

[திரு. கு. பரமசிவன் அவர்கள், பி. ஏ, (ஆனர்ஸ்)]

தமிழ்மொழியின், கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே முன்தோன்றி மூத்த பழமையும், கன்னித் தன்மையையும், உயர்தனிச் செம்மையையும், தமிழர்களும் தமிழர்கள் என்று சொல்லிக்கொள்பவர்களும் அறியாவிட்டாலும், அல்லது அறிந்தும் அறியாததுபோலக் காட்டிக்கொண்டாலும், அயல்நாட் டாராய்ச்சியாளர் பலரும் அறிந்துள்ளனர்; அழகாக ஆணித்தரமாக எடுத்துக் கூறியுள்ளனர். "அறத்தைப் பற்றியும், ஆண்டவன் ஆற்றலைப்பற்றியும் மிகச்சிறந்த நூல்கள் தமிழில் செய்யுள் வடிவில் உள்ளன. தமிழ்க் கவிஞர்கள் தம் கவிதைகளில் உயர்தனிச் சொற்களைப் பயன்படுத்துகின்றனர்," என்றார் வீரமாமுனிவர். இவர்போன்ற தமிழிலக்கியச் சிறப்பைப் புகழ்ந்த மேனாட்டறிஞர் பலராவர். பார்புகழும் இலக்கியங்கள் பல படைக்கப்படுவதற்குப் பண்டைத் தமிழ்ச் சங்கங்கள் பெரிதும் காரணமாக இருந்திருக்கின்றன. தமிழகத்தின் முச்சங்கங்கள் தம் நேரில்லா இலக்கியங்கள் பலவற்றைத் தோற்றுவித்திருக்கின்றன. ஆயின் சங்கமிருந்து புலவர்கள் சமைத்துத்தந்த அந்த இலக்கிய இலக்கணங்களிலே பல கடல்கோளாலும், கறையானாலும் கல்நெஞ்சு படைத்த இனவெறியரின் சூழ்ச்சியாலும் மறைந்தும், மறைக்கப்பட்டும், சிதைந்தும், சிதைக்கப்

பட்டும் போயின. அவ்வாறு சிதைவுற்ற செந்தமிழ் நூல்களுள் ஒன்றுதான் பரிபாடல் ஆகும்.

"அன்பினைந்திணை" என்னும் இறையனார் களவியல் நூற்பா (1)வின் உரையினாலும், "தரவின்றாகி" என்னும் தொல்காப்பியச் செய்யுளியல் நூற்பா(149)வின் உரையினாலும் பரிபாடலிலே எழுபது பாடல்கள் இருந்தன என்று காண்கிறோம். ஆயின் இருபத்துநான்கு பாடல்களே இதுகாலைக் கிடைத்துள்ளன. முன்னிருந்த எழுபது பாடல்களுக்குள், எட்டு திருமாலுக்கும் முப்பத்தொன்று முருகக்கடவுளுக்கும் ஒன்று காடுகிழாளுக்கும் இருபத்தாறு வையையாற்றிற்கும் நான்கு மதுரைக்கும் உரியன என்பது,

> "திருமாற்(கு) இருநான்கு; செவ்வேட்கு முப்பத்து
> ஒருபாட்டு; காடுகாட்(கு) ஒன்று; மருவினிய
> வையை இருபத்தாறு மாமதுரை நான்(கு) என்ப
> செய்ய பரிபாடல் திறம்"

என்னும் வெண்பாவால் தெரிகிறது. இப்பொழுது கிடைத்துள்ள இருபத்துநான்கு பாடல்களுக்குள் திருமாலுக்குரியவை ஏழு. முருகனுக்குரியவை எட்டு. வையைக்குரியவை ஒன்பது. மதுரையைப் பற்றிய பரிபாடல் ஒன்றேனும் முழுதும் கிடைத்திலது என்பது குறிப்பிடத்தக்கது. எனவே வையையைப் பற்றிய பாடல்களிலும் ஆங்காங்கே வரும் குறிப்புக்களைக் கொண்டுதான் மதுரையின் அக்கால நிலைமையை உணரவேண்டியதாயுள்ளது. காலமெனும் காரிருளில் மறைந்துவிட்ட கடந்தகால மதுரையைக் காணுதற்குப் போதுமான பேரொளியைப் பத்துப்பாட்டுக்களில் ஒன்றாகிய மதுரைக் காஞ்சியோ, படிப்பவர் நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரமோ தருமளவுக்குப் பரிபாடலில் வரும் குறிப்புக்கள் தருதல் இல்லை

என்பது உண்மையே. ஆயினும், மதுரை அமைப்பையும், ஆட்சிமுறையையும், கொடைப் பெருமையையும், அக்கால மக்களின் நடையுடை பாவனைகளையும், நாகரிகத்தையும் இயன்ற அளவு காண்போம்.

## க. மதுரை நகரமைப்பு

தமிழகத்தின் நடுநகரமாய்த் திகழ்வது மதுரை. தன்னேரிலாப் பாண்டிய நாட்டின் தலைநகரமாக விளங்கியது மதுரை. தமிழ் வளர்த்த சங்கம், தழைத்த இடம் மதுரை. தமிழ்க்கடவுள் முருகனின் உறைவிடமாம் தண்பரங்குன்றடுத்தது மதுரை. வண்புகழுடைய அம் மதுரை நகரம், வரலாறு காணுக் காலம் முதல் வன்மை சேர் நாயக்க மன்னர் காலம் வரையில் பாண்டிய நாட்டின் தலைநகரமாக விளங்கி வந்திருக்கிறது. வாழையடி வாழையாக வந்த பாண்டிமற வேந்தர்கள் இந் நகரத்திலேதான் வாழ்ந்திருக்கின்றார்கள். புலவர்கள் கூடிச் சங்கமிருந்து தமிழாராய்ந்ததாலும் நான்கு மாடங்கள் கூடியதாலும் இந் நகருக்குக் கூடல் எனவும் நான்மாடக் கூடல் எனவும் பெயருண்டு என்பர். நாட்டின் தலைநகரமாகவும், நாடாள்வோர் வாழும் ஊராகவும் இருந்தமையால் பழங்காலத்திலேயே இந் நகரமைப்பு மிகச் சிறந்து இருத்தலைக் காண்கிறோம்.

அன்றும் இன்றும் அமைப்பில் சிறந்த அழகிய நகரம் மதுரை என்பர். நகரின் நடுவில் கோவிலும் கோவிலின் நாற்புறமும் தெருக்களின்பின் தெருக்களும் அமைந்தன. இவ்வமைப்புத் தாமரைப்பூவின் அமைப்பைப் போன்றிருந்தது. தாமரையின் நடுவில் காணப்படும் பொகுட்டினைப் போன்று அண்ணலின் கோவில் அமைந்திருந்தது. பொகுட்டினைச் சுற்றியுள்ள இதழ் வரிசை

களைப் போன்று தெருக்களும், இதழ்களைப்போன்று வீடுகளும் காணப்பட்டன. சீரிய இந்த அமைப்பினைப் பரிபாடல் சிறப்புறக் கூறுகிறது.

"மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப்
பூவொடு புரையும் சீரூர்; பூவின்
இதழகத் தனைய தெருவம்; இதழகத்து
அரும் பொகுட்(டு) அனைத்தே அண்ணல்கோயில்."

(பரிபா : திரட்டு : எ)

இனி இந் நகரத்து மனைகள் எல்லாம் சிற்பநூல் முறைப்படிப் பல்வேறு கூறுபாடுகளை உடையனவாய் வானளாவக் காட்சி தந்தன. இதனை,

"வகைபெற எழுந்து வானம் மூழ்கிச்
சில்காற் றிசைக்கும் பல்புழை நல்லில் "

என மதுரைக்காஞ்சி (358-9) பாராட்டுகிறது. இத் தகைய பேரில்லங்கள் இரு சிறகுகளிலும் அமைந்திருக்கத் தெருக்கள் ஆறுபோன்று நீண்டகன்று விளங்கின. அத் தெருக்களுள் கலத்தினும் காலினும் வரும் பல்வேறு பண்டங்களை விற்கும் கடைத்தெருக்களும் இருந்தன. பகலில் மட்டும் பொருள்களை விலைகூறும் கடைத்தெருக் களும், இரவில்மட்டும் விலை கூறுபவைகளும் உண்டு. முன்னவை நாளங்காடி என்றும் பின்னவை அல்லங்காடி என்றும் அழைக்கப்பட்டன. மதுரைத் தெருக்களில மறை ஒலி நிறைந்திருக்கும். அவ் வேத முழக்கம் கேட்டே நகர மக்கள் விழித்தெழுவர். சோழ நாட்டின் தலைநகர மாகிய உறையூரிலும் சேர நாட்டின் தலைநகரமாகிய வஞ்சி யிலும் வாழும் மக்களைப்போல் மதுரைவாசிகள் கோழி கூவும் ஒலி கேட்டுத் துயிலெழ மாட்டார்கள்.

“ நான்மறைக் கேள்வி நவில்குரல் எடுப்ப
ஏம இன்துயில் எழுதல் அல்லதை
வாழிய வஞ்சியும் கோழியும் போலக்
கோழியின் எழாதுஎம் பேரூர் துயிலே.”

(பரிபா: திரட்டு, எ)

இனி நகரினுள் பொதுமக்களின் வசதிக்காக ஒரு சில பொதுவிடங்களும் அமைக்கப்பட்டிருந்தன. நீராடச் செல்லும் மக்கள் ஒப்பனை செய்துகொள்ளுவதற்கென்று தனி மாடங்கள் அமைக்கப்பட்டிருந்தன.

“நீரணி காண்போர் நிரை மாடம்.” (பரிபா: க0-உஎ)

அவை அழகிய நிலைகளை உடையன;

“ அணி நிலை மாடத்து.” (பரி: க0-சக)

அம் மாடங்களுள் சில புலிமுக வடிவில் அமைக்கப்பட்டிருந்தன. அப் புலி வடிவத்தைக் கண்டு, மெய்ப்புலி என்று கொண்டு, களிற்றைப் பாயுமென வெருண்டு, பிடி சிதைந்து ஓடுதலும் உண்டு.

“ எழில் மாடத்துக்
கைபுனை கிளர்வேங்கை காணிய வெருவுற்று
மைபுரை மடப்பிடி மடநல்லார் விதிர்ப்புறச்
செய்தொழில் கொள்ளாது மதிசெத்துச் சிதைதர.”

(பரிபா: க0: சசு-அ)

இன்னும், பூக்களை ஆராய்ந்து பறிப்பவர் பலர் நகரில் வாழ்ந்தனர். அவர்கள் அத் தொழிலுக்கென்று தனிக் கோல் ஒன்று வைத்திருந்தனர். அவர்கள் மாலையாகக் கட்டும் பொருட்டுப் பல நிறங்களையுமுடைய மலர்களை ஓரிடத்தில் குவிப்பர். அவ்வாறு குவிப்பதற்கென்று நகரில் தனியாகப் பூ மண்டபங்கள் கட்டப்பட்டிருந்தன. இதனை,

“ ஆய்கோல், வயவர் அரிமலர்த் துறை ”

(பரிபா: கக - உச-இ

என்பதனு லறியலாம்.

இனி, நகரைச் சுற்றியிருந்த மதிலில் நகரினுள் நுழைதற்கென ஒரு வாயில் விடப்பட்டிருந்தது. அவ் வாயிலில் வையை யாற்றைப் போலவே, எப்பொழுதும் வெள்ளம் போல் மக்கள் கூட்டம் சென்றுகொண்டிருக்கும். அதன் மீது மஞ்சு தவழ் மாடம் ஒன்றும் அமைக்கப்பட்டிருந்தது. வாயிலைப் பெற்ற மதில் வானுலகிலே செல்லும்படி உயர்ந்தது. அதனின் பல கற்படைகள் வைக்கப்பட்டிருந்தன.

மதிலைச் சுற்றி மண்ணுள்ள அளவும் ஆழ்ந்த அகழியொன்று இருந்தது. அதன் நீர் நீலமணிபோன்ற நிறத்தை உடையது. இதனை,

"மண்ணுற ஆழ்ந்த மணிநீர்க் கிடங்கு"

(மதுரைக் : ௩௫௧)

என்பர், மாங்குடி மருதனார். இவ்வகழியைக் கடக்க முயன்று எண்ணம் ஈடேறாமல் தோற்றோடிய வேந்தர்கள் பலர் ஆவர். (மதுரைக் ௩௪௮—௫0).

சில இடங்களில் மதிலை ஒட்டி வையை சென்றது. வெண்மையான மலர்களைச் சுமந்து வெள்ளம் பெருகும் போது, அழகிய குளிர்ந்த நீரையுடைய அலைகள், விண்ணுற ஓங்கிய அந்தப் புரிசையின்மீது மோதும்.

" வந்து மதுரை மதில் பொருஉம் வான்மலர் தாஅய்
அந்தண் புனல் வையை யாறெனக் கேட்டு."

(பரிபா : எ : ௩௧-௨)

அரண்மீது அலைமோதும் ஓசை கேட்டு நகரத்து மக்கள் துயில் உணர்ந்து எழுவர்.

" உயர் மதிலில், நீரூர் அரவத்தால் துயிலுணர்பு எழீஇ."

(பரிபா : ௨0 : ௧௪-௫)

மதிலில் நெடிய பெரிய சுரங்க வழியொன்று உண்டு. அதன் வழியாகச் சென்ற ஆற்றுநீரை, மதில் வெளியே

சொரிதல், களிறு துதிக்கையை எடுத்து நீர்விடுதல் போன்று காட்சி தரும்.

"நெடுமால் சுருங்கை நடுவழிப் போந்து
கடுமா களிறணத்துக் கைவிடு நீர்போலும்
நெடுநீர் மலிபுனல் நீள்மாடக் கூடல்
கடிமதில் பெய்யும் பொழுது." (பரி-உ0; கoச-எ)

மதிலின் புறத்தே வையைக் கரையிலுள்ள பூஞ்சோலைகளின் நடுவே பாணர், கூத்தர் முதலியோர் வாழ்தற்கென்று தனியாகப் பாக்கங்களும் சேரிகளும் அமைந்திருந்தன. ஒரோ வழி இவை வையைப் பெருக்கினுல் பாதிக்கப்படுதலும் உண்டு.

"பாடுவார் பாக்கம் கொண்டென
ஆடுவார் சேரி அடைந்தென." (பரிபா. எ: ௩க-உ)

இப் புறஞ் சேரியிலேயே துறவு பூண்ட அறவோரும் வதிந்தனர் என்று சிலப்பதிகாரம் கூறும்.

மதுரையும், மதுரையின் வடக்கிலே வையையும், குடக்கிலே தண்பரங்குன்றமும் அமைந்திருந்தன. இம்மூன்றும் இடத்தால் மட்டுமன்றிப் பண்பாலும் செயலாலும் நெருங்கியவை யாயின. பிரிந்த தலைவர் வந்து பொருந்துதற்கு என்று திருந்திழையார் பரங்குன்றின்கண் தெய்வவிழா எடுப்பர்; தலைவர் கூடியவிடத்து வையைப் புனலாடுவர்; மதுரையின்கண் விருந்தயர்வர். அவர் செயல் காரண காரியங்களாய்த் தடுமாறி வரும். இவ்வாறு இம்மூவிடங்களும் இல்லறச்சரட்டால் பிணைக்கப்பட்டிருந்தன.

"தெய்வ விழவும் திருந்து விருந்தயர்வும்
அவ்வெள் ளருவி அணி பரங் குன்றிற்கும்
தொய்யா விழுச்சீர் வளம்கெழு வையைக்கும்
கொய்யுளை மான்தேர்க் கொடித்தேரான் கூடற்கும்
கையூழ் தடு மாற்றம் நன்று" (பரிபா-கஎ: சஉ-சு)

வையையும் பரங்குன்றும் உண்டாகும் அளவும் மதுரை தமிழை வேலியாகவுடைய தமிழ் நாட்டில் நிலைத்து நின்று புகழ் சிறக்கும்; திருமகளுக்கு இட்ட திலகத்தைப் போல மண் திணி ஞாலத்துக்குத் தென்மதுரை விளங்கும். இவ்வாறெல்லாம் இசைமேந்தோன்றி விளங்குதல் அல்லது குறைவுபடுதலும் பொய்த்தலும் மதுரைக்கு இல்லை.

"தண்தமிழ் வேலித் தமிழ் நாட்(டு) அகமெல்லாம்
நின்று நிலைஇப் புகழ்பூத்தல் அல்லது
குன்றுதல் உண்டோ மதுரை கொடித்தேரான்
குன்றம்உண் டாகும் அளவு." (பரிபா:-திரட்டு: அ)

"செய்யாட்(கு) இழைத்த திலகம் போல் சீர்க்கொப்ப
வையம் விளங்கிப் புகழ்பூத்தல் அல்லது
பொய்யாதல் உண்டோ மதுரை புனைதேரான்
வையை உண்டாகும் அளவு." (பரிபா: திரட்டு: க)

கொடை வள்ளல்களைப் போற்றியும், கொடுப்பதனால் ஏற்படும் இன்பத்தை வேண்டியும் வாழ்கின்ற மக்களைக் கொண்ட மதுரையிலும், செவ்வேளுக்குரிய பரங்குன்றத்திலும் வாழ்பவரே வாழ்பவர்; அவரல்லாத பிறர் அமரருலகம் போதற்கு உரியவரல்லர்.

"ஈவாரைக் கொண்டாடி ஏற்பாரைப் பார்த்துவக்கும்
சேய்மாடக் கூடலும் செவ்வேள் பரங்குன்றும்
வாழ்வாரே வாழ்வார் எனப்படுவார் மற்றையார்
போவாரார் புத்தேள் உலகு." (பரி: திரட்டு: கக)

## உ. பரங்குன்றமும் மதுரையும்

பரங்குன்றம் மதுரையை அடுத்து மேற்கே இருந்ததுடன் மதுரையுடன் நன்றாய்ப் பிணைக்கப்பட்டிருந்தது. இரண்டிற்கும் இடைப்பட்ட வழி முருகாற்றுப்படையிலும், பரிபாடலிலும் அழகுறப் பேசப்பட்டுள்ளது. வழி

மருங்கில் வளமான சேறுமிக்க நெல் வயல்கள் நிறைந்திருந்தன. வயல்களில் மலர்ந்த வண்ணத் தாமரைகளில் தேனுண்டு, வண்டுகள் இரவில் மயங்கி உறங்குகின்றன. விடியல் வேளையில் விழித்தெழும் வண்டு, அப்பொழுதலரும் நெய்தல் மலரில் படிந்து மதுவுண்ணும். கதிரவன் எழுந்தவுடன் அது கதிர்வேல் ஏந்திய செவ்வேள் உறையும் பரங்குன்றம் சென்று குன்றச் சுனையின் நீல மலரைச் சூழ்ந்து பாடும்.[1]

மதுரையிலிருந்து பரங்குன்றம் செல்லும் வழி தண் மணல் நிறைந்து கடற் கானல் போல் காட்சியளிக்கிறது. எப்பொழுதும் அவ்வழி மக்கள் நெருக்கம் உடையது. அறப் பயன்நுகர அமரர் உலகம் செல்வார் போல, அம் மக்கள் அவரவர்க்கு ஏற்ற அணிகலன்களும், அழகிய துகில்களும் அணிந்து செல்கின்றனர். சிலர் குதிரைகளிலும், தேர்களிலும் ஊர்கின்றனர். மலர்மாலைகள் அணிந்த அவர்தம் தலைகள் இடைவெளியில்லாமல் நிறைவதனால் அவ்வழி நிலத்திற்கு இட்ட மாலை போல் காட்சி தருகிறது.[2]

---

1. "மாடமலி மறுகின் கூடல் குடவயின்
இருஞ்சேற்று அகல்வயல் விரிந்துவாய் அவிழ்ந்த
முள்தாள் தாமரைத் துஞ்சி வைகறைக்
கள்கமழ் நெய்தல் ஊதி எல்படக்
கண்போல் மலர்ந்த காமரு சுனைமலர்
அஞ்சிறை வண்டின் அரிக்கணம் ஒலிக்கும்
குன்று." (திருமுருகாற்றுப்: எக - அ)

2. "அறம் பெரிது ஆற்றி அதன்பயன் கொண்மார்
சிறந்தோர் உலகம் படருநர் போல
உரிமாண் புனைநலம் ஒண்துகில் தாங்கிப்
புரிமாண் புரவியர் போக்குஅமை தேரர்
தெரிமலர்த் தாரர் தெரு இருள் சீப்பசின்
குன்றொடு கூடல் இடையெல்லாம் ஒன்றுபு

வழியெங்கும் தும்பியும் மிஞிறும் வண்டும் ஒலிக்கின்றன; சுனைகளில் பூக்கள் மலர்ந்திருக்கின்றன. மாலைகளாகிய பூங்கொத்துக்கள் கொன்றை மரத்தில் காட்சி தருகின்றன; மலர்ந்த காந்தள்பூவின் மணம் இடமெல்லாம் பரவுகிறது; இத்தகைய பன்மலர்களின் நாற்றத்தையும் சுமந்து தென்றல் அசைகிறது.

இவ்வழியில் எப்பொழுதும் மக்கள் திரண்டு செல்வர்; செல்லும் காலத்திலேயே அவர் நறுமணம் கமழும் சாந்து பூசி விளையாடுகின்றனர்; அவ்வாறு மகளிரும், மைந்தரும் நெருங்கி ஆடுதலால் வழி பெரிதாகத் தோன்றுகிறது; பரங்குன்றம் கூடலுக்கு அண்மையில் உள்ளதே எனினும் மக்கள் கூட்டத்தால் மிகத் தொலைவில் உள்ளதாகத் தோன்றுகிறது; ஆடவர் குஞ்சியிலிருந்தும் மகளிர் கூந்தலிலிருந்தும் அவிழ்ந்து வீழ்ந்த மாலையால் வழி தடுக்கப்பட்டு இல்லையாயிற்று.[1]

பரங்குன்றமும் எக்காலத்திலும் மக்கள் திரளை உடையது; ஆடவரும் பெண்டிரும் தத்தம் எண்ணங்கள் ஈடேற ஆறுமுகத்தவனைப் பணிகின்றனர்; குன்றிலுள்ள சுனைகளில் மலர்ந்த செந்நிறப் பூக்கள் சில, ஐந்து தலை

---

நேர்பூ நிறைபெய்து இருநிலம் பூட்டிய
தார்போலும் மாலைத் தலைநிறையால் தண்மணல்
ஆர்வேலை யாத்திரைசெல் யாறு." (பரிபா: கக: க0-அ)

1. "பாடல் சான்று பல்புகழ் முற்றிய
கூடலொடு பரங் குன்றின்இடைக்
கமழ்நறும் சாந்தின் அவரவர் திளைப்ப
நணிநணித் தாயினும் சேஎய்ச் சேய்த்து
மகிழ்மிகுதேஎங் கோதையர் கூந்தல் குஞ்சியின்
சோர்ந்துஅவிழ் இதழின் இயங்கும்ஆறு இன்று."

(பரிபா: கஎ: உஉ-எ)

அரவத்தைப் போலத் தோன்றுவதைக் கண்டு பெண்டிர் நடுங்குகின்றனர்; சிலர் குரங்குகளுக்குப் பண்டங்கள் கொடுக்கின்றனர். சிலர் கரிய முகமுடைய முசுக்கலைகளுக்குக் கரும்பு தருகின்றனர்; இசையறிவு உடையவர்கள் இசைக்கருவிகள் பலவற்றை வாசிக்கின்றனர்; இன்னும் சிலர் குன்றிலுள்ள சித்திரச் சாலைகளைச் சென்று பார்வையிட்டு மகிழ்கின்றனர்.

அடுத்துப் பழமையும், பெருமையும் வாய்ந்த மதுரை மாநகர் ஆட்சிமுறை குறித்து அறியப்படுவன யாவை என்று காண்போம்.

## ௩. நகராட்சி

நகராட்சி முறை பற்றிக்கூறும் நூலொன்றும் தனியே கிடைக்கப் பெற்றிலம். அத்தகைய நூல்கள் எழுதப் பட்டன என்பதும் ஐயத்திற்கு இடமானது ஆகும். இலக்கியங்களில் சில செய்திகள்தாம் கூறப்படுகின்றன. எல்லாச் செய்திகளையும் இலக்கியம் கூறுதலும் இயலாது.

வாழ்க்கையைப் படம் பிடித்துக் காட்டுவதே இலக்கியம் என்பர். ஆயின் வாழ்க்கையே இலக்கியம் அன்று என்பதனை இலக்கிய ஆராய்ச்சியாளர் உணர்வர். வாழ்க்கையில் நிகழ்பவற்றை நிகழுமாறே எடுத்துரையாது சிறிது கற்பனையும் கலந்துரைப்பதே இலக்கியமாகும். இலக்கியம் வாழ்க்கையின் நிழற்படம் அன்று; வண்ண ஓவியமே.

> "நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
> பாடல் சான்ற புலனெறி வழக்கம்."

என்று தொல்காப்பியரும் கூறுதல் காண்க. இலக்கியத்தி லுள்ள சில செய்திகளைக்கொண்டு பிறவற்றை நாம்

உய்த்துணரல் வேண்டும். இஃது இலக்கிய வாயிலாகப் பண்டை அரசியல் முறையை அறிதலில் உள்ள பேரிடர்ப் பாடாகும்.

மதுரையைப் பற்றிய பாடல்கள் கிடைத்திருக்குமாயின் ஒருகால் மதுரை நகர் ஆட்சிமுறை பற்றிய செய்திகள் பல கிடைத்திருத்தல் கூடும். இப்போதுள்ள நிலையில் வையை பற்றிய பாடல்களில் ஆங்காங்கு வரும் குறிப்புக்களைக்கொண்டே உணரவேண்டியதாயுள்ளது. இதனாலும் பெரிதும் இடர்ப்பாடு நேருகிறது. பரிபாடலில் காணப்படும் ஆட்சிமுறை, பிற சங்க இலக்கியங்களால் அறியப்படும் சீரிய ஆட்சி முறையினின்றும் மாறுபட்டதன்று. நகர் மன்றம் பற்றியோ தேர்தல் முறை பற்றியோ பரிபாடலில் குறிப்பு ஒன்றும் இல்லையேனும் புறநானூற்றுப் பாடலில் குடவோலை பற்றிக் கூறப்படுதல் கொண்டு கடைச்சங்க காலத்தில் குடவோலை மூலம் ஆட்சியாளரைத் தெரிந்தெடுக்கும் வழக்கம் இருந்தது என்பது புலனாகும். அவ்வாறு தெரிந்தெடுக்கப்பட்டவரைக்கொண்டு நகராட்சி நடைபெற்றது என்று நாம் ஒருவாறு உய்த்துணரலாம். அரசாங்கத்தின் தலைவனாக அரசன் விளங்கினும் சிற்றூர்களும், பெருநகரங்களும் மன்றங்களின் ஆட்சிக்குட்பட்டவை என்பது இலக்கியங்களாலும், கல்வெட்டுக்களாலும் ஒத்துக்கொள்ளப்பட்ட செய்தியாகும். இம் மன்றங்கள் நகர மக்களுக்கு எல்லாத்துறைகளிலும் வேண்டும் வசதியளித்தன.

எல்லா மக்களுக்கும் இன்றியமையாத அடிப்படைத் தேவை உணவாகும். உணவுப் பெருக்கத்துக்கு உழவுத் தொழில் பெருக்கம்வேண்டும். உழவுத்தொழில் செழிக்க நீர்ப்பெருக்கம் தேவை. குளங்கள் தொட்டும் கால்வாய்கள்

வெட்டியும் பழந்தமிழ் மன்னர் உழவுத்தொழிலுக்கு வேண்டும் நீரை உதவினர். அன்றியும் பேரியாறுகளில் அணைகள் கட்டியும் நீரைத் தேக்கியிருக்கின்றார்கள். பாறைகள் பரந்திருத்தலைப் போலச் சலியாத அலைகள் நிறைந்திருந்த செய்தி பரிபாடல் ஒன்றில் குறிக்கப் படுகிறது.

"பாறைப் பரப்பிற் பரந்த சிறை நின்று." (பரி. கஉ : அ௫)

பகைமை முதலிய பலவற்றினின்றும் பாதுகாப்பளித் தலும் ஒரு நல்ல அரசாங்கத்தின் கடமையாகும். அச்சம் வாழும் இடத்தில் அறம் வாழாது. ஆதலின் எவ்வித அச்சமுமின்றிக் குடிமக்கள் வாழுமாறு செய்தல் அரசிய லாரின் கடமையாகும். இக்கடமையையும் பண்டை யாட்சியாளர் செம்மையாக நிறைவேற்றி வந்தார்கள். கள்வர்களைப் பிடித்து ஒறுத்தற்பொருட்டு ஊர்ப் பாது காப்பாளர் நியமிக்கப்பட்டிருந்தனர். அக் காவலர் தூங்காத கண்களை உடையவர்; அஞ்சாக் கொள்கையர்; அறிந்தோர் புகழ்ந்த ஆண்மையர்; களவினைக் கண்டு பிடித்தற்கும், பாதுகாத்தற்கும் உரிய வழிகளைக் காணும் நூல்களைக் கற்றுத் தேர்ந்தவர்கள்; பெருமழை பெய்யும் பேரிருட் காலமாயினும் தம் தொழிலிற் பிறழாதவர்; வயக்களிறு பார்க்கும் வயப்புலி போலக் கள்வரைத் தொடர்ந்து கைப்பற்றுவர்.[1] இவ்வூர் காப்பாளரே யன்றி

---

1. "வயக்களிறு பார்க்கும் வயப்புலி போலத்
துஞ்சாக் கண்ணர் அஞ்சாக் கொள்கையர்
அறிந்தோர் புகழ்ந்த ஆண்மையர் செறிந்த
நூல்வழிப் பிழையா நுணங்குநுண் தேர்ச்சி
ஊர்காப் பாளர் ஊக்கருங் கணையினர்
தேர்வழங்கு தெருவின் நீர்திரண்டு ஒழுக
மழைஅமைந்து உற்ற அரைநாள் அமயமும்."

(மதுரைக் காஞ்சி : ௬௪௩ - ௯)

வையையின் கரை காப்பாளர் வையை யாற்றில் வெள்ளப் பெருக்கு ஏற்படுங்காலத்து அச்செய்தியை ஊருக்குப் பறையறைந்து தெரிவிப்பர்.

"ஆய்ந்(து)அளவா ஓசை அறையூஉப் பறையறையப்
போந்தது வையைப் புனல்." (பரிபா: க0 : எ-அ)

அன்றியும் வையையின் திரையாகிய சிறகு, கரையாகிய காவலை உடைக்கும் காலத்தில் அதனை அடைத்தற்கு ஆட்கள் வருக என்று கரைகாப்பாளர் பறையறையைச் செய்வர்.

"வையைத் திரைச்சிறையுடைத்தன்று கரைச்சிறை யறைகெனும்
உரைச்சிறைப் பறையெழ ஊரொலித் தன்று."
(பரிபா. சு: உஉ-ச)

பாண்டியநாட்டுத் தலைநகரத்தைப் பாதுகாத்தற் பொருட்டு நகரில் நால்வகைப் படைகளும் நிறுத்தப்பட்டிருந்தன. இவை நாள்தோறும் தெருவழியே சென்றன (மதுரைக், ௩அ௩-௬உ); அரசனுக்கென்று மெய்க்காவலர் படையொன்றும் இருந்ததெனத் தோன்றுகிறது. வள்ளிமணாளனை வணங்குதற்பொருட்டுப் பரங்குன்றத்திற்கு வழுதி செல்லுங்கால் அவனுடன் கடமைகளை நன்கறிந்த கண்போன்ற அமைச்சர்களும் நாடும், நகரும் சென்றதாகப் பரிபாடலால் அறிகிறோம். (க௬ : உஉ-எ) இவற்றால் நகரம் பாதுகாக்கப்பட்ட முறையை அறிதலோடு பாண்டியரின் படைப்பெருமையையும் அறிகிறோம்.

## ச. பாண்டியர் பெருமை

### 1. படைப்பெருமை

பாண்டியரது படைவீரத்தைச் சங்க இலக்கியங்கள் பலவும் பலபடப் பாராட்டுதலைக் கற்றோர் அறிவர்.

பரிபாடலிலும் வையையின் வெள்ளப்பெருக்குக்கு உவமையாகப் பலவிடங்களிலும் பாண்டியரது படைப்பெருக்குக் கூறப்பட்டுள்ளது. மாறரது படை மாற்றுரை வென்று ஒலிக்கும் முரசினை உடையது. நினைத்த நாட்டைக் கைப்பற்ற நிமிர்ந்து செல்லும் நீண்ட வரிசைகளையுடையது. போகும் இடம் அரியது என்று எண்ணாது, இருளை உடைய இரவும் பகலாகச் செல்லும்.

"இரவிருள் பகலாக இடமரிது செலவென்னாது
வலனிரங்கு முரசின் தென்னவர் உள்ளிய
நிலனுற நிமிர்தானை நெடுநிரை நிவப்பன்ன." (பரி. எ: ௫-எ)

பகை மன்னரைக் களத்தில் வென்று அவர் பொருள் எல்லாவற்றையும், குதிரைகளையும் பறிக்கும் ஆண்மையினை உடையது, பாண்டியர் படை.

"எல்லாம் கவரும் இயல்பிற்றாய்த் தென்னவன்
ஒன்னார் உடைபுலம் புக்கற்றால் மாறட்ட
தானையான் வையை வரவு." (பரி.எ-சஅ-௫0)

"உருகெழு தோற்றம் உரைக்குங்கால் நாளும்
பொருகளம் போலும் தகைத்தே பரிகவரும்
பாய்தேரான் வையை யகம்." (பரி. கக: ௫௯-௬க)

அறம் வேறு; அரசியல் வேறு. அறத்தின் அடிப்படையில் அரசு அமையவேண்டும் என்பது உலகம் ஒப்பும் உண்மையே யாயினும், அரசியலுக்கும் அறநெறிக்கும் வேறுபாடு உண்டு. ஒரு மனிதன் மற்றொருவனைக் கொல்லுதலை உலகம் ஒப்பாது. ஈது அறநெறி. பல மனிதர் வேறு பலரைப் போரில் கொல்லுதலை உலகம் ஒப்பும்; ஈது அரசியல். தனி மனிதன் மற்றொருவனைச் சண்டையிட்டுக் கொன்று அவனிடமுள்ள பொருளை எடுத்தலை அறநெறி ஏற்றலில்லை. போரில் வென்ற மன்னர் தோற்றவர்தம் பொருளைப் பறித்துக் கொள்ளுதலை அரசியல் ஏற்கிறது. அறத்திற்கும்

அரசியலுக்கும் உள்ள இம்மாறுபாடு வருந்தத்தக்கதெனினும் இருந்துவருகிறது. பரிபாடல் காட்டும் வழுதியர் படையும் இம் மாறுபாட்டைக் களைந்ததன்று.

## 2. கொடைப் பெருமை

பாண்டியர் பொருள் பறிக்கும் படைவன்மை மட்டுமே உடையரல்லர்; பொருளை வாரி வழங்கும் கொடைவன்மையும் நிறைந்தவர். இதனைப் பல புலவர்களும் ஏத்துதலைப் பிற நூல்களிலே காணலாம். பரிபாடலிலும் கொடைவன்மை பற்றிய செய்திகள் ஆங்காங்குக் காணப்படுகின்றன. படைவன்மையைப் போன்றே கொடைவன்மையும் உவமையாக எடுத்தாளப்பட்டிருக்கிறது.

வறுமையால் பீடிக்கப்பட்ட புலவர்களது ஏற்ற கைந்நிறையப் பொன்னைச் சொரியும் வழுதியைப் போலவே வையையும் வயலின்கண் பொன்னைப் பரப்புகிறது.

> "இலம்படு புலவர் ஏற்றகை ஞெமரப்
> பொலஞ்சொரி வழுதியின் புனலிறை பரப்பி."
>
> (பரி. ௰: ௧௨௬-௭)

வையையின்கரை, கைவண்மையுடைய பாண்டியனது ஈகை போன்றது.

"கரையே கைவண் தோன்றல் ஈகை போன்மென." (பரி. ௧௬: ௧)

இவ்வாறாக வையைப் பெருக்குக்குக் கூறப்படும் உவமைகள் மூலம் பாண்டியரது படைப்பெருமையையும், கொடைப்பெருமையையும் அறிகிறோம்.

இனி, பரிபாடலில் காணப்படும் பழக்க வழக்கங்களையும், நாகரிகத்தையும் காண்போம். சங்ககாலத் தமிழ் மக்கள் நயத்தக்க நாகரிகத்தில் நின்றனர் என்பது மெல்ல மெல்ல இக்காலத்தில் வெளிவருகிறது.

பழம்பெருந் தமிழினம் பண்டுதொட்டே அறிவு வன்மையிலும் அரசியல் நுட்பத்திலும் அருங்கலைப் பயிற்சியிலும் அயல்நாட்டு வாணிபத்திலும் உயர்வு பெற்றிருந்தனர் என்னும் உண்மை என்றோ உலகறிந்த செய்தியாயிருத்தல் வேண்டும். உடையிலும் அணியிலும் பல்வேறு வகையிலும் அவர்தம் நாகரிகச் சிறப்பு நனிவிளங்குகின்றது. பரிபாடல் காட்டும் முறையே அவற்றைக் காண்போம்.

### 3. உடை

அக்கால மக்கள் பருத்தியாலும் பட்டாலும் ஆடை நெய்யக் கற்றிருந்தனர். இவ்வாடைகள் அவ்வவற்றின் தன்மைக்கேற்பத் துகில், பூந்துகில், புட்டகம் (புடைவை), உடுக்கை முதலிய வெவ்வேறு பெயர்பெற்றன. துகில் வெண்மை நிறமுடையதாகவும், செந்நிறமுடையதாகவும் நெய்யப்பட்டது. அது பூ வேலைப்பாடுகள் உடையது. பூ வேலைப்பாடுடைய துகிலும் மலர் சுமந்து வரும் வையைப் பெருக்கும் தோற்றத்தால் ஒத்தன.[1]

நீராடிய மகளிர், பூத்தொழிலைத் தன்பால் உடைய வெண்மையான துகிலைக் கூந்தல்மேல் சுற்றி முறுக்குவர்.[2] நீராடுங்கால் அணிதற்கு என்றும், நீராடிய பின்னர் அணிதற்கென்றும் தனித்தனி ஆடைகள் உண்டு. அவை புட்டகம் (புடைவை) என்றழைக்கப்பட்டன. அவற்றுள் தம் தோற்றத்துக்குப் பொருந்தியவற்றைத் தெரிந்தெடுத்து மகளிர் உடுத்தினர்.[3] பனைக்கொடியோனாகிய

1. "துகில்சேர் மலர்போல் மணிநீர் நிறைந்தன்று." (பரிபா : கஉ-கங)

2. "மீப்பால் வெண்துகில் போர்க்குநர் பூப்பால்
வெண்துகில் சூழ்ப்பக் குழல் முறுக்குநர்"
(பரிபா: க0: எக-அ0)

3. "புட்டகம் பொருந்துவ புனைகுவோரும்" (கஉ: கஎ)

பலதேவனது ஆடை பற்றிக் குறிப்பிடுங்கால், அஃது எல்லாப் பொருள்களையும் மறைக்கும் இருளைப்போலும் நிறத்தையுடைய உடுக்கை என்று கீரந்தையார் என்னும் புலவர் சொல்கிறார்.[1] இனி அவ்வுடுக்கை பொன்னிறத்த தாகவும் இருந்தது. முகில்வண்ணன் தன் மேனியொடு மாறுகொள்ளும்படியாகப் பொன்னிற உடுக்கையை அணிந்தனன் என்று கூறப்படுகிறான்.[2]

## 4. அணி

அம் மக்கள் மலர்களால் செய்யப்பட்ட அணிகளே யன்றி, மணி, பொன், முத்து முதலியவற்றாலும் அணிகள் செய்து அணிந்தனர். ஆடவர்க்கும் மகளிர்க்கும் உரியன வாகப் பலவேறு அணிகள் பேசப்படுகின்றன.

மைந்தர் தம் விரலில் ஆழி மோதிரமும், புயத்தில் வாகுவலயமும் அணிந்தனர்.[3] மகளிர் தம் தலையில் தலைக் கோலம் என்னும் ஒருவகை யணி பூண்டனர். இது தொய் யகம் என்றும் அழைக்கப்பட்டது.[4] இத்தலைக்கோலத்தில் முத்துக்கள் கோக்கப்பட்டிருக்கும் ஆதலின் இதனை "மத் தக நித்திலம்" எனவும் கூறுவர்.[5] மகளிர் பல்வேறு கழுத்தணிகளை உடையவர்களாய் இருந்தனர். கொக்கு வாய் (கொக்கி) அழகு செய்த பல வடங்களையும்,[6] ஒத்த முத்துக்கள் சேர்ந்த வடங்களையும்;[7] ஆணி திரண்ட முத் துக்களால் ஆகிய வடங்களையும்,[8] பூண்டனர். தோளில்

1. "புதை இருள் உடுக்கைப் பொலம்பனைக் கொடியோற்கு." (பரி. உ: உஉ)
2. "மாஅ மெய்யொடு முரணிய உடுக்கையை." (பரி. ௩: அ)
3, 4. "கைவளை ஆழி தொய்யகம் புனை துகில்
மேகலை காஞ்சி வாகு வலயம்" (பரி. எ: ௪௬-எ)
5, 6. "முத்துநேர்பு புணர்காழ் மத்தக நித்திலம்."(பரி. கசு: ௫)
7 "கட்டிய கயிலணி காழ்கொள் வோரும்." (பரி. கஉ: கஅ)
8. "தொகுகதிர் முத்துத் தொடை" (பரி. ௬: கசு

தோள்வளையும் தொடியும் அணிந்தனர். தொடி தோளணியாகக் கூறப்படுதல் குறிப்பிடத்தக்கது. இன்பவுணர்ச்சி பெருகுதலால் தோள் பூரித்துத் தொடியை அழுந்தப் பண்ணியதாக ஒரு பாடல்[1] குறிப்பிடுகிறது. கையணியாகப் பலவகை வளையல்கள் கூறப்பட்டுள்ளன. மகளிரும் விரல்களில் மோதிரம் அணிந்தனர்.[2] இடுப்பில் துகிலின் புறத்தே எட்டு வடங்களையுடைய காஞ்சியையும், துகிலுக்குள் மேகலையையும் அணிந்தனர்.[3] இம்மேகலை தானும் இரண்டு முதலாக முப்பத்திரண்டு வடங்களைப் பெறும்.[4] காலில் சிலம்பு அணியப்பட்டது.[5] இச்சிலம்பு ஓடைப் பொன்னால் செய்யப்பட்டு முத்துக்களைப் பரல்களாகப் பெற்றிருந்தது.[6] இதன் காரணமாக "நித்தில வரிச் சிலம்பு" என்றும் இது பெயரடைந்தது.[7] (உஉ : சகூ) கால் விரல்களில் பூணப்படும் "கான் மோதிரம்" என்னும் அணியும் கூறப்பட்டுள்ளது.[8] இவ்வாறாக முடிமுதல் அடி வரை பல்வேறு அணிகள் பூண்டு அக்காலத்துத் தமிழர் அணிபெற விளங்கினர்.

## 5. தொழில்கள்

இனி, இவ்வணிகள் எல்லாம் கூறப்படுதலின் இவற்றைச் செய்யும் தொழில் அக்காலத்தில் சிறந்திருத்தல் வேண்டும் என்பது பெறப்படும்.

---

1. "தொடிதோள் செறிப்பத் தோள்வளை இயங்க" (பரி. கூ: கச)
2. 3. "கைவளை ஆழி தொய்யகம் புனைதுகில்
மேகலை காஞ்சி வாகு வலயம்" (பரி. எ: சகூ-எ)
4. "தாளித நொய்ந்நூல் சரணத்தர் மேகலை
ஏணிப் படுகால் இறுகிறுகத் தாளிஉஇ" (பரி. க0: க0-கக)
5. "கால சிலம்பு கழற்றுவான்" (பரி. உ0 : அ0)
6. "சுடுபொன் ஞெகிழத்து முத்தரி சென்றார்ப்ப" ( ,, உக : கஅ)
7. "நீடாழ்பு தோக்கை நித்தில வரிச்சிலம்பு" ( ,, உஉ : சகூ)
8. "கட்டுவடக் கழலினர்" ( ,, கஉ : உச)

இவையன்றி நீராடுங் காலத்துப் பலவகை விளையாட்டுக் கருவிகளைப் பயன்படுத்தியதாக அறிகிறோம். ஆகலின் கொம்பு, சிவிறி, துருத்தி, வட்டு முதலாய நீர்வீசு கருவிகளை[1] உருவாக்கும் தொழிலும் தழைத்திருத்தல் வேண்டும்.

சந்தனம் போன்ற கலவைப் பொருள்களை ஆக்கும் தொழிலும் பெருகியிருந்தது. மகளிர் தாமே இத்தொழிலில் வல்லவராயிருந்தனர். இவற்றை ஆக்கும் முறைகளைக் கூறும் நூல்கள் இருந்திருத்தல்கூடும் என்பது,[2] கீழ் வருகின்ற அடியால் புலனாகும். சேறாகச் செய்த அகிற் சாந்தும் பலவகையான கருப்பூரமும் தமக்குள் நன்றாய்க் கலக்குமாறு சாந்தம்மியில் குற்றமற்ற குழவியால் மகளிர் அரைப்பர். அரைக்கப்பட்ட குழம்பு யாககுண்டத்து அழல்போன்று சிவந்த நிறம் பெற்றதாய் இருக்கும்.[3]

கிடை[4]யால் விளையாட்டுக் கருவிகள் செய்யும் தொழிலும் உரம் பெற்றிருத்தல்வேண்டும். கிடையால் செய்த தெப்பம் (மிதவை), தேர்,[5] வாள், குந்தம்[6] முதலியவை நீராடுங்கால் எடுத்துச் செல்லப்பட்டன.

---

1. "கண்ணாரும் சாயல் கழித்துரப் போரை
வண்ணநீர் கரந்த வட்டுவிட்டு எறிவோரும்
மணம்வரு மாலையின் வட்டிப் போரைத்
துணிபிணர் மருப்பின் நீர்எக்கு வோரும்" (பரி. கக : ௫௪-எ)
2. "விதியாற்றான் ஆக்கிய மெய்க்கலவை போல." (பரி. எ-௨0)
3. "செங்குங்குமச் செழுஞ் சேறு
பங்கம் செய்அகில் பலபளிதம்
மறுகுபட அறை புரைஅறு குழவியின்
அவிஅமர் அழலென அரைக்குநர்" (பரி. க0 : அக-௪)
4. நெட்டி : Cork.
5. "வெண்கிடை மிதவையர் நன்கிடைத் தேரினர்"
(பரி. ௬ : ௫)
6. "ஆற்றணி, வெள்வாள் விதிர்ப்போர் மிளிர்குந்தம்
ஏந்துவோர்" (பரி. கக : ௫0)

கடல் வாணிபம்பற்றிய குறிப்புக்கள் காணப்படுதலின் கப்பல் கட்டும் தொழிலும் நடைபெற்றிருத்தல் கூடும் என்னலாம். கப்பல் ஓட்டும் தொழிலில் வல்ல மாலுமி களும் அக்காலத்தில் இருந்தனர். பாயும், கயிறும், மரக் கூட்டமும் விலகச் சிதைந்து கொண்டிருக்கும் மரக்கலத் தையும் பயின் என்னும் கருவியால் திருத்தி, கலத்தில் உள்ளவர் கலக்கத்தைக் களையும் ஆற்றல் உடையவர்களாக மாலுமிகள் விளங்கினர்.[1]

## 6. கடல் வாணிபம்

இனிக் கடல் வாணிபமும் அக்காலத்தில் ஓங்கியிருந்த தாக அறிகிறோம். புறப்பொருள்பற்றிய ஏனைச் சங்க இலக்கியங்களில் இதுபற்றிய செய்திகளைப் பரக்கக் காண் கிறோம். அகப்பொருள் முதலிய நூல்களிலும் ஆங்காங்கே சில காணப்படுகின்றன. ஆயின் பரிபாடலில் இவ்வாணிபம் பற்றிய குறிப்புக்கள் அதிகம் இல. ஒரோவழி உவமை வடிவில் கடல் வாணிபம் குறித்த செய்திகளை அறிகிறோம்.

தாம் நினைத்த பட்டினத்தைச் சேர்ந்து, ஏற்றிவிட்ட பண்டங்களைக் கொடுத்து, அங்குள்ள பொருள்களை எடுத் துக்கொண்டு, இடையூறில்லாமல் வந்து கரையைச் சேரும் நாவாயின் வரவை விரும்பி வணிகர் எதிர்கொள்ளுதல் உண்டு.[2] இதுகொண்டு அக்காலத்தில் கடல் வாணிபம் சிறப்புற்றிருந்தது என்று துணிதல் கூடும்.

---

1. "இதையும் கயிறும் பிணையும் இரியச்
சிதையும் கலத்தைப் பயினால் திருத்தும்
திசையறி மீகானும் போன்ம்" (பரி. ௧0: ௫௩-௫)

2. "தடையிறந்து, தாம்வேண்டும் பட்டினம் எய்திக் கரைசேரும்
ஏமுறு நாவாய் வரவெதிர் கொள்வார்போல்"
(பரி. ௧0: ௩௭-௮)

## 7. போர்முறை

பரிபாடல் புறப்பொருள் நுதலி வாராதாகலின் போர் நிகழும் முறை விரித்துக் கூறப்படுமாறு இல்லை. பிற புறப் பொருள் இலக்கியங்களில் காணப்படும் முறையே போர் நிகழ்ந்திருத்தல் வேண்டும். எனினும் போர்க்காலத்தில் இயல்பாக நேரும் சிக்கலான சூழ்நிலையொன்று பரிபாட லில் உவமையாக எடுத்தாளப்பட்டுள்ளது. அந்நிலையின் சிறப்புக்கருதி அதனைத் தனித் தலைப்பின்கீழ்க் காண வேண்டியவர் ஆகிறோம்.

பொருகளத்தில் எல்லாரும் வெல்லுதல் என்பது இயலாது. பலர் வீரமுடன் போரிடுதல் கூடும். அவ்வாறு பொருங் காலத்தும் வெற்றி ஒரு தரப்பினர்க்கே யாதலும் இல்லை. ஒருவருக்கும் கிட்டாமலும் போதல் கூடும். இருதரப்பாரும் போரிட்டு நொந்து சமாதானத்தை விழையுமாறு நேரிடலாம். அப்பொழுது இன்னாது படை இன்னாது படை முன்னுக உடம்பட்டது என்னும் சொல் பிறக்கும் என்றஞ்சிப், பின்னும் வருந்தி நிற்றலும் உண்டு. இத்தகைய ஒருநிலை ஏற்படுதலும் இயற்கையே.[1]

## 8. நுண்கலைகள்

தமிழகம் பண்டுதொட்டே பல்வேறு கலைகளின் தாயகமாக விளங்கி வந்திருக்கிறது. குறிப்பாக இசையும் நாடகமும் தமிழ்நாட்டில் மிகப் பழங்காலம் முதலே தழைத்து வந்திருக்கின்றன. முத்தமிழ் என்ற பகுப்பு எக்

---

1. "தண்டம் இரண்டும் தலைஇத் தாக்கி நின்றவை
ஒன்றியும் உடம்பாடு ஒலிஎழுதற் கஞ்சி
நின்ற நிகழ்ச்சி..." (பரி. ௧0: ௬0-௨)

காலத்தில் ஏற்பட்டது என்றே கூறுதல் இயலாது. இசையும் நாடகமும் பற்றிய எழில் நூல்கள் பல இருந்திருத்தல் வேண்டும் என்பதற்குப் பல ஆதாரங்கள் உண்டு. அப் பெருநூல்கள் அழிந்தும் அழிக்கப்பட்டும் போயின என்பதற்கும் சான்றுகள் நிறைய உள. சங்ககாலத்தை ஒட்டிய பிற்காலத்தில் தமிழ்நாடு போந்த சமணமுனிவர்கள் இசையும் நாடகமும் இன்பக் கிளர்ச்சியைத் தூண்டுவன என்று கொண்டு அவற்றை ஒதுக்கித் தள்ளினர். அதன் காரணமாக வளர்ந்துவந்த அக்கலைகள் வாழ்விழந்தன; வாழ்ந்த பல நூல்கள் வழக்கொழிந்தன; நாயன்மாரும் ஆழ்வாரும் தோன்றிய பிறகே இக்கலைகள் ஏற்றம் பெற்றன; இவ்வாறு ஒரு காலத்தில் வாழ்ந்து, இடையிலே வீழ்ந்து, மீண்டும் எழுந்தன — இசையும் நாடகமும். கடைச்சங்ககால நூலாகிய பரிபாடலில் இசையும் கூத்தும் பல்கிக் கிளைத்திருந்த நிலையையே காண்கிறோம்.

## 9. இசை

அக்கால மக்கள் இசைக்கலையில் தேர்ச்சி பெற்றிருந்ததோடு அதனை வாழ்க்கையில் பல செயல்களை நிறைவேற்றவும் பயன்படுத்தினர். யாழ், குழல், முழவு, மத்தரி, தடாரி, தண்ணுமை, மகுளி, துடி, கிணை முதலிய இசைக் கருவிகள் குறிப்பிடப்பட்டுள்ளன. குழல் வங்கியம் எனவும் அழைக்கப்பட்டது. ஏழு துளைகளையுடைய வங்கியமும், ஐந்து துளைகளையுடைய வங்கியமும் இருந்தன. இவற்றுள் முன்னதன் இசைச் சுருதியைப் போன்று தும்பியும், பின்னதனைப் போன்று வண்டும் ஆர்த்தன. மிஞிறு ஒலித்தல், யாழிசை போன்றதாகும்.[1]

1. "எழ்புழை ஐம்புழை யாழிசைகேழ்த் தன்னஇனம்
வீழ்தும்பி வண்டொடு மிஞிறு ஆர்ப்ப"

(பரிபா. அ: உஉ-௩)

தலைவன் தன் ஏவல் இளையரொடும் தலைவியொடும் பரங்குன்றம் சென்று முருகனை வழிபடுவான். அக்காலத்து அவர் எல்லோரும் பாடுதலும் கிணையொலி எழுப்புதலும் உண்டு.[1] குன்றின் ஒரு பக்கம் பாணர்களுடைய யாழோசை எழ, அதற்கெதிராக வண்டின் இன்னிசை எழும்; ஒரு பக்கம் குழலின் ஒலிதோன்ற, அதற்கெதிராகத் தும்பி முரலும்; ஒரு பக்கம் முழவு முழங்க, அதற்கெதிராக அருவிநீர் ஒலிக்கும்; ஓரிடத்தில் பாடும் மகளது பாலைப்பண் ஒலிக்க, அதற்கெதிராக ஆடும் மயிலின் அரித்தெழும் குரல் எழும்;[2] இவ்வாறு அக்குன்றில் எப்பொழுதும் இசையொலி நிறைந்திருக்கும்.[3] இனிப், பகல் எல்லாம் வையைப் புனலாடிய மக்கள் மாலைக்காலத்துக்கேற்ற அணிகளை அணிந்து பாடிக்கொண்டே மீள்வர். மேலும் மனத்திண்மையை அழித்து ஊடலை ஒழித்தற்கும் யாழிசை பயன்பட்டது.

---

1. "புரிநரம் பின்கொளைப் புணர்பாலை எழும்
எழுப்புணர் யாழும் இசையும் கூட" (பரி. எ: எஎ-அ)
"கேட்டுதும் பாணி எழுதும் கிணை" (பரி. அ: அக)

2. "ஒருதிறம், பாணர் யாழின் தீங்குரல்எழ
ஒருதிறம், யாணர் வண்டி னிமிரிசைஎழ
ஒருதிறம், கண்ணார் குழலின் கரைபெழ
ஒருதிறம், பண்ணார் தும்பி பரந்திசை ஊத
ஒருதிறம், மண்ணார் முழவின் இசையெழ
ஒருதிறம், அண்ணல் நெடுவரை அருவிநீர் ததும்ப
ஒருதிறம், பாடல்நல் விறலியர் ஒல்குபு நுடங்க
ஒருதிறம், வாடை உளர்வயின் பூங்கொடி நுடங்க
ஒருதிறம், பாடினி முரலும் பாலையங் குரலின்
நீடுகிளர் கிழமை நிறைகுறை தோன்ற,
ஒருதிறம், ஆடுசீர் மஞ்ஞை அரிகுரல் தோன்ற,
மாறுமாறு உற்றனபோல்......" (பரி. கஎ: க-உ0)

3. "பாடுவார் பாணிச்சீரும் ஆடுவார் அரங்கத் தாளமும்"
(பரி. அ: க0க)

இவ்வாறாக அக்கால மக்கள் இயற்கையில் இசை கேட்டனர்; இசையறிவு மிகப் படைத்திருந்தனர்; வழிபாட்டிற்கும், வழிச்செலவு தோற்றுதிருத்தற்கும், காம நுகர்ச்சி முதலாய வாழ்க்கைத் துறை பலவற்றுக்கும் இசையைப் பயன்படுத்தினர்.

## 10. கூத்து

கூத்தென்பது நாட்டியத்தையும் நாடகத்தையும் உணர்த்தும். நாட்டியத்தினின்றே நாடகம் வளர்ச்சிபெற்றிருத்தல் வேண்டும் என்பர். பழங்காலத்தில் கூத்தென்பது நாட்டியம் ஒன்றினையே குறித்தது என்பாரும் உளர். இக்கூத்தின் பலவகைகள் ஏனைச் சங்க நூல்களிலும் சிலப்பதிகாரத்துள்ளும் கூறப்படுதல் போலப் பரிபாடலில் கூறப்படவில்லையேனும் சிற்சில இடங்களில் சில குறிப்புக்கள் காணப்படுகின்றன.

ஆய்ச்சியரோடு திருமால் ஆடலும் ஒன்றாகக் குரவைக் கூத்துக் கூறப்பட்டுள்ளது. இன்னும் அவனுடைய குடக் கூத்தும் பரிபாடலில் இடம் பெற்றுள்ளது.

"இடவல குடவல கோவல காவல" (பரி. ௩: அ௩)

இன்னும் தலைக்கோல் மகளிரும் பாணரும் ஆடும் முறை விரிவாகச் சொல்லப்பட்டுள்ளது; யாழிசையும் மிடற்றுப் பாடலும் தம்முள் ஒத்தொலித்தன; குழலும் அவற்றின் சுருதியோடு இயைந்து நின்றது; முழவு எழுந்தார்த்தது; அவ்விசைப்பாணிக் கேற்பத் தலைக்கோல் மகளிரும் பாணரும் ஆடல் தொடங்கினர்.

"குழல்அளந்து நிற்ப முழவெழுந் தார்ப்ப
மன்மகளிர் சென்னியர் ஆடல் தொடங்க"

(பரி. எ : எ௯-அ0)

இனி, மகளிர் தனித்தனியே ஆடுதலேயன்றிப் பலர் சேர்ந்து ஆடுதலும் உண்டு. பொருந்திய குழலின் இசை

எழ, முழவு, மத்தரி, தடாரி, தண்ணுமை, மகுளி ஆகிய வற்றின் ஓசையை உடைய தாளத்தை அளந்து மகளிர் பலர், அழகுதக நாட்டியத்தில் ஒக்கத் திகழ்வர்; அவ்வொப்பு வியக்கத் தக்கதாகும்; அவர்கள் கைத்தாளத்தைத் தூக்கி அளப்பதுபோலத் தாளத்திற்கேற்ப அசையும்.

"ஒத்த குழலின் ஒலிஎழ முழவுஇமிழ்
மத்தரி தடாரி தண்ணுமை மகுளி
ஒத்தளந்து சீர்தூக்கி ஒருவர் பிற்படார்
நித்தம் திகழும் நேரிறை முன்கையால்
அத்தக அரிவையர் அளத்தல் காண்மின்."

(பரி. அஉ : சO-ச)

இவ்வாருகப் பலவகைக் கூத்துக்களையும் பரக்க நாம் காணவிடினும் மேற்குறித்த செய்திகளைக்கொண்டு கூத்து மேலான நிலையில் பயின்றிருந்ததை உணரலாம்.

## 11. ஓவியம்

இனி, அக்கால மக்கள் ஓவியக்கலையிலும் வித்தகராய் இருந்தனர். பரங்குன்றில் ஓர் ஓவியச்சாலை இருந்ததென்று கூறப்பட்டுள்ளது. அஃது "எழுதெழில் அம்பலம்" (பரி. கஅ:உஅ) என்றும் பெயர்பெற்றது. அவ்வம்பலம் ஓவியங்கள் தீட்டப்பட்ட பல மண்டபங்களைத் தன்னகத்தே கொண்டது. அம் மண்டபங்கள் செவ்விய மூங்கில்களையும் விரிந்த பாறைகளையும் உடைய அகன்ற இடத்துக் கட்டப்பட்டிருந்தன.[1] அழகொழுகும் அவ்வம்

---

1. "இன்ன பலபல எழுத்துநிலை மண்டபம்
துன்னுநர் சுட்டவும் சுட்டறிவு உறுத்தவும்
நேர்வரை விரியறை வியலிடத் திழைக்கச்
சோபன நிலையது துணிபரங் குன்றத்து
மாஅல்மருகன் மாட மருங்கு" (பரி. கக : ருந-எ)

பலம் காமவேளின் ஆயுதசாலையைப் போன்றதாகும்.[1] அங்குக் கோள்களது நிலையை விளக்குவதும், இரதி காமன் உருவுடையனவும், அகலிகை கதையை விளக்குவனவும் பிறவுமாகிய பல ஓவியங்கள் எழுதப்பட்டிருந்தன. முருகவேளை வழிபடச் செல்பவர்கள் இவ்வோவியங்களையும் கண்டு மகிழ்ந்தனர்.

## 12. பண்டைப் பழக்க வழக்கங்களில் சில

பார்ப்பனருக்குச் சமுதாயத்தில் உயர்வு கொடுக்கும் பழக்கம் பரிபாடல் காலத்திலேயே வந்துவிட்டது. பார்ப்பார் மீது ஆணையிட்டுக் கூறுதல் அந்நாளில் வழக்கமாயிற்று.[2] தைந்நீராடும் வழக்கமும் கன்னிப்பெண்களிடை இருந்தது. இதனை அம்பாவாடல் என்றும் கூறினர்.[3] இளஞ்சிறுவர் ஏடுபிடித்து எழுதிக் கற்றனர்.[4] ஆடவர் களிற்றின் மீதும், பெண்டிர் பிடியின்மீதும் ஏறி வையைப் புனலாடச் சென்றனர்.[5] இருந்தோம்பி இல்வாழ்வார் விருந்தயர்ந்ததோடன்றி, முன்னர்த் தமக்கு விருந்து அளித்தவர்க்கு எதிர் விருந்தளித்தலும் உண்டு என்பது வையைக் கரைபற்றிய கூற்றொன்றால் விளங்குகிறது.[6]

---

1. "எழுதெழில் அம்பலம் காமவேள் அம்பின்
தொழில் வீற்றிருந்த நகர்" (பரி. கஅ: உஅ-கூ)

2. "பனிபொழி சாரலும் பார்ப்பாரும்" (பரி. அ: ६உ)

3. "அம்பா வாடலின் ஆய்தொடிக் கன்னியர்
முனித்துறை முதல்வியர் முறைமை காட்டப்
பனிப்புலர்பு ஆடி" (பரி. கக: அக-ஙு)

4. "மையாடல் ஆடல் மழபுலவர் மாறெழுந்து (பரி. கக: அஅ)

5. "பிடிமேல் அன்னப் பெரும்படை அனையோர்
கடுமா கடவுவோரும் களிறுமேல் கொள்வோரும்"
(பரி. கஉ: உஎ-அ)

6. "கரைபொழுகு தீம்புனற் கெதிர்விருந் தயர்வபோல்"
(பரி. கசு: கசு)

வங்கம், பாண்டி முதலிய பலவகை ஊர்திகள் வழக்கிலிருந்தன,[1] மக்கள் விஞ்ஞான அறிவும் மிகப் படைத்திருந்தனர். மாறிமாறி வீசும் காற்றினால் அணையாத விளக்கு ஒன்றை அவர்கள் பயன்படுத்தினர்.[2]

## ரு. முடிபுரை

இதுகாறும் மதுரை அமைப்பையும் ஆட்சிமுறையையும் ஆண்ட பாண்டியரின் படைப்பெருமை கொடைப்பெருமைகளையும் அக்கால மக்களின் நடையுடை பாவனைகளையும் நாகரிகத்தையும் இயன்ற அளவு கண்டோம். மதுரையைப்பற்றிய பரிபாடல்கள் நான்கிருந்தன என்று கூறப்படுகிறதேனும் ஒன்றேனும் முழுமையும் கிட்டிற்றிலது. பிறபாடல்களில் காணப்படும் சிறுசிறு குறிப்புக்களைத் திரட்டுவதின் மூலம் கிடைக்கும் செய்தி சிறியதாகத்தான் இருக்கிறது; இருத்தல் கூடும். ஆயினும் சிறப்பு வாய்ந்தது. பரிபாடல் காட்டும் அக்கால மதுரையைக் கண்ட நாம், அதனை இக்கால மதுரையோடு ஒப்பிட்டுப் பார்த்தல் வேண்டும். இருவேறு காலத்திலும் வாழ்ந்த மக்களின் நாகரிகச் சிறப்புக்களையும் சீர்தூக்கிப் பார்த்தால் தான் இடைக்காலத்தில் ஏற்பட்ட சீரழிவு புலனாகும். மலருடை புனைந்த வெள்ளப்பெருக்கு ஓடிய வையை, இன்று மணலாறாக மாறியதைப்போலவே தமிழரும் பழம் பெரும் பண்பிழந்து, எல்லாத் துறைகளிலும் பிறநாட்டு அடிமைகளாய் வாழ்கின்றனர். இதுபோன்ற இலக்கிய மாநாடுகள், தமிழினத்தின் பழம்பெருமையை நமக்குக்

1. "திண்தேர்ப் புரவி வங்கம் பூட்டவும்
வங்கப் பாண்டியின் திண்டேர் ஊறவும்"
(பரி. உ0: கசு-எ)

2. "சல் வளி யின் அவியா விளக்கமும்" (பரி. அ: கஅ)

கற்பிக்கும் பள்ளிக்கூடங்களாகும். பயனுள்ள இப்பாடம் படிக்கும் நாம், பண்டைக்காலச் சிறப்பைத் தமிழனை மீண்டும் பெறுதற்குப் பணியாற்றுதல்வேண்டும்; அல்லது பணியாற்றும் எண்ணம் உடையவராகவேனும் ஆதல் வேண்டும்; அதுவும் இன்றேல் பணியாற்றுகின்றவர்களை யேனும் பழியாதிருக்கக் கற்றல் வேண்டும்; இத்தகைய மாநாடுகளின் பண்பும் பயனும் இவையாக இருந்தால் தமிழர் உயர்வர், தமிழ் உயரும், தமிழ்நாடு உயரும் என்று கூறி என் உரையை முடித்துக்கொள்கிறேன்.





